உச்சநீதி மன்றத்தில் மேல் முறையீடு...

உயர்நீதிமன்றத் தீர்ப்பு



1998 நவம்பர் 15
வெகுதான்ய ஐப்பசி 29
மலர் : 57
இதழ் : 16

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## ஜெயிக்காத லலிதா!

ஒன்றல்ல, இரண்டல்ல... நாற்பத்தாறு வழக்குகள்!... ஜெயலலிதாவுக்கு எதிராக சிறப்பு நீதிமன்றத்தில் பதிவாகியிருக்கின்றன. எல்லாமே அரசியல் உள்நோக்கம் கொண்டவை என்றும், சிறப்பு நீதிமன்றமே செல்லுபடியாகாது என்றும் ஓர் அதிரடி அப்பீல் செய்த ஜெயலலிதா, உயர் நீதிமன்றத்தில் தோற்றிருக்கிறார். தோற்ற மறுகணமே உச்சநீதி மன்றத்துக்கு மனு செய்திருக்கிறார். நீதி விசாரணையைத் தாமதப்படுத்தவே இந்த முறையீடுகள் என்பது தெளிவாகத் தெரிகிறது.

678 பக்க உயர்நீதி மன்றத் தீர்ப்பு சம்மட்டியடிதான். ஆனால், ஜெயலலிதா நீதியின் பாதையில் முட்டுக்கட்டைகள் போட்டு வழக்குகளைத் தாமதப் படுத்த முயற்சி செய்வதைக் கடுமையாக அத்தீர்ப்பு கண்டித்திருக்கிறதா என்பது தெரியவில்லை. அப்படிக் கண்டித்திருந்தால், அது நாளிதழ்களில் இடம் பெறவில்லை.

இந்த அம்சத்துக்கு முக்கியத்துவம் தரப்பட்டிருந்தால், ஜெயலலிதா நீதி




விசாரணையைக் கண்டு பயந்து ஓடுகிறார் என்பதைப் பாமர மக்களும் புரிந்து கொண்டிருப்பார்கள்.

'மனுதாரர் தமது செய்கைகளை நியாயப்படுத்த முயற்சி செய்வதுடன் தாம் சிக்கியுள்ள இக்கட்டிலிருந்து தப்பிக்கவும் முயற்சி செய்கிறார்' என்று ஜெயலலிதாவின் நிலையைச் சுட்டிக்காட்டும் தீர்ப்பு, ஏற்கெனவே ஒரு வழக்கில் அவருக்கு ஜாமீன் மறுக்கப்பட்டதையும் அடிக்கோடிட்டிருக்கிறது.

தீர்ப்பின் குறிப்பிடத்தக்க பகுதிகள்:

● உயர் பதவி வகிப்போரும் பொது வாழ்வில் ஈடுபடுவோரும் பொதுச் சொத்துக் கையாடல் குற்றத்துக்காக ஊழல் தடைச் சட்டத்தின் கீழ் குற்றம் சாட்டப் பெறும்போது, குற்றங்களை ஆதாரத்துடன் நிரூபிக்கும் கடமை அரசுத் தரப்பு வக்கீலுக்கு உண்டு. அதே போல், நீதி விசாரணையை நேருக்கு நேர் சந்திக்கும் கடமையும் குற்றம் சாட்டப்பெற்ற நபருக்கு இருக்கிறது.

● 'அரசியல் காழ்ப்புணர்ச்சியால் எடுத்த நடவடிக்கைதான் சிறப்பு நீதி மன்றங்கள்' என்பது ஏற்கமுடியாத வாதம்.

● பொது வாழ்வில் பெரும்புள்ளிகள் என்பதால் மனுதாரருக்கும் அவரைச் சார்ந்தவர்களுக்கும் செய்திச் சாதனங்கள் முக்கியத்துவம் கொடுப்பது தவிர்க்க முடியாதது. எனவே, மனுதாரருக்கு அவப் பெயர் ஏற்படுத்துவதற்காக அரசு வன்மத்துடன் செயல்படுகிறது என்கிற வாதமும் ஏற்கத்தக்கதல்ல.

● சட்ட மன்றமும் பாராளுமன்றமும் வாக்காளப் பெருமக்களின் பிரதி




நிதித்துவ அமைப்புகள். இவை மக்களின் தேவைகளறிந்து அவர்களின் நலனுக்காக இயங்குவன. இவ்வமைப்புகளின் முக்கியமான முடிவுகளைக் குறித்துக் கேள்வியெழுப்பவோ, இவற்றின் நடவடிக்கைகளை எடைபோட்டுத் தீர்ப்புக் கூறவோ நீதித் துறைக்கு அதிகாரமில்லை.

● எனவே சட்டமன்ற நடவடிக்கையாகச் சிறப்பு நீதிமன்றம் நிறுவப்படுவது சரியே. நீதிபதிகள் நியமனமும் நியாயமானதே. அதில் தலையிடுவதென்பது மக்களின் விருப்பத்தில் தலையிட்டு, ஜனநாயகத்துக்கு ஊறு விளைவிப்பதாகும்.

— இவ்வளவு கடுமையான தீர்ப்புக்குப் பிறகும் உச்ச நீதிமன்றத்தில் மனு செய்திருக்கும் ஜெயலலிதாவின் 'நம்பிக்கை' நம்மை வியப்பிலாழ்த்துகிறது.

இருந்தபோதிலும் ஜெவின் மேல் முறையீட்டை ஏற்றுக் கொள்வதா வேண்டாமா என்பது பற்றி வருகிற 23-ம் தேதியன்று உச்ச நீதிமன்றம் முடிவெடுக்கும் என்றும் அதுவரை ஜெ. வழக்குகள் பற்றிய விசாரணையைத்தான் தனி நீதிமன்றம் செய்யக் கூடாதென்றும் அது பற்றிய ஆரம்ப கட்ட வேலைகளைத் தொடரலாமென்றும் உச்ச நீதிமன்றம் கூறியிருப்பது ஆறுதல் அளிக்கிறது. இதுவே உயர் நீதிமன்றத் தீர்ப்புக்கு வலு சேர்ப்பதாகவும் உள்ளது.

ஊழல் பேர்வழிகளான அரசியல் தலைவர்கள், சட்டத்தின் ஓட்டைகளில் புகுந்து தப்பிக்க முயற்சி செய்வதையும், வழக்குகளைத் தாமதப்படுத்த முட்டுக்கட்டைகள் போடுவதையும் அந்த இறுதித் தீர்ப்பு கடுமையாகக் கண்டிக்கவும் வேண்டும். ●

கிரகங்களைப் பற்றி ஆராயும் வானியல் விஞ்ஞானிகளுக்கு, எப்போதுமே ஒரு கவர்ச்சிக் கன்னி மேல் கடைக்கண் கவனம் உண்டு. 'கன்னி'யின் பெயர் டைட்டன். சனி கிரகத்தின் துணைக் கோள்களுள் ஒன்று இது.

கண்டி இழுக்கும் அற்புதமான ஆரஞ்சு வண்ணத்துடன் சமர்த்தாகச் சுற்றி வரும் இந்தத் துணைக் கோளின் குறுக்களவு சுமார் 5,150 கி.மீ. நீரின் அடர்த்தியைப் போல் 1.88 மடங்கு கூடுதல் அடர்த்தி கொண்ட இந்தத் துணைக் கோள், தன் தாய்க் கோளான சனியிலிருந்து சுமார் 1,222,000 கி.மீ. தொலைவில் வலம் வந்து கொண்டிருக்கிறது.

டைட்டன் ஒருமுறை தன்னைத்தானே சுற்றிக் கொள்ள (நம் கணக்கில்) 16 நாட்கள் ஆகும். அதாவது டைட்டனில் ஒரு நாள் என்பது நமக்குப் பாதி மாசத்துக்கு மேல்! இந்தக் கோளின் வெப்பநிலை 91° கெல்வின்.

பதினாறாம் நூற்றாண்டிலேயே இப்படி ஒரு கோள் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டு விட்டாலும் 1980ல் விண்ணுக்குச் செலுத்தப்பட்ட 'வாயேஜர்' கலம் மூலம்தான் இத்துணைக் கோளைப் பற்றிய மேற் சொன்ன விவரங்கள் தெரியவந்தன. இதன் அடிப்படையில் டைட்டனைப் பற்றி ஆய்வு செய்ய ஆரம்பித்தார்கள் நமது விஞ்ஞானிகள்.

ஆய்வில் தெரியவந்த முக்கிய விவரம், டைட்டனில் ஹைட்ரஜன் மற்றும் மீதேன் வாயு அதிகமாக உள்ளது என்பது.

சும்மா விடுவார்களா? டைட்டனைத் தேடிச் சென்று குசலம் விசாரிக்க ஓர் இரட்டை விண் கலம் (கஸினி - ஹ்யூஜென்ஸ்) அனுப்பப்பட்டது, 1997ல்.

கஸினியுடன் இணைந்து ஏறத்தாழ இரண்டு பில்லியன் மைல்கள் பயணம் செய்து, 2004ம் வருடம் நவம்பரில் ஹ்யூஜென்ஸ் தனது இலக்கான டைட்டனை நெருங்கும்.

முதலில் விநாடிக்கு 6 கி.மீ. வேகத்தில் டைடனை நோக்கி இறங்கும். அடுத்து, 21 நாட்கள் அந்தரத்தில் செயலற்று நிற்கும். இக்கலம் டைட்டனின் 'தரை'யிலிருந்து 170 கி.மீ. உயரத்தை எட்டியதும் விநாடிக்கு 500 மீட்டர் வேகத்தில் இறங்கி, தன் மேற்புறக் கவசத்தை உதறும்!

உடனே, டைட்டன் கிரகம் பற்றிய ஆய்வு தொடங்கும்!


• டைட்டன் தரையில் 'ஹியூஜென்ஸ்'

இதில் பொருத்தப் பட்டுள்ள ஆய்வு உபகரணங் களின் உதவியுடன் பெறப் படும் தகவல்கள், உடனுக் குடன் இரண்டு சூப்பர் கம்ப்யூட்டர்களில் பதிவாகி, தாய்க்கலமான கஸினிக்கு அனுப்பிவைக்கப்படும்.

இந்த ஆய்வுக் கலத்தில் பொருத்தப்பட்டுள்ள சக்தி

டைட்டனில் தரையிறங்கும் 'ஹியூஜென்ஸ்'

# 'கனவுக் கன்னி'யை நோக்கி ஒரு கலம்!

மிகு கேமராக்கள், டைட்டன் தரைப் பகுதி முழுவதையும் படம் பிடிப்பதோடு மட்டுமல்லாமல், அங்குள்ள ஏற்ற இறக்கங்கள், இட்டுக்களையும் படமாக்கும்!

இந்த ஆய்வுக் கலத்தின் அற்புதம், இதன் அடிப்பாகம். டைட்டன் கிரகத்தின் தரைப் பரப்பு எப்படிப்பட்டதோ, யார் கண்டது?

அங்கே சதுப்பு நிலமாகவோ, நீர்ப் பரப்பாகவோ, மீதேன் திரவக் கடலாகவோ – எப்படியும் இருக்கலாம்!

எனவே, எந்தவிதமான நிலப்பரப்பாயினும் சமாளித்து இறங்கி நிற்கும் விதமான அடிப்பாகம் கொண்டது இந்த ஆய்வுக் கலம்!

இன்னும் ஆறே வருடங்களில் விஞ்ஞானிகளின் 'கனவு கிரகமான' டைட்டனைப் பற்றிய முழு விவரங்களும் கிடைத்து விடப் போகிறது:

21 ம் நூற்றாண்டின் முதல் விண்வெளி சாதனையாக அது அமையும் என்று எதிர்பார்க்கிறார்கள். ○

— சர்வசித்தன்



# பழைய சோகம்; கொஞ்சம்

திருமணம் செய்து கொண்ட கையோடு ஊட்டிக்கு ஒரு வாரம் தேனிலவு சென்று திரும்பியிருந்தார் சந்திரசேகர். பிரபல டேபிள் டென்னிஸ் விளையாட்டு வீரர். மூன்றுமுறை தேசிய அளவிலும், இருமுறை தெற்காசிய விளை யாட்டுகளிலும் முதலிடம் பெற்று, 'அர் ஜுனா' விருதையும் பெற்றவர். வேறொரு விதத்திலும் அவருக்கு முதல் இடம் கிடைத்தது கசப்பான சரித்திரம்.

1985ல் அர்ஜுனா விருது பெற்ற இரண்டே மாதங்களில் வலது முட்டியில் உள்ள குருத்தெலும்பில் ஏற்பட்ட லேசான வலிக்காக மருத்துவமனைக்குச் சென்றார் சந் திரசேகர். அதற்கான அறுவைச் சிகிச்சையை மேற்கொள்ள. ("சொல்லப் போனால் அது ஆபரேஷனே அல்ல. ரிப்பேர் என்றுதான் சொல்ல வேண்டும் அவ்வளவு எளிதான விஷயம்தான்!") அளவுக்கு அதிகமாக உடலில் ஏற்றப்பட்ட மயக்க மருந்தின் விளை வாக மூளை, கண் பார்வை ஆகி யவை பாதிக்கப்பட்டு பக்கவாதத் தால் முடங்கிப் போய் கனடா, அமெரிக்கா ஆகிய நாடுகளில் எல் லாம் சிகிச்சை எடுத்துக் கொண் டார்.

"இப்போது பரவாயில்லை. ஓரளவுக்கு நார்மலுக்கு வந்து விட்டேன். என்றாலும் இருட்டில் காரோட்ட முடியாது என்ப தால் டிரைவரை அமர்த்திக் கொண்டு தான் காலையில் நான் பணிபுரி யும் ஸ்டேட் பாங்கிற்கும் மாலை யில் அகாடமிக்குச் சென்று வரு கிறேன்."

அகடமி...?

இது டேபிள் டென்னிஸ் பயிற்சி யளிக்கும் அகா டமி. தொடக் கத்தில் ராயப் பேட்டை ஒய்.எம்.சி.ஏ.வில் இயங்கிய இந்த அகாடமி, இப் போது அரும்பாக்கம் வைஷ்ணவா கல்லூரி வளாகத்தில் இயங்குகிறது. மைதிலி, ஸ்ரீநிவாஸன், இந்து ஆகியோர் இவரிடம் பயிற்சி எடுத்துக் கொண்ட இன்றைய பிரபலங்கள்.



• சந்திரசேகர்

வழக்குத் தொடுத்து பத்து வருடங் களுக்குப் பிறகு (அப்போதெல் லாம் நுகர்வோர் நீதிமன்றம் கிடையாது) மருத்துவமனையும் இரு டாக்டர்களு மாகச் சேர்ந்து பத்தொன்பது லட்ச ரூபாய் நஷ்டஈடு கொடுக்க வேண்டு மென்று உயர்நீதி மன்றம் தீர்ப்பளிக்க, அதில் சுமார் அறுபது சதவிகிதத் தொகை இவருக்குத் தரப்பட்டுள்ளது. (''உச்ச நீதிமன்றத்துக்கெல்லாம் போக நேரம் இல்லை சார்'')

நிகழ்கால சந்தோஷங்களுக்கு டாபிக்கை மாற்றினோம். இவர்



• புது மனைவியுடன் சந்திரசேகர்

பரம்?'' எனும் சந்திரசேகர், இது தொடர்பாக வேறொரு வருத்தத்தை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்.

''ஸ்டர்லிங் ட்ரீ மேக்னம் நிறுவனம்தான் எனது டேபிள் டென்னிஸ் அகாடமியை ஸ்பான்ஸர் செய்து வந்தது. அந்த நிறுவனத்தின் பொருளாதாரத்தில் இறக்கநிலை என்பதால் கடந்த சில மாதங்களாக அவர்களால் பொருள் உதவி செய்ய முடியவில்லை. கல்லூரிக்கு வாடகை, மின்சார செலவு, நான்கு பயிற்சியாளர்களுக்கு சம்பளம் என்று மொத்தம் கிட்டத்தட்ட மாதம் நாற்பதாயிரம் ரூபாய் செலவாகிறது! அதிக நாள் என்னால் தாக்குப் பிடிக்க முடியும் என்று தோன்றவில்லை. யாராவது புதிய ஸ்பான்ஸர்கள் கிடைத்தால் தேசிய அளவில் மேலும் டேபிள் டென்னிஸ் வீரர்கள் தமிழகத்தில் உருவாவது தடைபடாமல் தொடரும்.''

# புதிய பரவசம்; வருத்தம்!

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள்: ஸ்ரீஹரி

மணந்து கொண்டிருக்கும் மாலாவும் பாரத ஸ்டேட் வங்கியில் பணிபுரிகிறார்.

''என்றாலும் இது காதல் திருமணம் இல்லை. இருவரும் வெவ்வேறு கிளைகளில் வேலை செய்கிறோம். இருவருக்கும் தெரிந்த ஒரு தோழி என்னிடம் இந்தக் கல்யாணத்துக்கு அடித்தளம் இட்டாள். தவிர மென்மையானவர், நல்ல மாதிரி என்று இவரைப் பற்றி ஏற்கெனவே வங்கியில் பேச்சு உண்டு. என் பெற்றோர் இவரது உடல்நிலை போன்ற சில விஷயங்களை உறுதி செய்து கொண்டு, பிறகு சம்மதித்தார்கள்'' எனும் மாலாவுக்குப் பிடித்த விளையாட்டு டி.டி அல்ல; கிரிக்கெட் மற்றும் டென்னிஸ்தான்.

''அது ரெண்டுக்கும்தானே இப்போது தொலைகாட்சியில் எக்கச்சக்க விளம்

''இத்தனை ஃபைனான்ஸ் கம்பெனிகள் ஏமாற்றின பின்பும் புதுவிதமா இவர் தொடங்கின கம்பெனியினால் மறுபடியும் பலர் ஏமாந்துவிட்டாங்க!''

''அது என்ன புதுவிதம்?''

''ஃபைனான்ஸ் கம்பெனிகளில் பணம் போட்டவர்கள் தங்களது டெபாசிட்டுகளை எங்களிடம் இன்ஷூர் செய்து கொள்ளவும்'னு விளம்பரம் செய்ததுதான்!''

— கே. உஷா



# பிரமிக்க வைக்கும்




பெல்ஜியத்தின் தலைநகரான ப்ருஸல்ஸிலிருந்துதான் டூர் தொடக்கம் என்பதால், அங்கேதான் முதன் முதலாக எங்கள் சக பிரயாணிகளைச் சந்தித்தோம். நாங்கள் தங்க வேண்டிய ஹோட்டலில் அவர்கள் எல்லோருமே காத்திருந்தனர்.

எங்கள் சுற்றுலா இயக்குனர் (இங்கே 'கைடு' என்று சொல்லாமல், 'டூர் டைரக்டர்' என்றழைக்கிறார்கள்) ஒரு பெண் (மணி!). படு 'ஸ்மார்ட்'டான "மரியா". ஒல்லியான உடல்வாகும், கிராப் செய்த தலையும், பாண்ட், ஷர்ட் பெல்ட்டுமாய், ஆண் பிள்ளை சாயலில், மிக அழகான, தெளிவான ஆங்கிலம் பேசுபவராய் அமைந்தார்.

எங்களைக் கண்டதும், கட்டித் தழுவி, முகமன் கூறி வரவேற்று, கைகளில் ஒரு சின்ன அட்டையைச் செருகினார் – அதுதான் எங்கள் ரூம் சாவி! கூடவே எங்கள் லக்கேஜ்களில் ஒட்டிக் கொள்ள 'காஸ்மாஸ்' (டூர் அழைத்துச் செல்லும் அமைப்பு) ஸ்டிக்கர்கள் இரண்டு! ரிஸப்ஷனிலேயே மறுநாள் நிகழ்ச்சி நிரல், பெரிய போர்டாகப் போடப்பட்டிருந்தது!

காலை ஆறு மணிக்கு எழுப்பு மணி "Wake up call"-; 6.25க்கு லக்கேஜை ரூம் வாசலில் வைக்க வேண்டும் – அவர்களே அதை எடுத்துச் சென்று, பஸ்ஸின் அடித் தளத்தில் ஏற்றிவிடுகிறார்கள்; 6.30க்கு கீழ் ஹாலில் காலைச் சிற்றுண்டி. டாணென்று 7 மணிக்கு, பஸ் புறப்பட்டு விடும், சுற்றுலாவுக்கு! குருகுல ஸ்டைலில், இதே 'டிஸிப்ளினை' தினமும் கடைப்பிடித்தார்கள்!

அட்டையால் சாவித் துவாரத்தில் நேர் கோடாக இழுக்க, கதவு திறந்தது; உள்ளே சென்று, இருக்கும் ஸ்விட்சுகளை





எல்லாம் தட்டியும் ஒரு விளக்கு கூட உயிர் பெறவில்லை! பக்கத்து அறையிலிருந்து இந்தோனேஷியப் பெண் ஓடி வந்து, அதே அட்டையின் அடிப்பாகத்தை ஸ்விட்ச் போர்டிலிருந்த ஒரு துவாரத்தில் செருக... ஒரே வெளிச்சம்! 'எங்களுக்கு



• ஹாலெவ்ம் டவுன் ஹால்...



• மினி ஐரோப்பா!



• எல் எஸ்கோரியல்...

# மினி ஐரோப்பா!

**ஜெயஸ்ரீ ராஜ்**

வெளியே அடி எடுத்து வைத்து, ப்ருஸல்ஸ் காற்றை சுவாசித்ததும், எங்களுக்கு ஒரே சந்தேகம். வந்திருப்பது பெல்ஜியத் தலைநகருக்கா, இந்தியத் தலைநகருக்கா என்று...

நமக்கே சொந்தம் என நம்பிக் கொண்டிருந்த புழுதி படர்ந்த தெருக்களும், பழைய கார்களும், பயமுறுத்தும் ரோட் கிராஸிங்குகளும் இங்கேயுமா? குப்பைக் கூள விஷயமும் அப்படியே! ஒரே வித்தியாசம் – இங்கே குப்பைகளை மூட்டை மூட்டையாக கருப்புப் பிளாஸ்டிக் பைகளில்

மரியா முன்னமேயே விளக்கி விட்டார்' என்று சிரித்தான்.

அவளுடைய ரூம் மேட் ஜப்பானியக் கிழவி 'கிம்'. தனியாக வந்திருந்தவர்களை அவர்களே ஜோடி சேர்த்து விடுகிறார்கள். (நோ ஜொள்ஸ்! ஒன்லி ஆண் – ஆண்; பெண் – பெண்)! ஆந்திர பேங்க்கருக்கு ஸ்பானிஷ் இளைஞர் (குளிக்கவே மாட்டேன்றான், கிட்ட போக முடியாது – இது தெலுங்கரின் நிரந்தர முனகல்); ஆஸ்திரேலிய இந்தியருடன் ட்ரைவர் ஆண்ட்ரூஸ்; மரியா மட்டும் தனியாக!

அவர்கள் எங்களைத் தங்கவைத்த ஹோட்டல்கள் பெரும்பாலுமே நம்மூர் 4 ஸ்டார் ரகம்; ஒன்றிரண்டுக்கு 5 ஸ்டாரே கொடுக்கலாம்; ஒன்றிரண்டு 'நோ ஸ்டார்'தான்! "இன்று உங்களுக்குச் சொந்தம்; நாளையிலிருந்து காஸ்மாஸ் அட்டவணைப்படிதான்" என்று மரியா விடைபெற, ஹோட்டலைச் சுற்றியிருக்கும் இரண்டு முக்கியத் தெருக்களை வலம் வர நினைத்து, நாலைந்து பேராக, சிறிய 'க்ரூப்'புகளில் திரிந்தோம்.

கட்டி, ஓரளவு ஒழுங்காக வைத்திருந் தார்கள்.

இந்தியாவுக்கும் பெல்ஜியத்துக்கும் இப்படியே சில ஒற்றுமைகள்.... பதினொரு 'பப்ளிக் ஹாலிடே'க்களுடன், ஐரோப்பா வின் மிக அதிகமான தேசிய விடுமுறை களைப் பெற்றிருக்கும் நாடு பெல்ஜியம். இவர்களும் ''வைர''மானவர்கள் - ஆண்ட்வர்ப், 'டைமண்ட் கட்டிங்'குக்கும் பிரசித்தமாயிற்றே! உலகத்திலேயே அதிக ஃபார்மஸிகள் உள்ள நாடு பெல்ஜியம் தானாம்!

தெருவெங்கிலும் கடைகள்; முக்கால் வாசியும் துணிக் கடைகள்தான்! ஷோகேஸ் பொம்மைகள் போட்டிருந்த ட்ரெஸ் ஒவ்வொன்றும் பெல்ஜியன் ஃப்ராங்க்ஸில் பல பூஜ்யங்களுடன் பயமுறுத்தின - இந்தியப் பணத்தில் ஆயிரக்கணக்குகள் தான்; வெறும் உள்ளாடைகளே 600, 700 ரூபாய் என்றால், ஓரளவு உடல் போர்த்தும் ரகங்கள் என்னவாக இருக்கும் என்பதை உங்கள் கற்பனைக்கே விட்டு விடுகிறோம். திடீரென்று ஒரு கடையில் ஓரளவு கட்டுப்படியாகும் போலிருந்த விலை அட்டைகளைப் பார்த்துப் பரவசமானோம் - சின்ன பனியன் போலிருந்த ஆடை 150 ரூபாயில் ஆரம்பித்து, பெரிய கவுன் போன் றது எண்ணூறு, தொள்ளாயிரத்தில் முடிந் திருந்தது.

ஜப்பானிய மூதாட்டி 'கிம்' உள்ளே சென்று, சைகை மொழியில் பேரம் பேசத் துவங்க, கவுண்டரிலிருந்த பெண் "நோ... நோ...'' என்று தமக்குத் தெரிந்த ஒரே ஆங்கில வார்த்தையில் அலறிக் கொண் டிருந்தாள். உள்ளே சென்று நாங்கள் ஆங்கிலத்தில் விசாரித்ததில், "நோ... சேல்" என்றாள் அவள் கஷ்டப்பட்டு!

"ஏன்?" என்று துருவியதில், "நோ... திஸ்... ட்ரைக்ளீன்... ஷாப்" என்றாளே பார்க்க வேண்டும்! அட ராமா! லாண்டரிக் கடை! மாடல் பொம்மைகளை எல்லாம் நிறுத்தி, இவ்வளவு 'பாஷ்' ஆகவா இருக்க வேண் டும்?

விழுந்து விழுந்து நாங்கள் சிரிக்க, அவளும் மெதுவாகப் புன்னகை பூத்தாள். அதன் பிறகு எந்த கடைக்குள்ளும் புகுந்து புறப்படாமல் சும்மா ஒரு ரவுண்டடித்து விட்டுத் திரும்பி விட்டோம்.

மதியம், ப்ரஸல்ஸின் பிரத்யேகக் கவர்ச்சியான ''மினி யுரோப்''பை நண்பர்கள் குழுவான நாங்கள் நால்வர் மட் டும் பார்க்கக் கிளம்பினோம்; மற்றவர்கள் 'குட்டித் தூக்க'த்தில் சோம்பினர்.

டபுள் டெக்கர் பஸ்ஸில் ஏகக் கூட்டம்! பலர் நின்று கொண்டு நம்மூரை நினைவு படுத்தினர். டெர்மினஸிலேயே முழுப் பயண தூரத்துக்கான டிக்கெட்டைக் கொடுத்து விடுகிறார்கள். ஆங்காங்கே ஸ்டேஜுகளில், ஆட்டோமாடிக் மெஷினில் அதைச் செருகி, கட்டணத்தைக் குறைத்துக் கொண்டே வர வேண்டும். இஸ்லாமிய உடையில், கோதுமை நிறத்துத் துருக்கியர் பலர் காணப்பட்டனர். சளசளவென்று நம்மூர் போன்றே நிறையப் பேசினார்கள்.

பேச்சு சுவாரஸ்யத்தில், 'மினி யுரோப்' வந்ததே தெரியவில்லை! ஐரோப்பா என்பது ஒரு கிரேக்க அழகியின் பெயராம்; ஐரோப்பா என்றால் 'பெரிய கண்கள்' என்று அர்த்தம்! குற்றால அழகை நாம் காண்பதற்கே ஆயிரம் கண் போதாது எனும் போது, ஐரோப்பாவின் மொத்த அழகைப் பருக மிகப் பெரிய கண்கள்தான் வேண்டும்! அது சாத்தியமில்லை என்பதாலோ என் னவோ, நம் சாதாரணக் கண்களுக்குள் கொள்ளும் விதத்தில், அந்த அழகுகளை எல்லாம் சின்னச் சின்னதாக, 1:25 என்ற விகிதத்தில் வடித்து, 'மினி யுரோப்பை' சிருஷ்டித்திருக்கிறார்கள்.

கம்யூனிஸ்டல்லாத ஏனைய ஐரோப் பிய நாடுகளை 'ஐரோப்பிய யூனியனா'க ஒருங்கிணைக்கும் முயற்சிகள் வலுப்பெற் றிருக்கின்றன அல்லவா? இன்று இந்த யூனியனில் ஸ்பெயின், போர்சுகல், ஃப்ரான்ஸ், ஜெர்மனி, டென்மார்க், யு.கே., அயர்லாண்ட், ஃபின்லாண்ட், நெதர்

---

"ஏம்பா, எக்மோரிலிருந்து சென்ட்ரல் போக சைக்கிள் ரிக்‌ஷாவுக்கு நூறு ரூபா கேக்கறியே நியாயமா?"

"பீஹார்ல அரை மைல் போறதுக்கு 600 ரூபாய் கொடுக்குறாங்க, தெரியுமா சார் உங்களுக்கு?"

- சேரன்



லாண்ட்ஸ், ஸ்வீடன், லக்ஸம்பர்க், பெல்ஜியம், ஆஸ்த்ரியா, இத்தாலி, க்ரீஸ் என்ற பதினைந்து நாடுகள் உறுப்பினர்கள்; ப்ருஸல்ஸ்தான் இதன் தலைநகர்! இந்த மினி யுரோப்புக்கு 'யுரோப்பா' என்ற பொதுவான 'கரன்ஸி'யைக் கூட அறிமுகப்படுத்தும் முயற்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

கலை, நாகரிகம், பொருளாதாரம் என்ற கோணங்களில் இணைய நினைக்கும் இந்நாடுகளிலிருந்து, கலைத் தன்மையும், சரித்திரத் தொன்மையும் கொண்ட சின்னங்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றின் மினியேச்சர் உருவங்களை வடிவமைத்து, தலைநகரான ப்ருஸல்ஸில் நிர்மாணித்திருப்பது, கன கச்சிதமாகப் பொருந்தியது!

இந்த மாடல்களைச் செய்த நிபுணர்கள், ஃபோட்டோக்கள், வரைபடங்கள், முதலியவற்றைச் சேகரிப்பதற்காக எடுத்துக் கொண்டிருக்கும் சிரத்தையையும், செலவிட்ட தொகையையும் (8.5 மில்லியன் பெல்ஜியன் ஃப்ராங்க்ஸ்) எண்ணிப் பார்த்தால், இந்தச் சின்னச் சின்ன அழகுகளின் பின்னால் பெரிய பெரிய உழைப்பு ஒளிந்திருப்பது புரியும்.

உதாரணமாக, ஸ்பெயினிலுள்ள Cathedral of Santiago De Compostela வை முடிக்க, 24,000 மணி நேரம்... அதாவது, ஒரு மனிதனின் பதிமூன்று ஆண்டு உழைப்புக் காலம் ஆயிற்றாம்! இன்னும் முற்றுப்புள்ளி வைக்கப்படவில்லை! ஸ்டாக்ஹோம் டவுன் ஹால் மாடல் 1998 இறுதியில் திறக்கப்படுமாம்!

அங்கேயிருந்த மாடல்களைப் பற்றிய சிறு குறிப்புகளில் சுவையான சில :

• பெல்ஜியத்திலுள்ள லூவெய்ன் டவுன் ஹாலிலுள்ள 236 வடிவங்களையும், ஒரே சிற்பி, தம் கரங்களாலேயே செதுக்கி உருவாக்கியுள்ளார்.

• பெல்ஜியத்தின் ''கெண்ட்''தான், ஐரோப்பாவிலேயே மிக அழகான தெருவாம்.

• வட ஐரோப்பாவிலேயே மிக அழகான அரண்மனை. 'ப்ரஸல்ஸிலுள்ள' க்ராண்ட் பாலஸ். இதன் மாடலை உருவாக்க ஆன செலவு 3,50,000 பெல்ஜியன் ஃப்ராங்க்ஸ்; எடுத்துக் கொண்ட நேரம் 19,000 மணி நேரங்கள்! ஒரிஜினல் ஆர்கிடெக்ட் Jan Van Ruysbroeck, இதைக் கட்டி முடித்தபின், மேலிருந்து கீழே குதித்து தற்கொலை செய்து கொண்டு விட்டாராம் – கட்டடத்தில் ஏதோ சின்னத் தவறு, மீண்டும் ஆரம்பிக்க



''அப்பா, காந்தி படம் இருந்தா கொடுப்பா...''

''ஆஹா... என்னிலேர்ந்து உனக்கு இத்தனை தேசபக்தி, காந்தி பக்தி எல்லாம் வந்துடுச்சு...? எப்படி?''

''ரூபா நோட்டுல அவர் படம் போட ஆரம்பிச்சதிலேருந்துதான்!''

– ஜோதி ரஞ்சன்.

---

வேண்டும் என்ற எரிச்சலில்!

• ஸ்பெயினிலுள்ள ''எல் எஸ்கோரியல்''ல் 2600 ஜன்னல்கள், 1200 கதவுகள், 86 மாடிப் படிக்கட்டுகள் உள்ளன – மினி மாடலிலும்!

• பாஸிலோனாவிலுள்ள கப்பல் துறைமுகத்தில் அவ்வப்போது தீ பிடிப்பது போலவும், உடனே தீயணைப்புப் படை அதை அணைப்பது போலவும் காட்சி அமைத்துள்ளார்கள்.

• ஸ்பெயின், காளைச் சண்டைகளுக்குப் பெயர் போனது. 'ஸெவில்' என்ற இடத்தில் பெரிய அரங்கு; அதில் 6000 பார்வையாளர்கள் – மினி மாடலில் இவை ஒவ்வொன்றையும் கையாலேயே பெயிண்ட் செய்துள்ளார்கள். நடுவில் காளைகளும், சிவப்புத் துண்டேந்திய வீரர்களும்! அங்கேயுள்ள ஒரு மைக்கில் 'ஓலே' என்று கத்தினால் போதும்... வீரர்கள் ஆவேசத்துடன் போராட, கூட்டத்தினர் ஆர்ப்பரிக்க, காளை விழும் வரை பொம்மைகளின் ஆக்ஷன் – ப்ளேவைப் பார்க்கலாம்!

• இவை தவிர, ஃபெரஞ்சுக்காரர்களின் துரித ரயில் மாடலும் சுற்றிச் சுற்றி வருகிறது. இந்த மினி ட்ரெயின் வருடத்துக்கு 10,000 கி.மீ. ஓடுகிறதாம்! ராக்கெட் லாஞ்சிங் ஸ்டேஷனும் இருக்கிறது. அதிலிருந்து 10 நிமிடத்துக்கொரு ராக்கெட் மேலெழும்புகிறது!

மினி யுரோப்பைப் பார்ப்பதே பிரமிப்பாய்த்தானிருக்கிறது. முழு யுரோப்பையும் பார்த்தால்....?

(தொடரும்)



• மனோஜ்



• வெங்கடேஷ்

"ஒட்டு மொத்தமாக எங்கிருந்து இத்தனை பட்டாம் பூச்சிகளைப் பிடித்தீர்கள்?'' என்று அரவக்குறிச்சிப்பட்டி, அரகண்டநல்லூர் வாசகர்கள் கட்டாயம் கடிதம் எழுதப் போகிறார்கள். அதற்கு முன்னால் நாமே சொல்லி விடலாம்! நீங்கள் பல விளம்பரங்களில் பார்த்திருக்கக்கூடிய இந்த மாடல்களைப் பிடிக்க வேண்டுமென்றால் மாடல் - கோ-ஆர்டினேட்டர்களைத்தான் அணுக வேண்டும். மாடல் கோ-ஆர்டினேட்டர் என்றால்?

''ஆ! அது ஒரு நவீனமான, பிரமாதமான தொழில்!'' என்கிறது மாடல் உலகம்!

ஒரு விளம்பரத்தின் வெற்றிக்கு காபிரைட்டர்கள், புகைப்படக்காரர்கள், இயக்குனர் போன்ற திரைக்குப் பின் இயங்குவோரின் பட்டியலில், பார்வையாளர்களைச் சுண்டியிழுக்கும் வகையில் மாடல்களைத் தேடித் தரும் மாடல் கோ-ஆர்டினேட்டர்களுக்கும் முக்கிய இடம் உண்டு! இவர்களது 'அழகு வங்கி'களிலிருந்துதான் மாடல்கள் மீடியாவுக்கு அறிமுகப்படுத்தப் படுகிறார்கள்.

விளம்பரப் பட இயக்குனர்கள் தங்கள் பொருளை விளம்பரிக்கத் தேவைப்படும் மாடல்களை, கோ-ஆர்டினேட்டர்களின் 'கலெக்ஷனி'லிருந்தே தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர்! மாடல் கோ ஆர்டினேட்



• ருக்மணி



• பிஜு

டர்களும் மாடல்களுக்காக, காலேஜ், காம்ப்ளக்ஸ் வாசல்களில் நோட்டம் விட்டுக் காத்திருப்பதில்லை. முன்னணி கோஆர்டினேட்டர்களை நோக்கி 'மாடல்' கனவுகள் கொண்ட இளைஞ,

# அழகு வேங்கைகள்!

இளைஞிகள் தாங்களாகவே படையெடுத்து விடுகின்றனர்!

''நம்ம ஐஸ்வர்யாராய், சுஷ்மிதாசென் இவங்களுக்குத் தான் தேங்க்ஸ் சொல்லணும். ஏன்னா, இவங்க தாங்களும் பாப்புலராகி, மாடலிங் தொழிலையும் பிரபலப்படுத்தியிருக்காங்க. இப்ப மாடல்களுக்கு விளம்பரம், தவிர டி.வி நிகழ்ச்சித் தொகுப்பு, 'ப்ராடக்ட் லாஞ்ச்'ன்னு பிஸியா புதுப்புது வேலைகள்! வருமானத்துக்கு வருமானம்; பொழுதும் உல்லாசமாக ஓடுது...'' என்கின்றனர் Kontact மாடல், கோஆர்டினேட்டிங் ஏஜென்சியை நடத்தும் பாட்னர்கள் ருக்மணி, பிஜு ஜெயதேவன்.

இவர்களில், ருக்மணிக்கு விளம்பரத் துறையில் வேலை செய்த அனுபவம் கைகொடுக்க, 'பெண்களுக்கு ஏற்ற, போட்டியில்லாத தொழில் இதுதான்' என்று இருவரும் இறங்கி விட்டார்கள்! சென்னையில் தயாராகும் விளம்பரப் படங்களில் நடிக்கும் 'தமிழ் மாடல்கள்' பெரும்பாலும் இவர்களது கண்டுபிடிப்புத்தான்.

வெகு சில மாடல்களோடு மட்டும் காண்ட்ராக்ட் செய்து கொள்ளும் லின்டாஸ், ஓ அன்ட் எம் போன்ற ஏஜென்சிகள், நான் தவறாமல் ஹிந்துஸ்தான் லீவர், ப்ராக்டர் அன்ட் கேம்பில் போன்ற பகாசுர நிறுவனங்கள் அறிமுகப்படுத்தும் புதுப் பொருட்களுக்குப் புது மாடல்களையே நாடுகின்றன. அவர்களுக்கு மாடல்களின் போட்டோ, பயோடேட்டா பட்டியலைத் தருவது கோஆர்டினேட்டர்களின் வேலை. தேர்வாகும் மாடல்களுக்கு ஒரு அசைன்மெண்ட்டிற்கு இவ்வளவு என்று ஒரு தொகையைப் பேசிப் பெற்று, அதில் பதினைந்து சதவிகிதத்தைத் தங்கள் கட்டணமாக, கோஆர்டினேட்டர்கள்

வசூலிக்கின்றனர். அவுட்டோர் என்றால் சர்வீஸ் சார்ஜும் உண்டு!

"தங்கள் திறமைகளை வெளிக்காட்ட வாய்ப்புத் தேடுபவர்கள் ஒரு பக்கமென்றால், கேரக்டர்களுக்குப் பொருத்தமான ஆர்டிஸ்ட்களைத் தேடித் திரிகிற இயக்குனர்கள் ஒரு பக்கம். இந்த இரண்டு பிரிவினரோடும் எனக்குத் தொடர்பு இருந்ததால் நான் கோ-ஆர்டினேடிங் துறையில் ஈடுபட்டேன்" என்கிறார் நடிப்புத் துறையில் டிப்ளோமா பெற்று, அடிக்கடி திரையில் தலைகாட்டி வரும் மனோஜ் கிருஷ்ணா.

"நான், என் க்ளாஸ்மேட்ஸ் நடிகர் ரகுவரன், தலைவாசல் விஜய் எல்லாம் முதல் பட சான்ஸுக்குப் பட்ட கஷ்டங்களை இப்ப வர்ற திரை விளம்பர ஆர்டிஸ்ட்கள் படக் கூடாதுங்கறதுதான் என் எண்ணம்" என்கிறார்.

இ.ஐ.டி. பாரி, பேங்க் ஆஃப் மதுரா, பி.சி.ஸ்ரீராமின் விளம்பர நிறுவனம் (ஜேயெஸ்) ஆகியவற்றிற்கு ஆஸ்தான மாடல் கோ-ஆர்டினேட்டிங் ஏஜென்சி இவரது 'சன்ஷைன்'தான்!

டி.வி நிகழ்ச்சித் தொகுப்பாளர்களாகப் பிரபலமாகியுள்ள ப்ரியதர்ஷினி, தேவதர்ஷினிகள் எல்லாம் மனோஜின் கண்டு பிடிப்புகள்.



"இன்றைக்கு நாளொன்றுக்கு மூணு, நாலு பேராவது போட்டோவும் கையுமா வந்திடறாங்க. அவங்கள்ல பலருக்கு மாடலிங் என்பது சினிமா எனும் தொலை நோக்கு லட்சியத்திற்கான நுழைவாயில்" என்கிறார் மனோஜ்.

"மாடல்களின் வெளித்தோற்றத்தை மட்டும் நாங்கள் பார்ப்பதில்லை; புத்தி சாலித்தனம் மிக முக்கியம். ஒரு விளம்பரப் படம் எடுப்பதற்கு முன் அதன் இயக்குனர், கோ.ஆர்டினேட்டர்களுக்கு விளம்பரப் படத்தின் 'தீம்', காட்சி அமைப்பு, மாடலின் உடை, பட்ஜெட் என அனைத்தையும் விவரித்து விடுவார். அவற்றைக் கணக்கில் கொண்டு ஸ்பாட்டிலேயே 'பொருத்தமான மாடல்கள் இவர்கள்தான்' என்று அதிகபட்சம் இரண்டு, மூன்று சாய்ஸ்களை மட்டும் தர வேண்டும்.

"கிராமத்து ஜனங்கள் சேர்ற விளம்பரத்துல அல்ட்ரா மாடர்னா தெரியற மாடல் தோன்றினா ஒரு ஒட்டுதல் இல்லாம இருக்கும். விளம்பரம் எடுபடாம போயிடும். அதே மாதிரி மாடல்கள் வெவ்வேறு ஜாதி, மத, இனங்களேர்ந்து வந்தவங்களா இருப்பாங்க. விளம்பரத்துல ஒரு குடும்ப உறுப்பினர்கள்னா நம்புகிற மாதிரி, பொருத்தமானவங்களைத் தேர்ந்தெடுத்து டைரக்டர்களுக்குக் காட்டணும்" என்கிறார் ருக்மணி.

ஃபேஸஸ் அன்ட் பிளேஸஸ் (Faces & places) கோ.ஆர்டினேட்டிங் ஏஜென்சியின் வெங்கடேஷ், "சினிமா கலைஞர்களுக்கும், விளம்பர மாடல்களுக்கும் நடிப்பில் ஏணி வைத்தாலும் எட்டாது! மாடல்களுக்குப் பயிற்சி தர ட்ரெய்னிங் ஸ்கூல் வர வேண்டும்" என்கிறார்.

சக்தி மசாலா உட்படப் பல பிரபலமான விளம்பரப் படங்களுக்கு இவர் திரை நட்சத்திரங்களையே மாடல்களாகத் தந்திருக்கிறார்.

"மும்பை மாடல்கள் என்றால் ரேட் அதிகம்தான். ஒரு படத்துக்கு லட்ச ரூபாய் கூடக் கேட்பார்கள். ஆனா கேட்ட மாத்திரத்தில் அனாயாசமாக எக்ஸ்பிரஷன் கொடுத்து விட்டுப் போய்க் கொண்டே இருப்பார்கள். நம்மூர் மாடல்களுக்கு 'டேக்', 'டேக்'ன்னு ஒரு நிமிட விளம்பரப் படத்துக்கு நாலஞ்சு கேன்களை காலி பண்ணிடுவாங்க. (ஒரு கேன் என்பது நானூறு அடி நீள பிலிம் உடையது) தயாரிப்பு செலவு அதிகமாயிடுது" என்கிறார் வெங்கடேஷ்.

**வ**ழக்கமாக, ஆறு முதல் அறுபது வரை என்று சொல்வார்கள். ஆனால் மாடலிங் துறையைப் பொறுத்தவரை பிறந்த குழந்தை முதல் போகும் காலம் வரை ஜாலியாக மாடலிங்கில் ஈடுபடலாம்! அனைத்து நிற, முக, உடலமைப்புகளுக்கும் உண்டு வாய்ப்பு.

முன் போல் செலிப்ரிடிகளைப் (celebrity) போட்டு செயற்கையாக்காமல், யதார்த்தமான, அன்றாட வாழ்வில் நாம் சந்திக்கிற முகங்களையே வைத்து விளம்பரம் எடுக்கும் ஆரோக்கியமான 'ட்ரெண்ட்' வந்துள்ளது. சாதாரணமா போட்டோ ஜெனிக் பேஸ் உள்ள யாருமே முன் வரலாம்'' என்கிறார் மனோஜ்.

ஆனால் இந்த விஷயத்தில் இத்தனை 'சலுகை' வந்தும் தமிழ்நாட்டுப் பெண்கள் அத்தனை ஆர்வமாக மாடலிங்குக்கு முன் வருவதில்லை என்பதே உண்மை. இயல்பான கூச்சம், கலாசாரப் பின்னணி தான் காரணம். எனினும் சமீப காலங்களில் அழகிப் போட்டிகள் நிறைய நடைபெறத் தொடங்கியிருப்பதால் பல கல்லூரி மாணவிகள் சற்று வித்தியாசமாக முன் வருவதாகச் சொல்கிறார்கள்.

மாடல்களைத் தேர்ந்தெடுத்து, நிறம், உயரம் பர்சனாலிடிக்கேற்ப முக்கிய ரோலா, சப்போர்டிங் ரோலா என்று தீர்மானிக்கிறார்கள்.

''துணை மாடல்களுக்குக் கொஞ்சம் 'டல்'லான நிறம்தான் தேவை. அகண்ட பார்டர் சேலை உடுத்தி ஒய்யாரமாக பவனி வர, உயரமான மாடல்களே வேண்டும். ஆனால் ஷாம்பூ விளம்பரத்திற்கு உயரம் முக்கியமில்லாமல் இருக்கலாம்'' என்கிறார் வெங்கடேஷ்.

**கோ** ஆர்டினேட்டர்களுக்கு இரண்டு வகையான பிரச்னைகள் உண்டாம். ஒன்று தகுந்த மாடல்களுக்குத் தேவையான நேரத்தில் தட்டுப்பாடு ஏற்படுவது.

''பி.சி. ஸ்ரீராம், பிபிஎல் டிவி விளம்பரம் தயாரிச்சப்ப நான்தான் மாடல்களைத் தந்தேன். அதில் மெய்ன் மாடல் 'மேட் இன் இண்டியா' ஆல்பம் வெளியிட்ட அலீஷா. ஆனா, 'நாற்பது சப்போர்டிங் மாடல்களா வெள்ளைக்காரப் பெண்கள் வேண்டும். பாக்கறதுக்கு ஸ்போர்ட்ஸ் கேர்ள்ஸ் மாதிரி இருக்கணும்'ன்னார், ஸ்ரீராம். வேற வழி? டூரிஸ்ட் ஸ்பார்ட்கள்ல போயி, ஆள் பிடிச்சு ஒன்பது நாள் நடந்த ஷூட்டிங்குக்கு ஒப்புக்க வச்சேன்'' என்கிறார் மனோஜ்.

ப்ரீமியர் கிட்சன்வேர் விளம்பரத்திற்கு, பன்னிரண்டாம் வகுப்பில் படிக்கும்

சோனுவை மேக்கப் போட்டு 'மம்மி' ஆக்கி விட்டார் வெங்கடேஷ்!

சமயங்களில் பொருத்தமான மாடல்கள் இருந்தும் அவர்களை சம்மதிக்க வைப்பது கஷ்டமாம்.

சசி அட்வர்டைஸிங், தமிழ்நாடு எய்ட்ஸ் கட்டுப்பாட்டு அமைப்பு ஆகியவற்றிற்கு மாடல்கள் தேடித்தந்த வகையில் மனோஜ் ஜும், வெங்கடேஷும் படாதபாடு பட்டதாகச் சொன்னார்கள். இவர்கள் 'ரெகமண்ட்' பண்ணும் மாடல்கள் இயக்குநர்களுக்குப் பிடிக்காவிட்டாலோ, அல்லது, பிடித்துப் போன பிறகு சரியாக நடிக்காவிட்டாலோ, இந்த கோ ஆர்டி னேட்டர்களின் தலையைத் தான் உருட்டுவார்களாம்!

ஒரு 'மாடல்' ஆக விரும்பினால் என்ன செய்ய வேண்டும்? கோஆர்டினேட் டர்களை அணுகுவதுதான் முதல் வேலை. கையில் கொஞ்சம் மூலதனம் வேண்டும். 'மூலதனம்' என்றால்? மூன்று நான்கு ஆயிரம் செலவில் போட்டோ ஆல்பம் ஒன்றைத் தயாரிப்பதுதான்!

"மாடலிங்கும், சினிமா போன்று பணம், புகழ் தருகிறது. அதேசமயம் சினிமாவை விட எல்லா வகைகளிலும் 'பாதுகாப் பானது'! மாடலிங்கில் இருக்கறவங்க எல்லாருமே படிச்சவங்க. அதனால இந்தத் தொழில் இன்னும் டீஸென்டாவே இருக்கு" என்கிறார் ருக்மணி.

---

**"எவ்வளவு தாலாட்டுப் பாடினாலும் குழந்தை தூங்கவே மாட்டேங்கிறான் டாக்டர்!"**

**"பாடாமல் வெறுமனே தூளியை மட்டும் ஆட்டிப் பாருங்களேன்...!"**

**— உ. ராஜாஜி**



அதான் நேற்று டோக்கியோ போய் அழகிப் பட்டம் வாங்கி வந்த ஸ்வேதா ஜெய்சங்கர் போலப் பலரைப் பார்க்கிறோமே, 'சினிமா பக்கமே வர மாட்டேன்' என்று கூடம் கொளுத்தி சத்தியம் செய்வதை!

சென்னையில் முன்னணி மாடல்களாக பீனா ஜ்யார்ஜ், சம்ஸ்ரீதா, கவிதா, மாதப்பா, சிந்து தந்த்ரீ, ஆண்களில் சஞ்சய் அஷ்ராணி, சந்தோஷ் ராஜ்புட், அஷீஷ் சர்மா ஆகியோர்க்கு விசிறிகளே உண்டு!

பேஷன் ஷோ, ப்ராடெக்ட் லாஞ்ச் (ஒரு பொருளை மார்க்கெட்டில் அறிமுகப்படுத்த ஏற்பாடு செய்யப்படும் விழா) என்று எந்த நிகழ்ச்சியானாலும் நாற்காலி போட்டு உட்கார வைத்து சென்னை சமூகம் பஞ்சமில்லாமல் அந்தஸ்தைத் தருகிறது!

"ஆனா பாருங்க, இப்ப தமிழக நிறுவனங்களே விளம்பரத்திற்கு நல்ல பட்ஜெட் போட்டாலும், இங்க மாடல்களுக்கு வருவாய் கம்மிதான். சில மாதங்களில் தொடர்ச்சியா வேலை; சில நேரங்களில் ஒன்றும் கிடையாது! uncertainities ஜாஸ்தி" என்கிறார் மனோஜ்.

"ஏஜென்சிகளோடு ஒப்பந்தம் பெறுவதனால் (ஒப்பந்தம்: "பூஸ்ட் இஸ் த சீக்ரெட் ஆஃப் மை எனர்ஜி"ன்னு சொல்லிட்டு ஹார்லிக்ஸ் பாட்டிலை காண்பிச்சு "அப்படியே சாப்பிடுவேன்"னு சொல்லக் கூடாது!) வெளி வேலைகளை இழக்க வேண்டி வரலாம். சில நேரங்களில் அதிக விளம்பரமே ஆபத்தில் முடியலாம்!

"டீ முதல் டீவி விளம்பரம் வரை ஒரே மாடலே வந்து போனால் 'ஓவர் எக்ஸ் போஸ்ட்'னு சொல்லி ஒதுக்கி வச்சிடுவாங்க!" என்கிறார்கள்.

இங்கு ஒரே மாடலின் போட்டோவை ஒவ்வொரு கோஆர்டினேட்டரும் வைத்திருப்பார். கமிஷன் விஷயத்திலும் ஏற்றத் தாழ்வுகள் உண்டு.

"சென்னையில் ஐம்பதிற்கும் அதிகமான அட்வர்டைசிங் ஏஜென்சிகள் உண்டு. இவர்கள் ஐந்நூறுக்குக் குறையாத பொருட்களுக்கு விளம்பரம் செய்து தருகிறார்கள். மாடல் கோஆர்டினேட் டர்களின் எண்ணிக்கை ஐந்தை மிகவில்லை! இந்த ரேஷியோதான் ஆரோக்யமான ஒன்று. ஆனால், சமீபகாலமாக முன்பின் அனுபவம் இல்லாமல் ஆளுக்கு ஆள் மாடல் கோஆர்டினேட்டர் என்று விசிட்டிங் கார்ட் அடித்து விடுகிறார்கள்" என்று வருத்தப்படுகிறார் வெங்கடேஷ்.

**— ஜி. சங்கரநாராயணன்**

# ஜோக் மழை சீசன்!



"என்னது திருப்பதிக் குடையா? அதெல்லாம் இங்கே விக்கிறதில் லீங்க."



"இதுதான் தென்னக திரிவேணி சங்கமம். மழைக் காலத்திலே கூவம், பக்கிங்ஹாம் கால்வாய், அடையாறு மூணும் கூடுமிடம்."

"வெளியே போகாதீங்க. மழை யிலே நனைஞ்சா ஜலதோஷம் பிடிச் சுக்கும்."





## கோவில்களில் தமிழில் அர்ச்சனை செய்ய வேண்டும் என்றொரு கோஷம் கிளம்பியிருக்கிறது. பக்தி, அரசியலாக்கப்படும் இவ்விபரீதம் பற்றி சமய அறிஞர்கள் என்ன கருதுகிறார்கள்?

### பாலகிருஷ்ண சாஸ்திரிகள்:

எந்த மொழியில் கடவுளுக்கு அர்ச்சனை செய்தாலும் அதை அவரால் புரிந்து கொள்ள முடியும்தான். தமிழில் செய்யலாம், இந்தியில் செய்யலாம், ஏன் இங்கிலீஷில் கூடச் செய்யலாம். இதற்கு முடிவே இல்லை. ஆனால் ஆகமரீதியாக, சாஸ்திரப் பிரகாரம் சமஸ்கிருதத்தில் அர்ச்சனை என்பது தான் தொன்று தொட்டு வருகிறது. தமிழ் அர்ச்சனை மட்டுமே என்பது தமிழின் மீது கொண்ட அபிமானத்தாலா அல்லது அரசியலுக்காகவா என்பது யோசித்துப் பார்க்க வேண்டிய விஷயம். சம்பிரதாயங்களைக் கடைப்பிடிப்பதுதான் சரி என்பது என் கருத்து.

# "இப்படியே சரியான வழி..."

### சாரதா நம்பி ஆரூரன்:

மறைமலையடிகளின் பேரனின் மனைவியான நான், தனித் தமிழ் இயக்கத்தை ஆதரிப்பதில் வியப்பில்லை. "இறைவனுக்குத் தமிழ் புரியாதென்றால் அந்த இறைவனே எங்களுக்குத் தேவையில்லை" என்று தமிழ்க்குடிமகன் போன்றோர் கூறும் நிலையை உண்டாக்குவானேன்? தொல்காப்பியம் தமிழை மந்திரம் என்றே குறிப்பிடுகிறது. தனது பாடல்களில் பாதிக்குப் பாதி வடமொழி வார்த்தைகளைக் கையாண்ட அருணகிரிநாதர், "சிகராத்ரி கூறிட்ட வேலும் செஞ்சேவலும் செந்தமிழால் பகர் ஆர்வம் ஈ" என்கிறார்.

தவிர, ஆளுக்கேற்றபடிதான் அர்ச்சனையை முழுமையாகவோ குறைத்தோ அர்ச்சகர்கள் செய்கிறார்கள் என்பதால் இப்போதெல்லாம் நான் கோயிலுக்குப் போகும் போது அர்ச்சனையே செய்வதில்லை. சாமிக்குப் பூ சாற்றி, உண்டியலில் காசு போடுவதோடு சரி. தமிழ் அர்ச்சனையென்றால் '108 போற்றிகள்' வருகிறதா என்பதைப் பாமரனாலும் கண்டு பிடிக்க முடியும்; சமஸ்கிருத அர்ச்சனையில் அது முடியாதே?

### சுகி. சிவம்:

பிரச்னை தமிழிலும் இல்லை: சமஸ்கிருதத்திலும் இல்லை. இரு தரப்புக்கும் வேறு உள்நோக்கம் இருப்பதாக இரு தரப்பும் சந்தேகப்படுகிறது.



• சுகி சிவம்

அதுதான் பிரச்னை.

முருகனும் சிவனும் பிரணவப் பொருளைத் தமிழில் பேசியதாகத் திருப்புகழ் சொல்லும். "கொன்றைச் சடையார்க் கொன்றைத் தெரிய கொஞ்சித் தமிழால் பகர்வோனே' என்று பாட்டு. எனவே தமிழும் தேவ பாஷைதான். அர்ச்சனைக்கு அதற்குத் தகுதி இல்லை என்பது தவறான வாதம். பெருமாள் கோவில்களில் கருவறையிலேயே ஆழ்வார்கள் தமிழ்ப் பிரபந்தங்கள் பாடுவதால் பெருமாள் கோவில் சாந்நித்யம் குறைந்தா போய்விட்டது?

தமிழில் வழிபாடு வலு வானால் கோவில்களில் சிலரது மேலாதிக்கம் போய்விடுமோ என்ற கவலை, எதிர்ப்புக்கு ஒரு காரணம்.

மறுபக்கத்தையும் நாம் ஆராய வேண்டும். முற் றிலுமாக சமஸ்கிருதத் தைக் கோவிலை விட்டு வெளியேற்றும் முயற்சி யின் முதல்படியாகத் தமிழ் அர்ச்சனை திணிக்கப் படுகிறது என்பது சிலரது சந்தேகம். மொழி என்பது மாநில எல்லைக்கு உட் பட்டது. மதம் அப்படியல்ல. மாநிலம் கடந்த இந்திய விஷயம். ராமேஸ்வரம் கோவிலில் பார்த்தால் தெரியும், வடநாட்டார் எத்தனை ஆயிரம் பேர் வணங்குகிறார் கள் என்று...

தமிழ்நாட்டுக் கோவில்களில் தமிழ் மட்டுமே என்கிற கருத்து ஆபத்தானது. இந்திய அளவிலான இந்து மத இணைப்பு அதன் மூலம் துண்டிக்கப்படும் என்பதால் இந்து இயக்கங்கள் அதனை ஏற்காது!





• சாரதா நம்பி ஆரூரன்

மேலும் ஐம், க்லீம், ஹ்ரீம் போன்ற பீஜ ஒலிகள் மந்த்ர பூர்வமானவை. இந்த ஒலி வித்துக்கள் மனத்தில் பெரு மாற்றம் விளைக்கும் வலிமை உடையவை. இந்த பீஜ ஒலி பலத்தில் நம்பிக்கை வைத்து முன்னோர் உருவாக்கிய திருக் கோயில் வழிபாட்டு முறையை முற்றிலும் மாற்ற நமக்கு ஏது உரிமை!

பள்ளி வாசலில் அராபியும், கிறித்தவ ஆலயங்களில் லத்தீ னும் ஒலிக்கிற மாதிரி சமஸ் கிருதம் இந்துக் கோவில்களில் இருப்பதில் எந்தத் தவறும் இல்லை. 'ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்' 'வட மொழியும் தென் தமிழும் ஆனான் கண்டாய்' என்கிற அப்பர் அடிகள் வழியே சரி யான வழி.

கந்தர் கலி வெண்பா, அபிராமி அந்தாதி போன்ற தமிழ் நூல் கள் ஓதி வேள்வியே செய்கிறோம். மக்கள் வராமலா போய் விட்டார் கள்! தமிழில் வழி பாடு செய்ய மக் கள் ஆர்வமாகத் தான் உள்ளனர். திருக்கோவில்களில் இருந்து சமஸ்கிருதத்தை முற்றி லும் வெளியேற்றும் எண்ணம் துளியும் இல்லை என்று அற நிலையத் துறையினர் தெளிவு படுத்தினால் பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைக்கலாம்.

தமிழும் சமஸ்கிருதமும் சமய உலகின் இரண்டு கண் கள். எதைக் காயப்படுத்தினா லும் பார்வையில் கோளாறு வரும்!

— ஜி.எஸ்.எஸ்.

“சார், இந்த வருடம் சுதந்தர நாள் அன்னிக்கு எங்க ஏரியாவிலே மெட்ரோ வாட்டர் சப்ளை திறப்பு விழா நடந்தது. அதிலே பங்கெடுத்துக்கிட்ட அமைச்சர் கோ.சி. மணியே “இது நகராட்சி இல்லே. 'நரகாட்சி'ன்னு பேச்சிலே மூணு முறை குறிப்பிட்டார்! அதே விழாவில் எம்.பியான மாறன், இந்த அம்பத்தூர் நகராட்சிக்கு வங்கியில் லட்சக்கணக்கிலே பணம் இருக்கு. அப்படியும் அடிப்படை வசதிகளைக் கூட அவங்க செய்து கொடுக்காமல் மெத்தனமா இருக்காங்க. இன்னும் மூணு மாதத்தில் இந்த அடிப்படைக் குறைகளை உங்க நகராட்சி தீர்க்கலேன்னா, நீங்க என் வீட்டுக் கதவைத் தட்டுங்கன்னாரு. ஆனால் இன்னமும் அதற்கான அடிப்படை முயற்சிகளைக் கூட நகராட்சி எடுத்தபாடில்லை. அதனால்தான் இந்த நடவடிக்கை” என்று குமுறினார் கொரட்டூரைச் சேர்ந்த சமூக சேவகி விஜயா.

என்ன நடவடிக்கை? நகராட்சி அலுவலகம் முன்பு உண்ணாவிரதம் இருப்பதும், கண்டனக் கூட்டம் நடத்துவதும்தான். (சுமார் முன்னூறு பெண்கள் அக்டோபர் முப்பதாம் தேதி அன்று இதில் கலந்து கொண்டிருக்கிறார்கள்.)

சாலைகள் போடப்பட்டதிலும், மழைநீர் வடிகால்கள் அமைக்கப்பட்டதிலும் நடந்த சுமார் 75 லட்ச ரூபாய் ஊழல் குறித்து “நம்ம ஆட்சியிலா இது நடந்தது?” என்று முதல்வர் ஆச்சர்யப்பட்டதாக சுமார் ஒரு வருடத்துக்கு முன் கல்கியில் எழுதியிருந்தோம். அதைத் தொடர்ந்து சிலர் பணி நீக்கம் செய்யப்பட்டிருந்தாலும், அந்தக் கட்டுரையில் குறிப்பிட்ட கொரட்டூர் பகுதியில் உள்ள வீட்டு வசதி வாரியக் குடியிருப்புப் பகுதியில் நடைபெற்ற சில அட்டூழியங்கள் குறைந்தபாடில்லை!

“மேலும் எக்கச்சக்கமாக அதிகமாயிடுச்சு” என்றபடி விஜயாவுடன் சேர்ந்து குரல் கொடுத்தார்கள் அந்தப் பகுதியில் வாழும் சரஸ்வதி, கோபால், சந்திரசேகர் ஆகியோர்.

“இருபத்து நாலாவது வார்டின் கௌன்சிலர் விஜய்குமார், தலைவர் கிருஷ்ணமூர்த்தி, ஆணையர் சுதர்ஸன் சௌத்ரி என்று அத்தனைப் பேரும் பகுதியின் பொது நலக் காரியங்களை கவனிப்பதில்லை.

“குறிப்பிட்ட வீட்டு வசதி வாரியத்தில் சுமார் பத்தாயிரம் குடும்பத்தினர் வசித்து வருகின்றனர். பெரும்பாலும் நடுத்தர வர்க்கத்தினர். தொடக்கத்தில் வீட்டு வசதி வாரியத்தின் பராமரிப்பில் இருந்த இந்தப் பகுதி அம்பத்தூர் நகராட்சியிடம் ஒப்படைக்கப்பட்ட பிறகு பல பிரச்னைகள். இங்கே அரசுக்குச் சொந்தமான இடத்தில் லாரி லாரியாகக் குப்பைகள் கொட்டப்படுவதால் அந்தப் பகுதி பெரிதும் மாசடைகிறது. இந்த பிரம்மாண்டமான குப்பை மேட்டுக்கு எதிரே உள்ள விளக்குகள் அடிக்கடி உடைக்கப்படுகின்றன – சில பேட்டைக் 'காதலர்'களின் சௌகரியத்துக்காக! முதல் மற்றும் இரண்டாவது தெருக்கள் சந்திக்கும் இடத்





• கோபால்



• விஜயா

தில் மாலையானாலே மக்கள் கடந்து செல்ல பயப்படுகிறார்கள். "சைக்கிளில் வரும் ரௌடிகள் இளம் பெண்களின் மீது கைகளை இஷ்டத்துக்கு விளையாட விட்டு பிறகு சிரித்தபடி சைக்கிளில் பறந்து செல்வது அடிக்கடி நடக்கும் விஷயம்", என்று பதற்றத்துடன் கூறினார்கள் பகுதி மக்கள்.



• சந்திரசேகர்



• சரஸ்வதி



• உண்ணாவிரத மேடையில்...

# நகர ஆட்சியா? நரக ஆட்சியா?

பகுதியின் பல இடங்களில் மேன்ஹோல்கள் இல்லாமலிருக்க, கமிஷனரிடம் கூட்டமாக முறையிட்டபோது, "பார்க்கிறேன்" என்றாராம். "எப்போது அந்தக் குழிகளில் சில குழந்தைகள் விழுந்து இறந்த பிறகா?" என்று கசந்து போய் வெறுப்பின் உச்சியிலிருந்து பேசுகிறார்கள்.

பதினோராவது தெரு, பல குழந்தைகள் நடந்தே சென்றாக வேண்டிய தெரு. காரணம், லிட்டில் ஹோலி ஏஞ்சல்ஸ், விவேகானந்தா ஆகிய இரு பள்ளிக் கூடங்களுக்கும் அதுதான் பாதை. அங்கு சாலை முழுவதும் தேங்கிக் கிடக்கும் குப்பைகளும் சேறும் கொஞ்ச நஞ்சமல்ல. அதில் இளம் மாணவ மாணவிகள் நடந்து செல்வது கொடுமையான காட்சி.

இப்படி பலப் பல குறைகள்.

"பஸ் ரோடுக்கு அருகில் இருக்கிறது என்பதற்காக வீட்டு வரியை ஏகத்திற்கு உயர்த்தியிருக்கிறார்கள். அதற்கும் நாங்கள் தயார் தான். ஆனால் அப்போதாவது இங்கு நாங்கள் படும் தினசரி துன்பம் நீங்கும் என்பதற்கு என்ன உத்தரவாதம்?" என்கின்றனர்.

அது சரி உண்ணாவிரத நாளன்று என்ன நடந்தது?

"பத்து நாட்களுக்கு முன்பே உண்ணாவிரத நோட்டீஸை மாநகராட்சிக்கு அனுப்பி விட்டோம். போலீஸிடமிருந்து மைக் செட்டிற்கும் அனுமதி வாங்கியிருந்தோம். நகராட்சியிடமிருந்து எந்த பதிலுமில்லை என்பது மட்டுமல்ல, அன்று காலை பத்து மணிக்கு அங்கு வந்து சேர்ந்த ஆணையர், நாங்கள் கொடுத்த மனுவை வாங்கிக் கொள்ளாமல், "சாப்பிட்டுவிட்டு வந்து வாங்கிக்கறேன்" என்று சொல்லிவிட்டு அலுவலகத்துக்குள் போனவர் வரவேயில்லை. நாங்களாகச் சென்றுதான் கொடுத்தோம்" எனும் இவர்கள், இன்னமும் முதல்வரிடம் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். விரைவில் தங்கள் அவல நிலை சரிசெய்யப்படவில்லை என்றால், வரிகள் கட்ட மாட்டோம் என்று கூறி நீதிமன்றத்துக்குச் செல்லவும் உத்தேசித்திருக்கிறார்கள். ⭘

— அருண் சரண்யா

படங்கள் : ஸ்ரீஹரி

# சாமிகள் வணங்கும் மனிதர்கள்!



• வி. சி. குழந்தைசாமி

• ரங்கசாமி

**மனிதர்கள், சாமிகளை வணங்குவதில் என்ன விசேஷமிருக்கிறது? இங்கு சில 'சாமி'கள், தங்களுடைய வணக்கத்துக்குரிய மனிதர் யார்? என்று சொல்லுகிறார்கள்.**

**கே.ஏ. கிருஷ்ணசாமி :**

என்னுடைய வணக்கத்துக்குரிய மனிதர் தந்தை பெரியார்தான். அதற்குரிய காரணங்கள் என்று பலவற்றைச் சொல்லலாம். முதலாவது அவரது எளிமை. அடுத்தது, மனதில் பட்டதை, எந்தவிதத் தயக்கமும் இல்லாமல், வெளிப்படையாய்ப் பேசுகிற குணம். சாதாரண மக்களுக்கும், சுலபமாய்ப் புரியும்படியாகப் பேசுகிற திறமை. இவையெல்லாவற்றுக்கும் மேலாக தமது கொள்கைக்கு நேர் எதிரான கொள்கையைக் கொண்டவர்களிடத்தும், அவர் கொண்டிருந்த ஆழமான நட்பும், மரியாதையும். தமது வாழ்க்கைத் துணையை முடிவு செய்கிற முக்கியமான கட்டத்தில், அவர் ராஜாஜியைக் கலந்து ஆலோசித்தது இதற்கு ஒரு உதாரணம்! எங்கள் குடும்பத்துக்கும், பெரியாருக்கும் சுமார் முப்பதாண்டுக் கால தொடர்பு உண்டு என்பதால், அவரை 'அண்மை'யில் கண்டு அதிசயித்த சமயங்கள் பல!

**அ.மா. சாமி ('ராணி' ஆசிரியர்)**

என் வணக்கத்துக்குரிய மனிதர் ஆதித்தனார்தான். 1955-ல், திருச்சியில் தந்தியின் நிருபராகச் சேர்ந்த போதுதான் அவரைச் சந்தித்தேன். என்னைக் குட்டியும், தட்டிக் கொடுத்தும் ஒரு இதழாளராக உருவாக்கியவர் அவர்தான். சில வருடங்கள் திருச்சியில் பணியாற்றிய பின், சென்னைக்கு வரவழைத்தார். தினத்தந்தியின் ஆசிரியர் பொறுப்பை ஏற்கும் அளவுக்குக் காலப் போக்கில் என் உழைப்பின் மூலமும், தொழில் ஈடுபாட்டின் மூலமும் என்னை உயர்த்திக் கொண்டேன். சாமானிய மனிதனுக்கும், எந்த ஒரு செய்தியையும் சுலபமாய்ப் புரியும்படிச் சொல்லுவதுதான் ஒரு பத்திரிகையின் கடமை; வெற்றி என்பது அவர் எனக்குக் கற்றுத் தந்த அரிச்சுவடி.

**புஷ்பவனம் குப்புசாமி :**

கிராமத்து ஆசாமியான நான், இசை

ஆர்வம் காரணமாய், சென்னை அரசு இசைக் கல்லூரியில், பி.ஏ. (மியூசிக்) சேர்ந்தேன். மூன்றாமாண்டு இறுதித் தேர்வு. என்னால், தேர்வுக் குழுவினரின் எதிர்பார்ப்பு லெவலுக்கு, கர்நாடக இசை ராகங்களைப் பாட முடியவில்லை. தேர்வாளர்களுக்கு ஏமாற்றம். ஆனால், இசைக் கல்லூரி முதல்வரான டாக்டர். சீதா, என் சார்பாக அவர்களிடம் பேசினார். ஒரு கிராமத்துப் பின்னணி கொண்ட இளைஞரால், இந்த அளவுக்குக் கர்நாடக இசை பாடுவது என்பதே வெகு சிரமம். எனவே, இவரை பெயிலாக்கி, இவரது ஆர்வத்துக்குத் தடைபோட்டு விடாதீர்கள் என்று சுமார் ஒரு மணி நேரம் போலப் பேசினார். நான் பி.ஏ. பாஸ் பண்ணி விட்டு, அதன் பின், எம்.ஏ., எம்.பில், பி.ஹெச்.டி. என்று பல படிகளைக் தாண்டியதற்கு அடித்தளம் அமைந்துக் கொடுத்த டாக்டர். சீதாதான் என் வணக்கத்துக்குரியவர்.

• கே. ஏ. கிருஷ்ணசாமி

**டி.வி. ரங்கசாமி (ரகமி) பத்திரிகையாளர் :**

"நான் ஆரணி அரசு உயர்நிலைப் பள்ளியில் ஐந்தாவது ஃபாரம் படித்துக் கொண்டிருந்த சமயத்தில் பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியராக இருந்த திரு. ஏ. பாலசுந்தர முதலியார்தான்! அவருக்கு இலக்கிய ஆர்வமும் அதிகம். பள்ளிகளில் மாணவர்களைக் கொண்டே கையெழுத்துப் பத்திரிகை நடத்த வேண்டும் என்று உத்தரவு வந்தபோது, ஆரணி பள்ளியில் படித்த ஆயிரத்து இருநூறு மாணவர்களில் என்னைக் கூப்பிட்டு, அந்தப் பொறுப்பை ஒப்படைத்தார். பத்திரிகையாளனாக இன்று நான் இருப்பதற்கு வித்திட்டவர் அவர்தான்.

• சோ

• ஆ. மா. சாமி

**சா. கந்தசாமி (எழுத்தாளர்) :**

அவரை வள்ளலாருக்கு ஒப்பிடலாம். ஆனால் வள்ளலார் மனித நிலையிலிருந்து, தெய்வீக நிலையை அடைந்து விட்டதால், அவரது வடிவமான இவரை நான் எனது வணக்



• சா. கந்தசாமி

கத்துக்குரிய மனிதராக – அல்ல – மாமனிதராய் – "மகாத்மா"வாகக் கருதுகிறேன்! ஆம்! மனிதகுலமே வணங்குதற்குரிய தகுதி படைத்தவர் மகாத்மா காந்திஜி!

**சோ ராமசாமி :**

என் வணக்கத்துக்குரியவர்கள் ஒருவர், இருவர் அல்லர்! அவர்கள் என் மனதுக்குள்ளேயே இருந்து விட்டுப் போகட்டும். எதற்காக வெளியில் சொல்ல வேண்டும்? என்னை விட்டு விடுங்கள்!

**வி.சி. குழந்தைசாமி :**

வாழ்ந்த காலத்திலும், அதனினும் பல மடங்கு அதிகமாக அவர்கள் மறைந்த பின்னரும் என் ஆழ்மனத்தின் அடித்தளத்தில் கோவில் கொண்டிருப்பவர்கள் என் பெற்றோர். கையெழுத்துப் போடும் அளவுக்குப் படித்தவர் என் தந்தை. கையெழுத்துப் போடவும் தெரியாதவர் என் தாய். அவர்கள் கண்டது கல்லும், முள்ளும் நிறைந்த காடு, மேடுதான். பல்கலைக்கழகம் என்பதெல்லாம் அவர்கள் கேட்டும் அறியாதது. ஏதோ ஓர் உள்ளுணர்வின் உந்துதல் காரணமாக, தம் மகன் படிக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் பல தியாகங்கள் புரிந்தவர்கள். அப்படி அவர்கள் எனக்களித்த படிப்பு முடிந்ததும், அதன் பயனைக் காணக் கொடுத்து வைக்காமல், ஒருவர் பின் ஒருவராக, ஒரு மாத இடைவெளியில் மறைந்தவர்கள். அப்படிப்பட்ட என் தந்தையார் வி. செல்லப்ப கவுண்டரும், தாயார் மாரம்மையுமே என் வணக்கத்துக்குரிய மனிதர்கள்!

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

---

## ஒரு வெங்காய பேட்டி



• ரமா

வெங்காயத்தை முன்னிருத்தி தேர்தல் பிரசாரம் துவங்கி விட்டது. டெல்லியில் சில பிரமுகர்கள் 'வெங்காயத்திலே தொண்ணூறு சதவீதம் நீர்தான்; பத்து சதவீதம் மட்டுமே சத்து. எனவே, வெங்காயத்தை பகிஷ்கரியுங்கள்' என்று பிரசாரம் செய்கிறார்கள். வெங்காயத்தை பகிஷ்கரிப்பது சாத்தியம் தானா? இரு குடும்பத் தலைவிகளை அவசரமாகப் பிடித்துக் கேட்டோம்.

ரமா : வெங்காயத்தில் தொண்ணூறு சதவீதம் தண்ணீர்; பத்து சதவீதம் சத்து என்பதெல்லாம் வீண் வாதம். அப்படிப் பார்த்தால் பெரும்பாலான காய்கறிகளில் பெரும்பகுதி தண்ணீர்தான். எனவே, எல்லாக் காய்கறிகளையுமே ஒதுக்கி விடுவதுதானே! ரஷ்ய மன்னன் ஒருவன், பஞ்சத்தின் போது, ரொட்டி இல்லாவிட்டால் என்ன? கேக் சாப்பிட வேண்டியதுதானே? என்றானாம்! அது போன்றதுதான், வெங்காயம் வெறும் தண்ணீர் என்ற வாதமும்!

ரத்னா : தக்காளி இல்லாமல் கூட இருந்து விடலாம்; ஆனால் வெங்காயம் இல்லாமல் என்ன செய்வது? நம் ஊரில் மக்களுக்கு இதனால் பெரிய அளவில் பாதிப்பு இருக்காமல் போகலாம்! வடக்கே நிலவும் சப்பாத்தி கல்சரில், வெங்காயம் இல்லாமல் என்ன செய்ய? அதனால்தான் மலிவு விலையில் வெங்காயம் வழங்கும் ரேஷன் கடைகளில் நீண்ட க்யூ! ஐந்து கிலோ வெங்காயத்தை மூன்று இளைஞர்கள் திருடியதைக் கூடப் பெரிய கொள்ளை போல டி.வி.யில் காட்டினார்கள்!



• ரத்னா

— மானஸா

# ஒரு வித்தியாசமான துறவி!



• ஃபாதர் லூர்துராஜ்

மதுரை செயின்ட் மேரீஸ் மேல்நிலைப் பள்ளியில் உதவி தலைமை யாசிரியராகவுள்ள ஃபாதர் லூர்துராஜ், 1963-ல் இயேசு சபையில் சேர்ந்து 1976-ல் துறவியாக 'குருப்பட்டம்' பெற்றவர். ஆனால் 'இஸ்லாம்' மீதும் மிகுந்த பற்று கொண்டு, இஸ்லாமியர்களைப் போல தாடியும் வளர்த்திருக்கிறார்!

"சிறு வயதில் திருச்சி பாலக்கரைப் பகுதியில் நான் வசித்தபோது பள்ளிவாசலில் ஓதுதல் ஒலி என்னைக் கவர்ந்தது. எனது தந்தைக்கு இஸ்லாமிய நண்பர்கள் அதிகம் என்பதால் அவர்களின் வழிபாட்டு முறைகள், பழக்க வழக்கங்கள் எனக்குத் தெரிய வந்தன. அவை என்னைக் கவர்ந்தன. நிறைய இஸ்லாம் நூல்களைப் பயில ஆரம்பித்தேன். இஸ்லாமியர்களைப் போலவே தாடியும் வளர்க்கத் துவங்கினேன். வாணியம்பாடி, வேலூர், தஞ்சாவூர், இளையனூர் போன்ற இடங்களில் உள்ள 'ஆலிம்' பட்டம் பெற்ற இமாம்களின் தொடர்பு கிட்டியதால் இஸ்லாம் பற்றி மிக ஆழமாக அறிந்து கொள்ள முடிந்தது" என்று குறிப்பிடும் ஃபாதர் லூர்துராஜ், 'கிறிஸ்தவ, இஸ்லாமிய உறவு முறை' என்ற தலைப்பில் ஆராய்ச்சியும் செய்து முடித்துள்ளார்.

கிறிஸ்தவ – இஸ்லாம் மதங்களிலுள்ள ஒற்றுமைகளாக "கடவுள் ஒருவரே; இறைத் தூதர்கள் வருகை; வானதூதர்கள் குறித்த நம்பிக்கை; தீயசக்திகள் உண்டு; இறப்பிற்குப் பின் மறுவாழ்வு; இறைவனின் அடுத்த வருகை; பாவிகளை மன்னித்தல்" ஆகியவற்றைக் குறிப்பிடும் ஃபாதர் லூர்துராஜ், இரண்டு மதங்களுக்கிடையே உள்ள முரண்பாடுகளையும் குறிப்பிடத் தவறவில்லை.

"இயேசு சிலுவையில் அறையப்பட்டது வரலாற்றுண்மை. ஆனால் இயேசு இறைவனால் காப்பாற்றப்பட்டு விட்டதாகக் குரான் கூறுகிறது. இறைவனே மனிதனாகப் பிறந்த வடிவம்தான் இயேசு என்கிறது பைபிள். ஆனால் 'இயேசு வெறும் இறைத் தூதரே' என்று குறிப்பிடுகிறது குரான்..." என்று சின்னப் பட்டியலைத் தருகிறார் அவர்.

"கிறிஸ்துவத்தில் கடவுள் பிதா, சுதன், தூய ஆவி என மூன்று வடிவங்களாய் சித்திரிக்கப் படுகிறார். இந்து மதத்தில் ஆதி சக்தி பிரம்மா, சிவன், விஷ்ணு என்று மூன்று வடிவங்களாய் சித்திரிக்கப்படுகிறது. இரு மதங்களுமே கடமையைச் சரிவர நிறைவேற்றுவதையே வற்புறுத்துகின்றன" என்று கிறிஸ்தவ – இந்து மதங்களின் ஒற்றுமையைக் குறிப்பிடும் அவர், "இந்து மதம் குறித்து இதுவரை ஆழமாக அறிய வில்லை" என்று குறையோடு கூறுகிறார்.

கத்தோலிக்கத் துறவியாய் இருந்து கொண்டு, இப்படி இஸ்லாம் மீது பற்றுடன் (தாடியுடனும்) இருப்பதை இயேசு சபை கண்டிக்கவில்லையா?

"இல்லவே இல்லை" என்கிறார் ஃபாதர் லூர்துராஜ்.

"கத்தோலிக்க மதத்திலுள்ள பல்வேறு துறவற சபைகளில் இயேசு சபைதான் துறவிகளுக்கு அதிக சுதந்திரம் வழங்குகிறது. யாரிடம் எந்தத் திறமை உள்ளதோ, எந்தத் துறையில் ஆர்வமுள்ளதோ, அந்தத் துறையில் அவர்கள் முன்னேற இயேசு சபை தோள் கொடுத்து உதவும். மதத்திற்காக மனிதன் இல்லை; மனிதனுக்காகத் தான் மதம்" என்கிறார்.

குஜராத்தில் பைபிள் எரிக்கப்பட்டதை வேதனையோடு நினைவூட்டிய அவர், "பைபிளை ஓர் இலக்கிய நூல் என்கிற ரீதியிலும், அதுவும், குரானும் கூட 'சரஸ்வதியின் கொடை'தான் என்றும் ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது?" என்று கேட்கிறார்! ○

— 'கிரண்நியூஸ்' சரவணன்



• எதற்கும் பரிசல் பயணம்தான்

குழந்தைகள் பள்ளிக்கூடம் போகணுமா? நிச்சயதார்த்தம், கல்யாணம்ன்னு கூட்டமா வெளியூர் போகணுமா? சந்தைக்கு, ஆஸ்பத்திரிக்கு, வேலைக்கு என்று எப்படிப் போனாலும் பரிசல் இல்லாமல் போக முடியாத கிராமத்தைப் பார்த்திருக்கிறீர்களா?

கோவை மாவட்டம் மேட்டுப்பாளையம் புகழ் பெற்ற வனபத்ரகாளியம்மன் கோயிலை ஒட்டி ஓடும் பவானி ஆற்றைப் பரிசலில் கடந்து, பிறகு ஒன்றரைக் கி.மீ. பொடி நடையாய் நடந்தால் பசுமையாய்த் தெரிவது நெல்லித்துறை கிராமம். காரமடை ஊராட்சிக்குட்பட்ட தனிப் பஞ்சாயத்து. தமிழ் சினிமாக்களில் பரிசல் காட்சிகளெல்லாம் பதிவு செய்யப்படும் இடம்.

இங்கே 'பாலம்' என்றொரு வார்த்தையை உதிர்த்தால் போதும், மக்கள் குமுறுகிறார்கள்.

"தொடர்ந்து மூன்று எம்.பி., எம்.எல்.ஏ. எலக்ஷனைப் புறக்கணிச்சோம் சார். பாலம் வராம வோட்டுப் போட மாட்டோம்ன்னு வைராக்யமா இருந்த எங்கள் உறுதியை உடைச்செறிஞ்சவர் இப்போதைய கோவை மேயர் கோபால கிருஷ்ணன். போன தேர்தலுக்கு முந்தின தேர்தலில் இங்கே (மேட்டுப்பாளையம் தொகுதி) எம்.எல். ஏக்குப் போட்டியிட்டவர், தம் சொந்தச் செலவில் பாலம் கட்டித் தர்றதா வாக்குறுதி கொடுத்தார். எங்களுக்கு நம்பிக்கை யூட்டற மாதிரி நோட்டீஸ் அச்சடிச்சு விநியோகித்தார். நாங்களும் வைராக்யத்தை விட்டு, நம்பி வோட்டுப் போட்டோம். அதை வாங்கிட்டுப் போனவர், போனவர்தான்...!"



• கலெக்டர் சந்தானம்

• பஞ்சாயத்துத் தலைவர் சீனிவாசன்

– பஞ்சாயத்துத் தலைவர் சீனிவாசன் நம்முடன் கூடவே வந்து ஊரின் நிலைமைகளை எடுத்துரைத்தார்.

"எமர்ஜென்ஸிக்கு முந்தியிருந்த கலைஞர் ஆட்சியில் பில்லூர் 'டமான் டேம்' வருவதாக இருந்தது. அதற்காக இப்பகுதி முழுக்க மெட்டல் ரோடும் போட்டு முடிச்சாங்க. அதுக்குள்ள ஆட்சி கலைஞ்சாச்சு. அப்புறம் அந்தத் திட்டமும் அம்பேல். இங்கிருந்து பில்லூர் ஏழு கி.மீ.தான். அது இந்த நெல்லித்துறை பஞ்சாயத்தைச் சேர்ந்ததுதான். ஆனா அதுக்குக் காரமடையிலிருந்து பஸ் போகுது. காரமடைக்கும் பில்லூருக்கும் 40 கி.மீ. அதுவே இங்கே பாலம் கட்டினாப் போதும். 25 கி.மீ. குறையும். பஸ் போகும். எங்க ஊர் தொழிலும் பெருகும்..." – என்றார் சீனிவாசன் தொடர்ந்து.

இங்கிருந்து தினம் ஒரு லட்சம் ரூபாய் மதிப்புள்ள காய்கறிகள் மேட்டுப்பாளையம் மார்க்கெட்டிற்குச் செல்கிறதாம். அது தவிர்த்து தேங்காய், பாக்கு என இதர விவசாயப் பொருட்களும், பால் (சுமார் 3000 லிட்டர்) மற்றும் கால்நடைகள் (ஆடு, மாட்டுக் கன்றுகள்) கூட பரிசலில் பயணிக்கும்.



# பாலத்திற்கு தவிக்கும் பரிசல் கிராமம்!

(வெள்ளம் குறையும் நேரங்களில் டிராக்டர்). நூற்றுக் கணக்கில் பள்ளிக் குழந்தைகள் உட்பட தினசரி குறைந்தது 3000 பேர் பரிசலைப் பயன்படுத்துவதாகச் சொல்லுகிறார்கள்.

இவ்வூர்த் தலைவர் (பாலத்துக்காக ரொம்பவும் போராடியவர்) என்.கே. ரகுநாதன் சமீபத்தில் வெளியூர் ஆஸ்பத்திரி ஒன்றில் இறந்து போக, அவர் உடலை சொந்த ஊருக்குக் கொண்டு வரப்பட்ட அவஸ்தையைச் சொல்லிச் சொல்லி மாய்கின்றனர்.

எதனால்....?

சடலம் ஏற்றி வந்த பரிசல் அடுத்த நாளே ஓட்டை விழுந்து விடும் என்று நம்பிக்கை. அனுபவமும் கூடவாம். அதனால் அதனை உடனே பிரித்தெறிந்து விட்டுப் புதிய பரிசல் கட்டி விடுகிறார்கள். இதன் காரணமாகவே சடலத்தைப் பரிசலில் கொண்டு வர 1750 ரூபாய் வசூலிக்கிறார்களாம்!

இங்குள்ள ஆரம்பப் பள்ளிக்கு இரண்டே ஆசிரியர்கள். 71 மாணவ மாணவிகள். நாம் சென்றிருந்தபோது ஓர் ஆசிரியர் மட்டும்! ஆசிரியை மட்டும் ஐந்து வகுப்புகளுக்கும் பாடம் எடுத்துக் கொண்டிருந்தார்.

நெல்லித்துறை மக்களின் நீண்டகாலக் கோரிக்கைக்குக் கிடைத்தப் பகுதி நேர ரேஷன் கடைக்கு, வாரத்தில் இரண்டு நாட்களே வேலை. நாம் சென்றிருந்த நாள் வேலை நாள்தான் என்றாலும் 11.30 மணி ஆகியும் அது பூட்டப்பட்டே இருந்தது.

"என்ன ஆச்சு...?" என்று கேட்டபோது –

"கலெக்டர் புண்ணியத்தில் கடை வந்ததே பெரிசு. கடைக்காரர் எப்ப வந்தா என்ன சார்? எப்படியும் வந்திருவார். அவரும் பஸ் பிடிச்சு, பரிசலேறி, நடந்து வர வேண்டாமா?"

உடனுக்குடன் பதில் தந்த இளைஞர்களிடம் கிண்டலா, சகிப்புத் தன்மையா?

இத்தனை சிக்கலுக்கும் காரணமாய் இருக்கும் பாலம் எப்போது கட்டப்படும்? என கோவை மாவட்டக் கலெக்டர் ஜி. சந்தானம் அவர்களிடம் கேட்டோம்.

"நெல்லித் துறை பாலம் ஹைவே ஓர்க். நீண்ட காலமாக இருக்கக் கூடிய பிரச்னை. அதற்கு அதிக செலவு பிடிக்கும் என்பதாலேயே உடனடியாகச் செய்ய முடியவில்லை. இப்போது மினிமம் பட்ஜெட்டாக எண்பது லட்சம் போட்டு, அரசு ஒப்புதலுக்காக அனுப்பியுள்ளோம்!" என்றார்.

கட்டுரை, படங்கள் :
**கா.சு. வேலாயுதன்**

# ஜோசியம் பலவிதம்!

ரெண்டு, மூணு வாரம் முன்னால நான் Announce பண்ணியிருந்த ஒரு பக்கச் சிறுகதைப் போட்டிக்குப் பிரமாதமா என்ட்ரீஸ் ஒண்ணும் வரலை. இதுக்கு ரெண்டு காரணங்கள்தான் இருக்க முடியும்னு நினைக்கறேன். 1. எல்லாரும் கல்கி நூற்றாண்டு விழாப் போட்டிகள்ல பிஸியா இருக்கணும். 2. என் ரசிகர்களுக்கு சிறுகதை மேல அவ்வளவா ஒரு இது இல்லை.

இந்த லட்சணத்துல, 'சுமி நீ ஏன் ஷார்ட் ஸ்டோரி எழுதக் கூடாது'ன்னு அடிக்கடி ஹைதராபாட் லாவண்யா தொணப்பிக்கிட்டே இருக்காங்க. எதுக்கு மேடம் வம்பு? இருக்கற ஒண்ணே முக்கால் லட்சம் ரசிகர்களை இழக்கவா?

Any how, வந்திருந்த கதைகள் பத்தி ஒரு பேராவாவது சொல்லணும். மொத்தம் அஞ்சு கதைகள். (லாவண்யா உட்பட) எதுவும் ஒரு பக்கத்துல அடங்கறா மாதிரி இல்லை – சைஸும் சரி; விஷயமும் சரி. ரெண்டாவது விஷயம், 'Respected Sir, with reference to your letter dated....'ங்கற மாதிரி எல்லா கதைகளும் எதிர்பார்க்கக்கூடிய சம்பிரதாய வடிவம் + தீம் + முடிவோட இருந்தது. சுமியோட தாரக மந்திரமே 'Something different'ங்கறதால எந்தக் கதையையும் நான் பப்ளிஷ் பண்ணப் போறதில்லைங்கறதை வருத்தத்தோட தெரிவிச்சுக்கறேன்.

* * *

இந்த வாரம் முழுக்க சரியான மழை. (நியூஸ் பேப்பர்ல 'இன்று மழை பெய்யும்'னு போட்ட தினங்கள் தவிர.) வருஷக்கணக்கா அழுக்குப் படிஞ்சு கிடந்த மெட்ராஸை அலம்பி விட்டாமாதிரி இருக்கு. மரம், வீடு, மாநகரப் பேருந்து, போலீஸ் ஸ்டேஷன், குப்பை லாரி எல்லாத்துக்கும் ஒரு கட்டாயக் குளியல். அஸ்க் அஸ்க்னு தும்மிட்டே மழைல ஒரு ஜாலி ரைட் போறது எனக்கு ரொம்பப் பிடிக்கும். பட், என் மூஞ்சூறு வாகனத்தை வெளிய எடுக்க முடியலை. ("சும்மா எச்சு துப்பினாலே உன் வண்டி நின்னுடும்"னு கிண்டல் பண்ணுவான் என் ப்ரெண்ட் ரங்கராஜன்.) ஸ்பார்க் ப்ளக்ல தண்ணி நுழையாத மாதிரி மொபெட்டை டிவிஎஸ் மாதிரி யாராவது தயாரிச்சா முதல் கஸ்டமரா நான் இருக்கத் தயார்.

லாஸ்ட் சண்டே, மழை பிச்சி உதறிட்டிருந்தப்ப, வீட்டுல பொழுதுபோகாம ஒரு வேலை பண்ணிட்டிருந்தேன். பழைய சுபமங்களா இஷ்யூஸ்லேருந்து பேட்டிகளை மட்டும் தனியா கட் பண்ணி எடுத்து, பைண்ட் பண்ற உத்தேசம். அப்ப, எதோ ஒரு பேட்டில ஒரு கேள்வி, சட்டுனு கண்ணுல பட்டுது. 'உலகத் தரமான இலக்கியங்கள் ஏன் இதுவரை தமிழ்ல வரலை?' (அல்லது, சமகால தமிழ் இலக்கியம்

## சுமி சூப்பர் மார்க்கெட்!

எதுவும் ஏன் இன்னும் உலக அளவுல பேசப்படலை.)

இதுக்கு பதில் : "இங்க போராட்டமே இல்லை. போராட்டம் இருக்கற இடத்திலேருந்துதான் நல்ல இலக்கியம் வரும். உதாரணத்துக்கு ஸ்ரீலங்கா, சிலி..."

இதுல ஓரளவு நியாயம் இருக்கறதை ஒத்துக்கலாம். பட், இங்க ஒரு பெரிய சுதந்தரப் போராட்டம் நடந்திருக்கு. சுதந்தரத்துக்குப் பின்னால ரேஷன் சர்க்கரைக்கு, சர்க்கார் உத்தியோகத்துக்கு, அட்மிஷனுக்கு அப்படி இப்படின்னு இன்னும் பல இருந்துட்டேதான் இருக்கு. சாதி சமாசாரத்தை விடவா?

மோசமான லிட்ரேச்சர், நல்ல லிட்ரேச்சர், சிறந்த லிட்ரேச்சர், மிகச் சிறந்த லிட்ரேச்சர்னு பிரிச்சிப் பிரிச்சிப் பார்த்தாலும் நிச்சயம் கணிசமா தேறியிருக்கணும்னுதான் தோணுது. ஏன் இல்லை?

நம்ம மொழிகள்ல செய்யப்படற சாதனைகள் வெளி உலகத்துக்கு சரியா அறிமுகப்படுத்தப் படறதில்லைங்கறது தான் காரணம்னு நினைக்கறேன். தேவை : திறமை உள்ள மொழிபெயர்ப்பாளர்கள்.



* * *

**ஜோ**சியம் நிஜமா?

தேக ஆரோக்கியம், ப்ரயாண அனுகூலம், மித்ரர்களால் நன்மை - இதெல்லாம் எவ்வளோ தூரம் நிஜம், எவ்ளோ சப்ஸான்னு ஆராய்ச்சி பண்றதை விட, இதைப் பத்தி வேற சில சுவாரஸ்யமான விஷயங்களைத் தெரிஞ்சிக்கலாம்.

ஜோசியம் பார்க்கறது, நம்ம நாட்டுல மட்டும் இல்லை. உலகம் முழுக்க இந்த வழக்கம் உண்டு. அர்ஜென்டைனால ஒரு வகை 'குச்சி ஜோசியம்' ரொம்பப் பிரபலமாம். அதாவது, ஒரு சின்ன குச்சியை ஒருத்தர் மூக்கின் வலது துவாரத்துக்கிட்ட வெச்சிக்கிட்டு 'குறுகுறு' பண்ணினா அந்த ஆளோட முகபாவம் எப்படி மாறும்ங்கறதைப் பார்த்து, அவனோட குணாதிசயங்களைச் சொல்லி, நல்லது கெட்டதுகளை லிஸ்ட் போடற கோஷ்டி இருக்காம்.

பாகிஸ்தான்ல தகடு ஜோசியம். ஒரு தகரத் தகடுல பேர், ஊர், படிப்பு மாதிரி சில விஷயங்களை பிளேடால கீறி வெச்சி அதைப் பட்டுத் துணியால மூடிடுவாங்களாம். அந்தத் தகட்டு மேல உங்களை உட்காரச் சொல்லிட்டு, ஜோசியர் கண்ணை மூடி சில மந்திரங்கள் சொல்லுவார். தென், கடகடன்னு உங்க எதிர்காலத்தையும் சொல்லிடுவார்! ஃபீஸைக் கொடுத்துட்டு, அந்தத் தகடையும் அவர் கிட்டவே கொடுத்துட்டுப் போயிடணும். சுமார் ஒரு வருஷம் கழிச்சு அவர் சொன்னது எதுவும் நடக்காட்டா, வந்து சட்டையைப் பிடிக்கலாம். தகடை ரெஃபர் பண்ணிப் பார்த்து, பரிகாரம்(!) சொல்றதோட கூட, நீங்க முன்ன குடுத்த ஃபீஸையும் திரும்பக் குடுத்துடுவாங்களாம்!

ஆப்பிரிக்கப் பழங்குடி இனத்துல ஒரு குறிப்பிட்ட வகையில குறி சொல்றவங்க, நெருப்புத் தணல் மேல நின்னுக்கிட்டுதான் சொல்வாங்களாம். சப்ஸா விட்டா நெருப்பு சாப்ட்டும்ங்கற பயத்தோட அவர் சொல்வார். இத்தனை உக்கிரமா குறி சொல்றவர், பொய் சொல்ல மாட்டார்ங்கற நம்பிக்கைல மக்களும் அதை ஏத்துக்கிட்டு இழை பிசகாம நடப்பாங்களாம்! ●

— சுமி



• மெக் ஈவன்

# 'டிரைவர்' ஜெயித்தவர்!

லண்டன் பஸ் டிரைவர் மேக்னஸ் மில்ஸ் எழுதிய 'த ரெஸ்ட்ரெய்ன்ட் அஃப் பீஸ்ட்ஸ்' என்ற நாவலுக்குத்தான் இந்த வருட புக்கர் பரிசு கிடைக்கப்போகிறது என்று கடைசி வரை பேசப்பட்டது.

ஆனால் பரிசைத் தட்டிக் கொண்டு போனவர் பிரிட்டிஷ் நாவலாசிரியர் இயான் மெக் ஈவன் *(50)*. நாவலின் தலைப்பு: 'ஆம்ஸ்டர்டாம்'. ஒரு வெற்றிகரமான இசையமைப்பாளர், ஒரு வெளியுறவுச் செயலர், ஒரு தினசரிப் பத்திரிகை ஆசிரியர்- மூவரையும் வைத்து எழுதப்பட்ட சுவாரசியமான நாவல்தான் 'ஆம்ஸ்டர்டாம்'. ஆனால் இதைத் தேர்ந்தெடுப்பதற்குள் நடுவர்கள் கொஞ்சம் திணறித்தான் போனார்கள். காரணம், 'இதில் என்ன பிரமாதமாய் இருக்கிறது? நிறைய பம்மாத்து வேலைகள்... சினிமா டைப் கதைப் போக்கு!' என்று பல விமர்சகர்கள் வரிந்து கட்டிக்கொண்டு இந்த நாவலை விளாசித் தள்ளியிருந்தார்கள்.

ஆனால் கடந்த இரண்டு வருடங்களாகவே இவர் பெயர் 'புக்கரு'க்கு சிபாரிசு செய்யப்பட்டிருந்தது. அதிலும் இவரது நாவல் 'என்ட்யூரிங் லவ்' என்ற நூலுக்கு நிச்சயமா பரிசு கிடைத்து விடும் என்றே சென்ற வருடம்கூட எல்லாரும் எதிர் பார்த்தார்கள். கிடைக்கவில்லை.

இந்த வருடம் பஸ் டிரைவர் மேக்னஸ் மில்ஸ் எழுதிய நாவலுக்கு புக்கர் பரிசு கொடுத்து விட்டால், ஏதோ அந்தப் பரிசுக்கே இழிவு உண்டாகிவிடும் என்கிற மாதிரி ஒரு பரபரப்பான பிரசாரம் செய்யப்பட்டதுதான் இந்த வருட புக்கர் பரிசு நியூஸ்.

''ஒரு பஸ் டிரைவர் நாவல் எழுதிப் பரிசு பெற முடியுமானால், யார் வேண்டுமானாலும் எழுதிப் பரிசைத் தட்டிக் கொண்டு போய்விடலாம் போலிருக்கிறதே!'' என்ற அளவுக்கு பிரிட்டிஷ் இலக்கிய வட்டாரத்தில் பேச்சுக்கள் தரம் தாழ்ந்து போயிற்றாம்! 'எழுதுவது என்பதே ஏதோ உயர்வான, மேட்டுக்குடி சமாசாரம் என்பது போலவும், அதில் ஒரு பஸ் டிரைவர் ஈடுபடுவது என்பது அபசாரம் போலவும் ஒரு வகையில் சித்திரிக்கப்பட்டதுதான் வேதனையான விஷயம். நாவலின் தரத்தைப் பற்றி விவாதிக்காமல், எழுதியவரின் பின்னணி பற்றி விவாதம் நடந்ததுதான் வேடிக்கையாய் இருந்ததாம்!

ஆனால் புக்கர் பரிசு பற்றிப் பேசும்போது, இதுமாதிரி இந்த முப்பது வருடங்களில் பல சுவாரசியமான சம்பவங்கள் நிகழ்ந்திருப்பதாகச் சொல்லுகிறார் அதன் தற்போதைய நிர்வாகி மார்ட்டின் காஃப்.

எது எப்படியோ, இயான் மெக் ஈவனுக்கு இந்த வருடம் புக்கர் பரிசு கிடைத்ததில் ஏமாற்றம் அடைந்து போன இன்னொரு பிரபல பிரிட்டிஷ் நாவலாசிரியையும் இருக்கிறார். பெயர் பெயின்பிரிட்ஜ். ஐந்தாவது தடவையாக இவர் பெயர் சிபாரிசுக்கு வந்தும்கூட பாவம், ஒரு வருடமும் இவருக்கு அதிர்ஷ்டக் காற்று அடிக்கவில்லை!

— சித்தார்த்




✉ "போர்க் கருவியாகும் கல்வி" தலையங்கம் கண்டேன். உபநிஷத், வேதங்களின் முக்கியத்துவத்தை உணர்த்தும் பாடத்திட்டம் என்றால் அதிர்ச்சியாக இருக்கிறது என்று நீங்கள் எழுதியிருப்பதுதான் அதிர்ச்சியாக இருக்கிறது. எதற்கெடுத்தாலும் 'மதச் சார்பற்ற' என்ற வார்த்தை வாதம். வேதங்களும் உபநிஷத்களும் நம் நாட்டின் அரிய பொக்கிஷங்கள் ஆகும். நம் நாட்டுப் பெருமையை நாமே உணராமல் நம் நாட்டுக் கலாசாரத்திற்கு எது தேவை என்பதை யாரோ எங்கோ யுனெஸ்கோவில் (UNESCO) சொல்லி அதை நாம் செய்ய வேண்டும் என்று தாங்கள் சொல்வது தான் அதிர்ச்சி.

சென்னை – 116,
என். ராஜேஸ்வரி.

✉ "போர்க் கருவியாகும் கல்வி" என்ற தங்களது தலையங்கம் மத்திய அரசின் கல்விக் கொள்கையைப் பற்றிய மிகச் சரியான ஆய்வு. 1957-ல் கேரளத்தில் இம்மாதிரி முயற்சியில் ஈடுபட்டதால்தான் நம்பூதிரிபாடு அரசு கவிழ்ந்தது. எதையும் யார் மீதும் திணிக்கக் கூடாது என்பதுதான் நாகரீகத்தின் முதல் பாடம்.

கோவை – 42, கலை. அரசு.

✉ கூட்டுறவுத் தேர்தல்களில் பல இடங்களில் நடைபெற்ற முறைகேடுகளைச் சுட்டிக்காட்டி கருத்துக்களை வெளியிட்டிருப்பவர் தி.மு.க. கூட்டணிக் கட்சியின் முக்கிய தலைவரும், பொறுப்புள்ள எதிர்க்கட்சித் தலைவருமாவார். தவறுகளைச் சுட்டிக் காட்டினால் திருத்திக் கொள்வோம் என்கிற கலைஞர், உடனடியாக சோ.பா.வின் குற்றச்சாட்டுகளுக்குத் தீர்வு காண்பாரா?

கோவை–14,
ஏ.எஸ். இராமசாமி

✉ 'இராவணன் ஆவாரா கலைஞர்?' சாருகேசியின் கற்பனை படித்து சிரித்துச் சிரித்து வயிறு வலித்து விட்டது!

சிதம்பரம் –1,
ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ துப்பாக்கி சுடும் வீரர் ஜஸ்பால் ராணாவிற்கு நேர்ந்திருக்கும் சோதனையை நினைத்து என்ன செய்வதென்றே தெரியவில்லை. ஒரு சிறந்த சாம்பியனுக்கே, நம் நாட்டில் தரப்படும் மரியாதையை நினைத்து வேதனைப்படுகிறேன்.

திருமானூர்,
ஏ.ஆர். மார்ட்டின்.

✉ 'லாட்டரிச் சீட்டு வாங்காத லட்சாதிபதி'– ஒரு வித்தியாசமான - விவரமான– வியப்பான தகவல் ஆகும். முயற்சிக்கும் உழைப்புக்கும் முன்னுதாரணம் காட்டி, வீட்டு உதவியாளர் கல்பனாவை அட்டையில் வெளியிட்டது மிகவும் பொருத்தம்.

பெங்களூர்–47,
மு. புஷ்பராசன்.

✉ மருத்துவமனை அருகில் இல்லாத நிலையில், கணவனை இழந்த சுபாஷிணி, கிராமத்தில் நிலம் வாங்கி, அதை மருத்துவமனையாக்கி, இலவச மருத்துவ சிகிச்சை அளிப்பது பாராட்டத்தக்கது. பெரிய எண்ணங்கள் பெரிய விளைவுகளைத் தோற்றுவிக்கின்றன.

சென்னை–73,
கே. வி. ராமன்.

✉ குகன் எழுதிய 'அரவிந்தனு ஒரு நண்பன்' சிறுகதை நல்ல தேர்வு. மூன்று தலைமுறை ஆண்களையும் அவர்களின் ஆணாதிக்க குணாதிசயங்களையும் அப்பட்டமாகத் தோலுரித்துக் காட்டியது!

சென்னை–41,
ந. வந்தியக்குமாரன்.

✉ 'ஆட்டி வைக்கப் போகிறார் அம்மா' – அதற்குள் 'அந்த அம்மா அல்ல' என்ற அடைப்புக்குறி! ஆனாலும் உங்களுக்கு இருக்கும் குறும்புக்கு அளவே இல்லை!

மதுரை–9,
இரா. கல்யாண சுந்தரம்.

வட்டமேஜை

காவிரிப் பிரச்னையே ஓய்ந்தாலும் கர்நாடக ஜனதா தளத்தில் குடுமி பிடிச் சண்டைகள் ஓயாது போலிருக்கிறது. தேவே கௌடாவுக்கும் கர்நாடக முதல்வர் ஜே.எச். பட்டேலுக்குமிடையேயான உறவில் நாளுக்கு நாள் விரிசல் அதிகமாகிக் கொண்டே போகிறது. இந்த 'டைடானிக் ஸ்பெஷல் ஷோ'வில் எப்போது கிளைமேக்ஸ் என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் கர்நாடக மாநில எதிர்க்கட்சிக்காரர்கள்.

ஜே.எச். படேல் முதல்வராக நீடிப்பதை தேவே கௌடா விரும்பவில்லை என்று பரவலாகச் சொல்லப்பட்டாலும் பிரச்னை அதுவல்ல.

மகாராஷ்டிராவில் நடப்பது போல, தம்மை பால் தாக்ரேவாகக் கருதி, பாத்ரூம் போவது முதல் பட்ஜெட் போடுவது வரை தம் கருத்தைக் கேட்டு, அதன் அடிப்படையிலேயே முதல்வர் செயல்பட வேண்டும் என்பதுதான் தேவேகௌடாவின் எதிர்பார்ப்பு.

கட்சிப் பொறுப்பாளர்கள் நியமனம் முதல் அமைச்சரவையில் யார் யார் இடம் பெறுவது, வாரியங்களுக்கு யார் யாரைத் தலைவராகப் போடுவது என்று ஒரு நீள மளிகை சாமான் லிஸ்ட் போன்றதொரு பட்டியலை கௌடா அளித்திருந்தார்.

அதன்படியே பட்டேல் ஆட்களை நியமித்திருந்தால் பிரச்னை வந்திருக்கப் போவதில்லை. மாறாக, கௌடாவின் பட்டியலுடன் தமது விருப்பத்தையும் இணைத்து அவர் நியமனங்கள் செய்ததால்தான் கோஷ்டிப் பூசல் பலமாக வெடித்து விட்டது.

பட்டேலை எப்படிக் கவிழ்ப்பது என்று கௌடா ஆதரவாளர்கள் ஒருபுறமும் 'சதி'யை எப்படி முறியடிப்பது என்று பட்டேல் ஆதரவாளர்கள் மறுபுறமும் ராத்தூக்கத்தைத் தியாகம் செய்து தீவிர சிந்தனையில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

இதில் முந்திக் கொண்டது கௌடாவின் ஆதரவாளர்கள்தாம்!

பட்டேலுக்குக் கொஞ்சம் உடல் நலன் சரியில்லாமல் போய் மருத்துவமனையில் படுத்திருந்தார்; ஹெர்னியா ஆபரேஷன்.

சமயம் பார்த்து இவர்கள் பட்டேலுக்கு எதிராக ஒரு கையெழுத்து வேட்டை நடத்தி, அதிருப்தி எம்.எல்.ஏக்களை ஒன்று திரட்டினார்கள். "ஆதரவாளர்கள் ரெடி. நீங்கள் பெங்களூர் வரவேண்டியதுதான் பாக்கி. வந்ததும் பட்டேலை வீட்டுக்கு அனுப்பி விடலாம்" என்று டெல்லியிலிருந்த தேவே கௌடாவுக்குத் தகவல் அனுப்ப,



• தேவேகௌடா

# 'பொரிசுக்காக ஒரு வெண்மை யுத்தம்!

அவரும் உற்சாகமாக வந்து சேர்ந்தார்.

ஆதரவு எம்.எல்.ஏக்கள் அத்தனை பெரிய மெஜாரிடி இல்லை என்றாலும் ஆளுக்கு ஆயிரம் தொண்டர்களைக் கூட்டி இழுத்துக் கொண்டு ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்துவிட, கூட்டத்தைப் பார்த்து, குஷியாகி விட்டார் கௌடா! 'மக்கள் என் பக்கம்!' என்று உணர்ச்சி மிகுதியில் அவர் விடுத்த அறிக்கைகள் நாளிதழ்களின் முதல் பக்கங்களை நிரப்பின.

ஆனால் பட்டேல் அசரவில்லை. "இந்த ஆள் சேர்ப்பு நடவடிக்கையெல்லாம் உதவாது" என்று அலட்டிக் கொள்ளாமல் 'படுத்தபடியே' அறிக்கை விட்டு கௌடாவின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டார்.

மறுபுறம் ஆட்சி கவிழ்ந்து பதவி போவதை விரும்பாத எம்.எல்.ஏக்களில் சிலர் வேறொரு காரியத்துக்குப் பிள்ளையார் சுழி போட்டுவிட்டதாகச் செய்தி பரவியது.

அதாவது, ஜனதாதள அதிருப்தி எம்.எல்.ஏக்கள், பா.ஜ.க. எம்.எல்.ஏக்களுடன் இணைந்து, ஹெக்டேவை ஆட்சியமைக்கச் செய்யத் திரை மறைவு வேலைகள் நடப்பதாகவும் செய்திகள் வந்தன.

"இதைத் தூக்கிச் சாப்பிடும் விதமாக பா.ஜ.க., காங்கிரஸ் இரண்டும் இணைந்து அரசின் மேல் நம்பிக்கையில்லாத தீர்மானம் கொண்டு வர முனைந்து விட்டன!

"தேவே கௌடா, தாம் நினைத்ததை ஒரு போதும் சாதிக்க முடியாது. மாறாக, நாட்டிலிருக்கும் ஒரே ஒரு ஜனதாதள அரசையும் வீட்டுக்கு அனுப்பு விட்டு, ஆட்சியை பா.ஜ.க. விடமோ, லோக் சக்திக்கோ, காங்கிரஸுக்கோ தானம் பண்ணி விடப் போகிறார்'' என்று குமுறி வெடித்தார் ஒரு பட்டேல் ஆதரவு எம்.எல்.ஏ.



• பட்டேல்

**அ**து சரி. தேவே கௌடாவின் ஆசைதான் என்ன?

பிரதமராக இருந்தவர் மறுபடி ஒரு மாநில முதல்வராக உட்காருவது அவ்வளவாக நன்றாக இருக்காது. பட்டேலோ, அவர் சொல்வதைக் கேட்டு நடப்பதில்லை. வேறு வழி?

தம் மகன் குமாரசாமியை கர்நாடக ஜனதா தளத் தலைவராக ஆக்கி, விரைவில் முதல்வராகவும் 'நியமித்து' விட்டால் மகன் பெயரில் தாம் ஆளலாம் என்பது கௌடாவின் கனவு.

ஆனால், குமாரசாமிக்கு மக்களிடையே அத்தனை செல்வாக்கு கிடையாது. கடந்த பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டு முன்னதாகத் தோல்வி கண்டவர் அவர். அவர் மட்டும் ஜெயித்திருந்தால், அதையே 'மூலதனமாக' வைத்து, இந்நேரம் பட்டேல் நீக்கப்பட்டு, ஏதாவது ஒரு 'பாதுகாப்பான' தொகுதியிலிருந்து எம்.எல்.ஏ.வாகவும் தேர்வு செய்யப்பட்டு இவர் முதல்வராக்கப் பட்டிருப்பார்!

அது சாத்தியமாகாததால், மிரட்டல் நடவடிக்கைகள் மூலம் பட்டேலைப் பணிய வைக்கப் பார்க்கிறார் கௌடா. பணிவேனா என்கிறார் பட்டேல்.

விறுவிறுப்பான நாடகத்தின் அடுத்தடுத்தக் காட்சிகளுக்காக ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கிறார்கள் கர்நாடக மக்கள்.

பெங்களூரிலிருந்து :
**அமுதவன்**

# அவர்களும் அதுவும்

நீர்ப்பரப்பையொட்டிய மூன்றரை அடி கிராதியைப் பிடித்துக் கொண்டு மெல்ல நடந்தபோது முதலில் அதைப் பார்த்தது மகேஸ்வரிதான்.

"என்னங்க... அதோ அங்க பாருங்க..." பதற்றமாய் சுரேந்தரை உலுக்கினாள்.

கோடைக்கு இதமாய் ஜலக்ரீடை ஆடுவது போல் தண்ணீரில் ஓர் உடல்... தெப்பம் போல் மிதந்து கொண்டிருந்தது.

"ஐயோ.. யாரோ பாவம்... எப்படி விழுந்திருப்பான்...?" பதற்றம் காரணமாய் கத்துவது போல் ஒலித்தது சுரேந்தரின் குரல்.

"எனக்கென்னவோ தவறி விழுந்துட்டதா தெரியல. சின்னக் குழந்தையா என்ன எம்பிப் பார்த்தபோது கால் இடறி விழறதுக்கு. ஆறடி மனுஷன் மூணடி கிராதியைத் தாண்டி விழ சான்ஸே இல்ல; அந்த ஆள் தற்கொலை நோக்கத்தோடுதான் இப்படி..." மேற்கொண்டு பேச முடியாமல் சங்கடம் நெஞ்சை அரித்தது. சாலையோர விளக்குகள் வெளிச்சத்தில் மங்கலாய்த் தெரிந்த அந்த சடலத்தை உற்றுப் பார்த்தாள். உடலில் நடுக்கம் பரவ, கணவன் கையைப் பிடித்துக் கொண்டாள். அவர்களைத் தவிர வேறு யாரும் அதைக் கவனித்ததாய்த் தெரியவில்லை. சீரான இடைவெளியில் இருந்த சிமெண்ட் பெஞ்சுகளில் அமர்ந்திருந்த அதி சொற்பமானவர்களும் பேச்சில் லயித்திருந்தனர். போக்குவரத்து அதிகமில்லாததை சாதமாக்கிக் கொண்டு வாகனங்கள் வேகத்தை அதிகமாக்கிப் பறந்து கொண்டிருந்தன. சாலையின் மறு பக்கப் புல் வெளியில் அமர்ந்திருந்தவர்களுக்கு விஷயம் தெரியவே வாய்ப்பில்லாமலிருந்தது.

"இப்ப என்ன செய்யலாங்க?"

"என்ன செய்யலாமாவா?" வியப்பாய்ப் பார்த்தான் சுரேந்தர்.

"வா... போகலாம்..."

"இப்படிச் சென்றால் எப்படிங்க... யாரோ என்னவோ... அவங்க வீட்டில் அவரைக்காணாம எப்படித் தவிச்சிட்டிருப்பாங்களோ. போலீஸில் ரிப்போர்ட் செய்யலாமே..."

"பைத்தியமா உனக்கு.. இத்தனை பேர் உட்கார்ந்திருக்காங்களே, அவங்களுக்கெல்லாம் இல்லாத அக்கறை நமக்கு எதுக்கு.. பேசாம வா சொல்றேன்..."

இயல்பில் அவன் இளகிய மனம் கொண்டவன்தான். வீணாய்ப் பிரச்னை வருமோ என்ற பயம். போலீஸ் மீது அவ்வளவாய் நம்பிக்கையற்றவன். அவள் பிடிவாதம் எரிச்சலூட்டினாலும் மனித தர்மம் மனதின் மூலையிலிருந்து இலேசாய் எட்டிப் பார்க்க அரை மனத்துடன் ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான். டாங்க்பண்டின் இன்னொரு முனையில் நடை தூரத்தில்தான் போலீஸ் ஸ்டேஷன். சின்ன ஸ்டேஷன். ஓரிருவர் மட்டும் டியூட்டியில் இருந்தனர். டிராஃபிக் சம்பந்தப்பட்ட சமாசாரங்கள் மட்டுமே இவர்கள் கவனிப்பார்களோ என்று சந்தேகம் வந்தது. விஷயத்தை விவரித்தபோது அந்த முகங்களில் பதற்றமே தென்படவில்லை. கட்டிகள் உடைவதையும் கொள்

கைகளுக்குப் புறம்பான கூட்டணிகளைப் பற்றியும் கேட்பது போன்ற சாதாரண பாவம்... இது எங்களுக்கு சகஜம்தான் என்பது போல். அவன் சந்தேகப்பட்டது போன்றே அடுத்த நிகழ்வு. செக்ரடேரியட் அருகிலுள்ள ஸ்டேஷனுக்குப் போகச் சொன்னார்கள். அவனுள் ஏற்கெனவே சுரத்தின்றி ஒலித்துக் கொண்டிருந்த மனிதாபிமானக் குரல் இப்போது ஈனஸ்வரமாகி விட்டது. சொன்னால் கேட்டாயா என்னும் விதமாய் அவளைப் பார்த்தான்.

"வாங்க..."

"இப்ப நீ சொல்றது வீட்டுக்குதானே?"

"சரி. நீங்க போங்க. நான் ஆட்டோவில் போய் ரிப்போர்ட் கொடுத்துட்டு வரேன்...."

"ஆமா... பெரிய சோஷியல் ஒர்க்கர்னு நினைப்பு..." கோபத்துடன் முணுமுணுத்த படி ஸ்கூட்டரைக் கிளப்பினான்.

"தெரியாமத்தான் கேக்கறேன். சோஷியல் ஒர்க்கரா இருந்தாத்தான் இதெல்லாம் செய்யணுமா? எதேச்சையா நாம பார்த்ததை போய்ச் சொல்லப் போறோம். அவ்வளவு தான்..."

"தற்கொலை தற்கொலைன்னு மூச்சுக்கு முன்னூறு தடவை நீ சொல்லிட்டா போதுமா... உம்... அவங்களுக்கு முதல் சந்தேகம் நம்ம மேலதான் வரும். மகா எடக்கு பிடிச்சவங்க..."

"அந்த ஆளுக்கு பாவம் என்ன பிரச்னையோ... இவ்வளவுக்குத் துணியணும்னா..."

---

**"என்ன நம்ம ஹெட்கிளர்க் தன் செக்ஷன்லே ஒவ்வொரு பைலையும் கட்டிக் காட்டி பேசிக்கிட்டிருக்காரு?"**

**"இன்னும் இரண்டு மாசத்திலே ரிடையர் ஆகப் போறாராம்... ஒவ்வொரு பைலுக்கும் எவ்வளவு லஞ்சம் வாங்கணும்னு சொல்றாரு!"**

**– எஸ். ராகவேந்திரா**



அவள் முடிப்பதற்குள் வள்ளென்று விழுந்தான் சுரேந்தர்.

"கொஞ்சம் வாயை மூடிட்டு வர்றயா?"

செக்ரடேரியட் ஏரியா ஸ்டேஷன் சற்று பெரிதாகவே இருந்தது. அந்த நேரத்திலும் ஃபோன், ஃபைல், விசாரணை என சுறுசுறுப்பான இயக்கம் தெரிந்தது. இப்போது அவனுடைய இறுக்கம் சற்று தளர்ந்திருந்தது. உண்மையான ஆதங்கத்துடன் விஷயத்தைத் தெரிவித்தான். அவர்கள் அக்கறையுடன் கேட்டுக் கொண்டது ஆறுதலாகவும் இருந்தது.

"உங்க பெயர் என்ன?"

"சுரேந்தர். எம். சுரேந்தர். ஷி இஸ் மை ஃவைப் மகேஸ்வரி..."

"ஓ.கே. மிஸ்டர் சுரேந்தர். இப்ப நீங்க என்ன செய்யறீங்கன்னா நேரா காந்தி நகர் ஸ்டேஷனுக்குப் போய் எழுதிக் கொடுங்க."

"ஏன். நீங்க வாங்கிக்க மாட்டீங்களா?" ஏறக்குறைய கத்திவிட்டான் சுரேந்தர்.

"அடடா... விஷயம் புரியாம இப்படி ஆத்திரப்பட்டா எப்படி. நீங்க சொல்ற இடம் காந்தி நகர் ஸ்டேஷன் லிமிட்ல வர்றது. எங்க ஏரியா இல்ல அது. நாங்க எதுவும் செய்யறதுக்கில்ல..."

"சார். விஷயம் ரொம்ப முக்கியமானது. நேரத்தை வேஸ்ட் செய்யாம நீங்களே... ப்ளீஸ்..." முதன் முறையாக வாயைத் திறந்தாள் மகேஸ்வரி.

"என்ன நீங்க ப்ரொஸீஜர் தெரியாம பேசிட்டு... போலீஸுக்கே சொல்லித் தரீங்களா... அந்த ஸ்பாட் எங்க லிமிட்டிற்குள் வராதுன்னு சொன்னா புரியல்லியா மேடம். எங்களால முடியற காரியமா இருந்தா நீங்க சொல்லித்தான் செய்வோமா... மேட்டர் ரொம்ப அர்ஜண்ட். டைம் வேஸ்ட் ஆறதுன்னு நீங்க நினைத்தால் எங்களுடன் ஆர்கியூ செய்துகிட்டிருக்காம உடனே காந்தி நகர் போங்க..."

அவர் முடிக்குமுன் அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே வந்தான் சுரேந்தர்.

"ஏறு வண்டியில்...."

"காந்தி நகருக்குதானே?" தயக்கமாய்க் கேட்டான்.

"இல்ல. சுடுகாட்டுக்கு. அந்த ஆளுக்கு முன்ன நாம போய்ச் சேர்ந்துடலாம்னு. அட... இன்னுமா உனக்கு புத்தி வரல? காந்தி நகராம் காந்திநகர். நேரா வீட்டுக்கு போறோம்..."

ஸ்கூட்டர் உறுமிக் கொண்டே இருந்தது. ஓட்டுபவனின் ஆத்திரத்தை தானும் பிரதிபலிக்கும் விதமாய். அவள் ஏறவில்லை.

"விளையாட்டா இருக்கா உனக்கு? ஏன் இப்படி முரண்டு பிடிக்கற... மணி என்ன தெரியுமா... நடுராத்திரியில் ஸ்டேஷன் ஸ்டேஷனா அலையணும்னு தலையெழுத்தா. எதுக்கும் ஒரு லிமிட் இருக்கு..."

"போலீஸ்காரங்கதான் லிமிட் பார்க்க றாங்கன்னா நீங்க கூடவா...?" சீரியஸாகத் தான் சொன்னாள். ஆனாலும் அவனுக்கு சிரிப்பு வந்துவிட்டது.

"உட்காரு..." குரலின் இணக்கம் ஒப்பு தலைத் தெரிவித்தது.

**கா**ந்தி நகர் ஸ்டேஷனில் விஷயம் சொன்னபோது மிருகக் காட்சி சாலைக் கூண்டுக்குள் மனிதர்களைப் பார்ப்பது போன்ற ஆச்சர்யம் தென்பட்டது அவர்கள் முகங்களில். முன்பின் அறியாத மனிதனுக் காக வேளை கெட்ட வேளையில் மெனக் கெட்டு அலையும் விந்தைப் பிரக்ருதிகள்! அதுவும் இவள் இளம் பெண்...

அவர்கள் பெயர், வயது, முகவரி, வேலை சம்பளம் என துருவித் துருவிக் கேட்டு ஏறக் குறைய ஒரு சின்ன விசாரணையே நடத்தி விட்டு ஒரு தாளை அவர்கள் முன் வைத்தார் எஸ்.ஐ.

"நீங்க பார்த்தது பார்த்தபடி எழுதிக் கொடுங்க. உங்க அட்ரஸ், ஃபோன் நம்பர் எல்லாம் இனியரா எழுதுங்க. பொழுது விடிந் ததும் பாடியை வெளியே எடுத்தப்புறம் உங்களைக் கூப்பிடுவோம். வரணும்... ஓகே.?"

"விடிந்ததுமா?" அதிர்ச்சியுடன் கேட் டாள் மகேஸ்வரி. "அதற்குள் பாடி டிகம் போஸ் ஆயிடுமே சார். இப்பவே எவ்வளவு நேரமாயிற்றோ?"

"என்ன செய்யணும்கறீங்க. நடு ராத்திரி யில் எங்களை தண்ணியில் குதிக்கச் சொல் றீங்களா? நீங்க சொல்ற அந்த ஆள் செய்தது போல் சாகணும்னா குதிக்கறதுக்கு ஒரு நிமிஷம் ஆகாது. எங்களுடையது வேற வேலை ஆயிற்றே. அதற்கு நிறைய ஏற்பாடு செய்யணும். இப்ப முடியற காரியமில்லை. சரி... ரிப்போர்ட் எழுதுங்க..."

**வீ**டு திரும்பியதும் அடித்துப் போட் டாற்போல் தூங்கிவிட்டார்கள்.

விடிந்ததும் அழைப்பு வந்தது. உடனே புறப்பட்டு வரும்படி.

அவர்கள் போய்ச் சேர்ந்தபோது சடலத்தை வெளியே எடுத்திருந்தார்கள்.

"அப்பா... ஐயோ... அப்பா..." முகத்தைத் தடவியபடி கதறிய பிள்ளைகளைப் பார்க் கையில் அடிவயிற்றினின்று துக்கம் திரண்டு நெஞ்சையடைத்தது மகேஸ்வரிக்கு.

அப்போது உறவு கும்பலினின்று பெரி யவர் ஒருவர் அவர்களிடம் வந்து நன்றி தெரிவித்தார். சில நிமிடங்கள் முன் கான்ஸ் டபிள் ஒருவர் இவர்களைச் சுட்டிக்காட்டி ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். அதன் முகமாய் இந்த நன்றியறிவிப்பு... சம்பிரதாய மாக அன்றி ஆத்மார்த்தமாக வந்த நன்றி.

"உறவுன்னு நம்பியவனே எங்களை உதறிட்டு இப்படிச் செய்துட்டான். மூன்றாம் மனிதர் நீங்க இவ்வளவு தூரம் சிரமப்பட் டது...." மேலே பேச முடியாது நெகிழ்வுடன் சுரேந்தர் கையைப் பிடித்துக் கொண்டார்.

"ஆனா பாருங்க, செய்யற வேலைக்கு சம்பளம் வாங்கற இந்த போலீஸ்காரங்க எஸ்.ஐ. கான்ஸ்டபிள்னு அத்தனை பேருமா கூடுதலா ஐயாயிரம் பிடுங்கிட்டாங்க. எங்க துக்கம் கூட இவங்களுக்கு உரைக்கல. கொடுத்துட்டோம். எரியற வீட்டில் கட் டையை உருவிக்கற உலகம் சார் இது."

விரக்தியும் வேதனையுமாய் கூறிய பெரியவர் மீண்டும் நன்றி தெரிவித்துவிட்டு நகர்ந்தார்.

சில நிசப்த கணங்களுக்குப் பின் மெல்லக் கூறினாள் மகேஸ்வரி.

"நேரமாயிட்டது. வாங்க போகலாம்..."

"எங்கே?" என்றான் சுரேந்தர். ●




"என்ன அது. கவர் மேலே திருமதின்னு விலாசம் எழுதுவாங்க. நீ என்ன திமிருமதின்னு எழுதறே யாருக்கு இந்த லெட்டர்?"

"வேற யாருக்கு. எல்லாம் என் மாமியாருக்குத்தான்!

– எஸ். ராகவேந்திரா




# பொன்னியின் செல்வன்



முப்பதாம் அத்தியாயம்

## துவந்த யுத்தம்

முடிவில்லாத வழியில் குதிரைகள் போய்க் கொண்டிருப்பதாக வந்தியத்தேவனுக்குத் தோன்றியது. இந்த வைஷ்ணவன் நம்மை உண்மையில் ஏமாற்றி விட்டானா? சத்துருக்களிடம் நம்மைக் கொண்டு போய் ஒப்புவிக்கப் போகிறானா?

இருபுறமும் காடுகள் அடர்ந்திருந்தன. அவற்றுக்குள் பார்த்தால் கன்னங்கரிய பயங்கரமான இருள். அந்த இருண்ட காட்டில் என்னென்ன அபாயங்கள் என்னென்ன விதத்தில் இருக்கின்றனவோ, தெரியாது. சிறுத்தைகள், கரடிகள், விஷ ஜந்துக்கள், – இவற்றுடன் பகைவர்களும் மறைந்திருக்கக் கூடும்; யார் கண்டது? தெற்குத் திசையில் சோழ சைன்யம் கடைசியாகப் பிடித்திருக்கும் இடம் தம்பளைதான் என்று சொன்னார்களே? இவன் நம்மை எங்கே அழைத்துப் போகிறான்?




நல்லவேளையாக நிலா வெளிச்சம் கொஞ்சம் இருந்தது. சந்திர கிரணங்கள் வானுற வோங்கிய மரங்களின் உச்சியில்

அமரர் கல்கி

தவழ்ந்து விளையாடின. அதனால் ஏற்பட்ட சலன ஒளி சில சமயம் பாதையிலும் விழுந்து கொண்டிருந்தது. எதிரே மூன்று குதிரைகள் போவது சில சமயம் கண்ணுக்கு நிழல் உருவங்களாகத் தெரிந்தன. ஆனால் குதிரைகளின் குளம்புச் சப்தம் மட்டும் இடைவிடாமல் கேட்டுக் கொண்டிருந்தது.

திடீரென்று வேறு சில சப்தங்கள் கேட்டன. காட்டின் நடுவில் எதிர்பார்க்க முடியாத சப்தங்கள். பல மனிதக் குரல்களின் கோலாகல சப்தம். குதூகலமாக ஆடிப்பாடும் சப்தம். ஆ! அதோ மரங்களுக்கிடையில் வெளிச்சம் தென்படுகிறது. சுளுந்துகளின் வெளிச்சத்தோடு பெரிய காளவாய் போன்ற அடுப்புகள் எரியும் வெளிச்சமும் தெரிகிறது. ஆகா! இந்தக் காட்டின் நடுவே தாவடி போட்டுக் கொண்டு குதூகலமாயிருக்கும் வீரர்கள் யார்? சோழ நாட்டு வீரர்களா? அல்லது பகைவர் படையைச் சேர்ந்த வீரர்களா?



தைப் பற்றி வந்தியத்தேவன் மிகச் சொற்ப நேரம்தான் சிந்தித்திருப்பான். அந்தச் சிறிய நேரத்தில் முன்னால் போன குதிரைகள் சட்டென்று நின்றதையும் ஒரு குதிரை பளீர் என்று திரும்பியதையும் வந்தியத்தேவன் கவனிக்கவில்லை. திரும்பிய குதிரை முன்னோக்கி வந்து வந்தியத்தேவன் குதிரையை அணுகியது. அதன் மேலிருந்தவன் வந்தியத்தேவன் பக்கம் சட்டென்று சாய்ந்து, ஓங்கி ஒரு குத்து விட்டான். அந்தக் குத்தின் 'அதிர்ச்சியினால் வந்தியத்தேவன் கதி கலங்கித் தடுமாறியபோது அவனுடைய ஒரு முழங்காலைப் பிடித்து ஓங்கித் தள்ளினான். வந்தியத்தேவன் தடால் என்று தரையில் விழுந்தான். வந்த வேகத்தில் அவன் குதிரை அப்பால் சிறிது தூரம் பாய்ந்து சென்று அப்புறம் நின்றது.

இதற்குள் அவனைத் தள்ளிய வீரன் குதிரையிலிருந்து கீழே குதித்து வந்தியத்தேவன் அருகில் வந்தான். திக்பிரமை கொண்டவனாய்த் தள்ளாடி எழுந்திருக்க முயன்ற வந்தியத்தேவனுடைய இடையிலிருந்த கத்தியைப் பறித்துத் தூர வீசி எறிந்தான். உடனே வந்தியத்தேவனுக்குப் புத்துயிர் வந்தது. அத்துடன் ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது. ஒரு குதி குதித்து எழுந்து நின்றான். இரண்டு கைகளையும் இறுக மூடிக் கொண்டு வஜ்ரம் போன்ற முஷ்டியினால் தன்னைத் தள்ளிய ஆளைக் குத்தினான். குத்து வாங்கிக் கொண்டவன் சும்மா இருப்பானா? அவனும் தன் கைவரிசையைக் காட்டினான். இருவருக்குள்ளும் பிரமாதமான துவந்த யுத்தம் நடந்தது. கடோத்கஜனும் இடும்பனும் சண்டை போடுவது போல் போட்டார்கள். வேடன் வேடந்தரித்த சிவபெருமானும் அர்ச்சுனனும் கட்டிப் புரண்டதைப் போல் புரண்டார்கள். திக்கஜங்களில் இரண்டு இடம் பெயர்ந்து வந்து ஒன்றோடொன்று மோதிக் கொள்வது போல் அவர்கள் மோதிக் கொண்டார்கள்.



ந்தியத்தேவனுடன் வந்த ஆழ்வார்க்கடியானும் அவர்களுக்கு முன்னால் வந்த வீரர்களும் விலகி நின்று ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டு நின்றார்கள். மரக்கிளைகளின் அசைவினால் அடிக்கடி சலித்த நிலா வெளிச்சத்தில் அவர்கள் அந்த அதிசயமான சண்டையைக் கண் கொட்

டாமல் பார்த்துக் கொண்டிருந் தார்கள்.

சீக்கிரத்தில் காலடிச் சப்தங்கள் கேட்டன. கையில் கொளுத்தப்பட்ட சுளுந்துகளுடன் வீரர்கள் சிலர் மரக்கிளைகளை விலக்கிக் கொண்டு அவ்விடத்திற்கு வந்தார்கள். அப்படி வந்தவர்களும் அதிசயத்துடன் அந்தத் துவந்த யுத்தத்தைப் பார்த்துக் கொண்டு நிற்கலானார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் சுற்றிலும் ஒரு பெரிய கூட்டம் கூடி விட்டது.

கடைசியாக வந்தியத்தேவன் கீழே தள்ளப்பட்டான். அவனைத் தள்ளிய வீரன் அவன் மார்பின்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு இடையில் சுற்றியிருந்த துணிச் சுருளை அவிழ்த்தான். அதற்குள்ளிருந்த ஓலையைக் கைப்பற்றினான். அதைத் தடுப்பதற்கு வந்தியத்தேவன் ஆன மட்டும் முயன்றும் அவன் முயற்சி பலிக்கவில்லை.

ஓலை அவ்வீரனுடைய கையில் சிக்கியதும் துள்ளிப் பாய்ந்து சுற்றிலும் நின்றவர்கள் பிடித்திருந்த சுளுந்து வெளிச்சத்தண்டை சென்றான். அவன் ஒரு சமிக்ஞை செய்யவும் மற்றும் இரு வீரர்கள் ஓடி வந்து வந்தியத்தேவன் தரையிலிருந்து எழுந்திருக்க முடியாமல் பிடித்துக் கொண்டார்கள்.

வந்தியத்தேவன் சொல்ல முடியாத ஆத்திரத்துடனும் தாபத்துடனும் ''பாவி வைஷ்ணவனே! இப்படிப்பட்ட சிநேகத் துரோகம் செய்யலாமா! அவனிடமிருந்து அந்த ஓலையைப் பிடுங்கு!'' என்று கத்தினான்.

''அப்பனே! என்னால் அது இயலாத காரியம் ஆயிற்றே!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''சீச்சீ! உன்னைப் போன்ற கோழையை நான் பார்த்ததேயில்லை! உன்னை வழித் துணைக்கு நம்பி வந்தேனே?'' என்றான் வந்தியத்தேவன்.

ஆழ்வார்க்கடியான் குதிரையிலிருந்து சாவதானமாக இறங்கி வந்தியத்தேவன் அருகில் சென்று, அவன் செவியில், ''அட அசடே! ஓலை நீ யாருக்குக் கொண்டு வந்தாயோ, அவரிடந்தான் போயிருக்கிறது! ஏன் வீணாகப் புலம்புகிறாய்?'' என்றான்.

சுளுந்து வெளிச்சத்தில் ஓலையைப் படித்துக் கொண்டிருந்த வீரனுடைய முகத்தை மற்ற வீரர்கள் பார்த்து விட்டார்கள். உடனே ஒரு மகத்தான குதூகல ஆரவாரம் அவர்களிடமிருந்து எழுந்தது.

''பொன்னியின் செல்வர் வாழ்க! வாழ்க!''

''அன்னிய மன்னரின் காலன் வாழ்க!''

''எங்கள் இளங்கோ வாழ்க!''

''சோழகுலத் தோன்றல் வாழ்க!'' என்பன போன்ற கோஷங்கள் எழுந்து அந்த வனப் பிரதேசமெல்லாம் பரவின. அவர்களுடைய கோஷங்களின் எதிரொலியே போல் மரக்கிளையில் தூங்கிக் கொண்டிருந்த பட்சிகள் விழித்தெழுந்து இறகுகளைச் சடசடவென்று அடித்துக் கொண்டு பலவித ஒலிகளைச் செய்தன.

இதற்கு முன் வந்திருந்தவர்களைத் தவிர இன்னும் பல வீரர்களும் என்ன விசேஷம் என்று தெரிந்து கொள்வதற்காகத் திடுதிடுவென்ற சப்தத்துடனே மரஞ்செடி கொடிகளை விலக்கிக் கொண்டு ஓடி வந்தார்கள். கூட்டம் பெருகுவதைக் கண்ட வீரன் சுற்றிலும் ஒருமுறை திரும்பிப் பார்த்து, ''நீங்கள் அனைவரும் பாசறைக்குச் செல்லுங்கள். விருந்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்யுங்கள். சற்று நேரத்துக்குள்

நான் வந்து விடுகிறேன்'' என்று சொல்லவே, அவர்கள் எல்லாரும் விரைந்து அவ்விடம் விட்டுப் போய் விட்டார்கள்.

நன்றாகக் குத்தும் அடியும் பட்ட வந்தியத்தேவன் தரையில் உட்கார்ந்தபடி இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். உடம்பில் அடிபட்ட வலியெல்லாம் மறந்து விடும்படியான அதிசயக் கடலில் அவன் மூழ்கியிருந்தான்.

"ஆகா! இவர்தானா இளவரசர் அருள்மொழி வர்மர்! இவர் கையிலே தான் எவ்வளவு வலிவு! என்ன விரைவு! குட்டுப்பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்பட வேண்டும் என்பார்களே! குத்துப்பட்டால் இவர் கையினால் அல்லவா குத்துப்பட வேண்டும்! இவரிடம் அர்ச்சுனனுடைய அழகும் கம்பீரமும் இருக்கிறது! பீமசேனனுடைய தேக பலம் இருக்கிறது! நாடு நகரமெல்லாம் இவரைப் போற்றிப் புகழ்வதில் ஆச்சரியம் ஒன்றுமில்லைதானே!" என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான்.

இந்தக் கதைக்குப் பெயர் அளித்த அரசிளங்குமாரரை, தமிழகத்தின் சரித்திரத்திலேயே இணை யாரும் சொல்ல முடியாத வீராதி வீரரை, சோழ மன்னர் குலத்தை அழியாப் புகழ் பெற்ற அமரர் குலமாக்கினவரை, பின்னால் இராஜ ராஜர் என்று பெயர் பெறப் போகும் அருள்மொழி வர்மரை, இவ்விதம் சமயமில்லாத சமயத்தில் அசந்தர்ப்பமான நிலைமையில், இராஜகுலச் சின்னம் எதுவும் இல்லாமல் நேயர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கும்படி நேர்ந்து விட்டது. இது நேயர்களுக்குச் சிறிது மனக்குறை அளிக்கக் கூடியது இயற்கைதான்! ஆயினும் என்ன செய்யலாம்? நம் கதாநாயகனாகிய வந்தியத்தேவனே இப்போதுதான் அவரை முதன் முதலில் சந்தித்திருக்கிறான் என்றால், நாம் எப்படி அவரை முன்னதாகப் பார்த்திருக்க முடியும்!

அருள்மொழித் தேவர் வந்தியத் தேவனை நோக்கிச் சமீபத்தில்



வந்தார். மீண்டும் அவருடைய கைமுஷ்டியின் பலத்தைச் சோதிக்க வருகிறாரோ என்று வந்தியத்தேவன் ஒருகணம் திடுக்கிட்டுப் போனான்.

''அன்பரே! வருக! வருக! அழகிய இலங்கைத் தீவுக்கு வருக! சோழ நாட்டு வீராதி வீரர்களுடனே சேர்வதற்கு இத்தனை தூரம் கடல் கடந்து வந்தீர்



அல்லவா? அப்படி வந்த உமக்கு நான் அளித்த வீர வரவேற்பு திருப்தி அளித்திருக்கிறதா? அல்லது அது போதாது. இன்னும் சிறிது படாடோபமான வரவேற்பு அளிக்க வேண்டும் என்று கருதுகிறீரா?" என்று இளவரசர் கூறிப் புன்னகை பூத்தார். வந்தியத்தேவன் குதித்து எழுந்து வணக்கத்துடன் நின்று, "இளவரசே! தங்கள் தமக்கையார் அளித்த ஓலை தங்களிடம் சேர்ந்து விட்டது. என் கடமையும் தீர்ந்து விட்டது. இனி இந்த உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய அவசியம் எனக்கில்லை. தங்களுக்கு விருப்பமானால் இன்னும் சிறிது நேரம் நாம் யுத்த காண்டம் படித்துப் பார்க்கலாம்!" என்றான்.

"ஆகா! உமக்கு என்ன சொல்வதற்கு? உம் உயிரைப் பற்றி இனி உமக்குக் கவலையில்லை. அந்தக் கவலை இனி என்னுடையது. இல்லாவிடில் நாளைக்கு இளையபிராட்டிக்கு என்ன மறுமொழி சொல்வேன். நண்பரே! இப்போது நான் படித்த ஓலை என் தமக்கையாரின் திருக்கரத்தினாலேயே எழுதப்பட்டதாகத் தெரிகிறது. அவர் உம்மிடம் அதை நேரில் கொடுத்தாரா?" என்று கேட்டார்.

"ஆம். இளவரசே! இளையபிராட்டியின் திருக்கரங்களிலிருந்து நேரில் இந்த ஓலையைப் பெறும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. பின்னர் எங்கும் நிற்காமல் இரவு பகல் பிரயாணம் செய்து வந்தேன்" என்றான்.

"அது நன்றாய்த் தெரிகிறது. இல்லாவிடில் இவ்வளவு விரைவில் இங்கு வந்திருக்க முடியுமா? இப்படிப்பட்ட அரிய உதவி செய்தவருக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!" என்று சொல்லிவிட்டு, இளவரசர் வந்தியத்தேவனை மார்புற அணைத்துக் கொண்டார். அப்போது வந்தியத்தேவன் சொர்க்க லோகத்தில்தான் இருப்பதாகவே எண்ணினான். அவன் உடம்பிலிருந்து வலியெல்லாம் மாயமாய் மறைந்து விட்டது.

## முப்பத்தொன்றாம் அத்தியாயம்

# "ஏலேல சிங்கன்" கூத்து

வனத்தின் மத்தியில் உலர்ந்த குளத்தைச் சுற்றி மரங்கள் வளைவு வரிசையாக வளர்ந்து அதனால் இடைவெளி ஏற்பட்டிருந்த இடத்தில் சுமார் ஆயிரம் சோழ வீரர்கள் தாவடி போட்டிருந்தார்கள். அவர்களுடைய சாப்பாட்டுக்காகப் பெரிய பெரிய கல்லடுப்புகளில் ஜுவாலை வீசிய நெருப்பின் பேரில் பிரம்மாண்டமான தவலைகளில் கூட்டாஞ் சோறு பொங்கிக் கொண்டிருந்தது. சட்டிகளிலும் அண்டாக்களிலும் வெஞ்சனங்கள் வெந்து கொண்டிருந்தன. இவற்றிலிருந்து எழுந்த நறுமணம் அந்த வீரர்களின் நாவில் ஜலம் சுரக்கச் செய்தது. சோறு பொங்கி முடியும் வரையில் பொழுது போவதற்காக அவர்கள் ஆடல் பாடல் களியாட்டங்களில் ஈடுபட்டிருந்தார்கள். இச்சமயத்தில் அவர்களுடைய உள்ளங் கவர்ந்த அரசிளங் குமாரரும் வந்து விடவே, அவ்வீரர்களின் குதூகலம் அளவு கடந்ததாயிற்று. அந்த எல்லைக் காவல் படையின் தளபதி மிகவும் சிரமப்பட்டு அவர்களுக்குள்ளே ஒழுங்கை நிலை நாட்டினார்.

எல்லாரையும் அமைதியுடன் பாதி மதியின் வடிவமான வட்டத்தில் வரிசையாக உட்காரும்படிச் செய்தார்.

பெரியதொரு ராட்சஸ மரத்தை வெட்டித் தள்ளி அதன் அடிப் பகுதியை மட்டும் பூமிக்கு மேலே சிறிது நீட்டிக் கொண்டிருக்கும்படி விட்டிருந்தார்கள். இளவரசர் வந்து அடிமரத்துச் சிம்மாதனத்தின் மீது அமர்ந்தார். இப்போது அவர் யானைப் பாகன்போல் உடை தரித்திருக்கவில்லை. தலையில் பொற் கிரீடமும், புஜங்களில் வாகுவலயங்களும், மார்பில் முத்து மாலைகளும் அணிந்து, அரையில் பட்டுப் பீதாம்பரம் தரித்து அமர்ந்திருந்தார். அவரைச் சுற்றி எல்லைக் காவல் தளபதியும் வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் உட்கார்ந்திருந்தார்கள்.

இளவரசரை மகிழ்விப்பதற்காக ஏற்பாடு செய்திருந்த ஏலேல சிங்கன் சரித்திரக் கூத்து ஆரம்பமாயிற்று.

இந்தச் சமயம் சோழ வீரர்கள் இலங்கையில் பெரும் பகுதியைப் பிடித்திருந்தது போல் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு தடவை தமிழ் வீரர்கள் ஈழ நாட்டைக் கைப்பற்றியிருந்தார்கள். அப்போது அத்தமிழ் வீரர்களில் தலைவனாக விளங்கியவன் ஏலேல சிங்கன். அவனால் துரத்தப்பட்டு இலங்கை அரசன் சில காலம் மலை நாட்டில் போய் ஒளிந்திருந்தான். அவனுடைய இளம் புதல்வனின் பெயர் துஷ்டகமனு. இவன் பொல்லாத வீரன். இலங்கையைத் திரும்பவும் ஏலேல சிங்கனிடமிருந்து கைப்பற்ற வேண்டுமென்று நெடுங்காலம் கனவு கண்டான். அவ்வீரன் சிறு பிள்ளையாயிருந்தபோது ஒருநாள் படுக்கையில் கையையும், காலையும் மடக்கி ஒடுக்கி வைத்துக் கொண்டு படுத்திருந்தான். அவனுடைய அன்னை "குழந்தாய்! ஏன் இப்படி உன்னை நீயே குறுக்கிக் கொண்டு படுத்திருக்கிறாய்? தாராளமாய்க் காலையும் கையையும் நீட்டி விட்டுப் படுத்துக் கொள்வதுதானே!'' என்றாள். அப்போது துஷ்டகமனு "தாயே! என்னை ஒரு பக்கத்தில் தமிழ் வீரர்கள் நெருக்குகிறார்கள்; மற்றொரு பக்கத்தில் கடல் நெருக்குகிறது. நான் என்ன செய்வேன்? அதனாலேயே உடம்பைக் குறுக்கிக் கொண்டு படுத்திருக்கிறேன்!'' என்றான். இத்தகைய வீரன் காளைப் பருவம் அடைந்தபோது படை திரட்டிக் கொண்டு ஏலேல சிங்கனுடன் போருக்குச் சென்றான். அவன் கொண்டு போன படைகள் சின்னாபின்னமாகிச் சிதறி ஓடி விட்டன. அப்போது துஷ்டகமனு ஒரு யுக்தி செய்தான். ஏலேல சிங்கன் இருக்குமிடம் சென்று நேருக்கு நேர் நின்று, "அரசே! தங்களுடைய பெரிய சைன்யத்துக்கு முன்னால் என்னுடைய சிறிய படை சிதறி ஓடி விட்டது. நான் ஒருவனே மிஞ்சியிருக்கிறேன். தாங்கள் சுத்த வீரர் குலத்தில் பிறந்தவர். ஆதலின் என்னுடன் தனித்து நின்று துவந்த யுத்தம் செய்யும்படி அழைக்கிறேன். நம்மில் வெற்றி அடைபவருக்கு இந்த இலங்கா ராஜ்யம் உரியதாகட்டும்; மற்றவருக்கு வீர சொர்க்கம் கிடைக்கட்டும்!'' என்று சொன்னான்.

துஷ்டகமனுவின் அத்தகைய துணிச்சலையும் வீரத்தையும் ஏலேல சிங்கன் மிக வியந்தான். ஆகையால் அவனுடன் தனித்து நின்று போர் செய்ய ஒப்புக் கொண்டான். இடையில் வந்து குறுக்கிட வேண்டாம் என்று தன் வீரர்களுக்குக் கண்டிப்பாகக் கட்டளையிட்டான். துவந்த யுத்தம் ஆரம்பமாயிற்று. இந்தச் செய்தியை அறிந்து சிதறி ஓடிய துஷ்டகமனுவின் வீரர்களும் திரும்பி

வந்து சேர்ந்தார்கள். எல்லாரும் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந் தார்கள். நெடுநேரம் போர் நடந்தது. துஷ்டகமனுவோ தன்னுடைய பிறப் புரிமையைப் பெறும் பொருட்டு ஆத் திரத்துடன் சண்டையிட்டான். ஏலேலசிங்கன் அந்த இளைஞனிடம் அனுதாபம் கொண்டிருந்தபடியால் பூரண வலிவையும் பிரயோகித்துப் போர் செய்யவில்லை. ஆகையால்



முடிவில் ஏலேல சிங்கன் இறந்தான். துஷ்டகமனு முடி சூடியதும், ஏலேல சிங்கன் இறந்த இடத்தில் அவனுக்குப் பள்ளிப் படைக் கோயில் எழுப்பி அவனுடைய வீரத்தையும் தயாளத்தையும் போற்றினான்.



ந்த அரிய சரித்திர நிகழ்ச்சியைச் சோழ வீரர்கள் இளங்கோ அருள்வர்மரின் முன்னிலையில் நடனக் கூத்தாக நடித்துக் காட்டினார்கள். ஆடலும் பாடலும் அமர்க்களப்பட்டன. ஏலேல சிங்கன் உயிர் துறந்து விழுந்த இடத்தில் நடித்த வீரன் உண்மையிலேயே செத்து விழுந்து விட்டானா என்று தோன்றும்படி அவ்வளவு தத்ரூபமாக நடித்தான். பார்த்துக் கொண்டிருந்த இளவரசரும் மற்ற வீரர்களும் அடிக்கடி 'ஆஹா' காரம் செய்து குதூகலித்தார்கள்.

நாடகம் நடந்து கொண்டிருந்தபோது ஒருமுறை இளவரசர் ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''திருமலை! தம்பளைக் குகைக் கோயிலில் துஷ்டகமனுவுக்கும் ஏலேல சிங்கனுக்கும் நடந்த போர்க் காட்சியை அழியாத வர்ண சித்திரமாக வரைந்திருக்கிறதே. அந்தச் சித்திரத்தை நீங்கள் பார்த்தீர்களா?'' என்று கேட்டார்.

''இல்லை, ஐயா! தம்பளை வீதிகளில் நாங்கள் வந்து கொண்டிருந்தபோதே தங்களைப் பார்த்து விட்டேன். குகைக் கோயிலுக்குள் போக நேரமில்லை'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆகா! அந்த குகைக் கோயில்களிலே உள்ள சிற்பங்களையும் அவசியம் பார்க்க வேண்டும்! திருமலை! நம் செந்தமிழ் நாட்டில் எவ்வளவோ சிற்ப சித்திரங்கள் இருக்கின்றன. அவற்றைக் காட்டிலும் மகத்தான அற்புதங்கள் இந்த இலங்கைத் தீவில் இருக்கின்றன!'' என்றார் இளவரசர்.

''இளவரசே! இந்த நாட்டிலுள்ள சிற்ப சித்திரங்கள் எங்கும் போய் விடமாட்டா! எப்போது வேணுமானாலும் பார்த்துக் கொள்ளலாம். ஆனால் தங்களைப் பார்ப்பது அப்படியல்லவே? நல்ல சமயத்தில் நாங்கள் வந்ததினால் அல்லவோ பார்க்க முடிந்தது? எங்களுக்கு முன்னாலேயே இங்கு வந்த பார்த்திபேந்திர பல்லவன் தங்களைத் தேடி விட்டு 'இங்கே இல்லை' என்று திரும்பிப் போய்க் கொண்டிருந்தான். வழியில் அவனை நாங்கள் பார்த்தோம்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''ஆம்; என் தமையனாரின் அருமை நண்பர் வந்து தேடிவிட்டு போனதாகத் தளபதிகூடச் சொன்னார். அவர் எதற்காக வந்திருப்பார் என்று உன்னால் ஊகித்துச் சொல்ல முடியுமா?''

''நிச்சயமாகவே சொல்ல முடியும். தங்களைக் காஞ்சிக்கு அழைத்து வரும்படியாக ஆதித்த கரிகாலர் அவரை அனுப்பி வைத்திருக்கிறார்.''

"அடேடே! உனக்குத் தெரிந்திருக்கிறதே! இதோ உன் சிநேகிதன் இவ்வளவு பத்திரமாகக் கொண்டு வந்து ஒப்புவித்தானே, இந்த ஓலையில் என்ன எழுதியிருக்கிறதென்றும் உனக்குத் தெரியும் போலிருக்கிறது?"

"தங்களை உடனே பழையாறைக்கு வந்து சேரும்படி தங்கள் தமக்கையார் எழுதியிருக்கிறார்கள். இளவரசே! குந்தவை தேவி அந்தரங்கமாக இந்த ஓலையை எழுதி நம் வாணர் குல வீரரிடம் கொடுத்தபோது பக்கத்திலிருந்த கொடி வீட்டில் மறைந்திருந்து நான் பார்த்துக் கொண்டிருந்தேன்..."

திருமலைக்குப் பின்னாலிருந்த வந்தியத்தேவன் அவனுடைய முதுகில் அழுத்தமாகக் கிள்ளினான்.

ஆழ்வார்க்கடியான் தன் முதுகில் ஒங்கி அறைந்து, "இது பொல்லாத காடு; இரவு நேரத்திலே கூட வண்டு கடிக்கிறது!" என்றான்.

இளவரசர் சற்றுக் கோபத்துடன் "சேச்சே! இது என்ன வேலை? என் அருமைத் தமக்கையார் பேரிலேயே நீ உன் திறமையைக் காட்டத் தொடங்கி விட்டாயா?" என்றார்.

"அதை நான் பார்த்திருந்தபடியினால்தான் இவனை இவ்வளவு பத்திரமாக இங்கே கொண்டு வந்து சேர்த்தேன். இளவரசே! இவன் வழியிலெங்கும் சங்கடத்தில் மாட்டிக் கொள்ளாமல் காப்பாற்றிக் கொண்டு வருவதற்கு நான் பட்ட பாட்டைப் புத்தக பகவானே அறிவார். அநுராதபுரத்தின் வழியாக வந்திருந்தால் இவன் நிச்சயமாக இங்கு வந்து சேர்ந்திருக்க மாட்டான். வழியில் யாருடனாவது சண்டை பிடித்துச் செத்திருப்பான். அதனாலே காட்டு வழியாக அழைத்து வந்தேன். அங்கேயும் இவன் ஒரு மத யானையுடன் சண்டை பிடிக்கப் பார்த்தான். என்னுடைய கைத்தடியால் அந்த மதயானையைச் சம்ஹரித்து இவனைத் தங்களிடம் பத்திரமாய்க் கொண்டு வந்தேன்!" என்றான்.

"ஓஹோ! அப்படியானால் இவனைப் பத்திரமாகக் கொண்டு வந்து என்னிடம் சேர்ப்பதற்காகவே நீ இலங்கைக்கு வந்தாயா, என்ன?

"இல்லை, ஐயா! என் பங்குக்கு நானும் தங்களுக்கு ஒரு செய்தி கொண்டு வந்திருக்கிறேன்."

"அது என்ன? சீக்கிரம் சொல்!" என்றார் இளவரசர்.

"முதன் மந்திரி அநிருத்தர் தாங்கள் இலங்கையிலேயே இன்னும் சிறிது காலம் இருப்பது உசிதம் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார்."

"இப்படி மூன்று மூத்தவர்கள் மூன்று விதமாகச் செய்தி அனுப்பினால் நான் எதையென்று கேட்பது?" என்றார் அருள்மொழி வர்மர்.

இச்சமயத்தில் வந்தியத்தேவன் குறுக்கிட்டு, "இளவரசே! மன்னிக்க வேண்டும்! தாங்கள் கேட்க வேண்டியது தங்கள் தமக்கையாரின் வார்த்தையைத் தான்!" என்றான்.

"ஏன் அவ்விதம் சொல்லுகிறீர்?"

"ஏனெனில், தங்கள் தமக்கையில் வார்த்தைக்கே மதிப்புக் கொடுக்க வேண்டும் என்று தங்கள் இருதயம் தங்களுக்குச் சொல்கிறது. அப்படித் தாங்கள் அவர் வார்த்தையைக் கேட்கா விட்டாலும், நான் கேட்டே தீர வேண்டும். தங்களை எப்படியும் அழைத்துக் கொண்டு வரும் படியாக இளையபிராட்டி எனக்குப் பணித்திருக்கிறார்!" என்றான் வந்தியத்தேவன்.

இளவரசர் வந்தியத்தேவனை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "இத்தகைய ஒரு வீரத் தோழன் கிடைக்க வேண்டுமே யென்று எத்தனையோ நாளாக நான் தவம் செய்து கொண்டிருந்தேன்!" என்றார்.

(தொடரும்)

'விகடனு'க்கு அடிக்கடி விஷயதானம் செய்யும் ஒரு சகோதரிக்குக் கொஞ்ச நாளைக்கு முன் ஒரு கடிதம் எழுதினேன். "சில நாளாகத் தாங்கள் கட்டுரை ஒன்றும் எழுதவில்லையே, ஏன்? அடியேன் பேரில் ஏதாவது கோபம் இருந்தாலும் 'விகடன்' மேல் கோபம் எதுவும் இருக்க முடியாதே?" என்று அதில் எழுதியிருந்தேன்.

இதில் விவாதத்துக்கிடமான விஷயம் அணுவளவேனும் இருப்பதாக நான் கருதவில்லை. நீங்களும் அப்படித்தான் நினைப்பீர்கள். ஆனால் அதற்குப் பதில் என்ன வந்தது, தெரியுமா?

"விகடன் மீது கோபம் எதுவும் இருக்க முடியாதே என்று எழுதியிருக்கிறீர்கள்? ஏன் முடியாது?"

இந்தக் கேள்விக்குக் கேவலம் ஆண் மகனாகிய என்னால் பதில் சொல்ல முடியுமா? சரணாகதியைத் தவிர வேறு வழி ஒன்றும் தெரியவில்லை.

"அம்மா! நான் எழுதியது தவறுதான்; மன்னிக்க வேண்டும். கோபம் கொள்ளும் விஷயத்தில் தங்களால் முடியாதது எதுவும் இல்லையென்று இப்போது தெரிந்து கொண்டேன்" என்பதாக விவாதத்தில் எனது தோல்வியை ஒப்புக் கொண்டு எழுதினேன்.




# இந்த ஸ்திரீகள்!

• • •

இல் வாழ்க்கையின் இன்ப சுகத்தை நன்கு விளக்கும் கதை ஒன்று தெரியுமா? மனிதர்கள் தங்கள் பூத உடலை நீத்து, ஆவி வடிவில் யாத்திரை தொடங்கிச் செல்லும்போது, அவர்களில் சொர்க்கம் செல்வோரும், நரகம் செல்வோரும், தனித்தனியே பிரிக்கப்படும் முச்சந்தி ஒன்றிருக்கிறது. ஒரு நாள் மூன்று ஆவிகள் அவ்விடத்தில் சேர்ந்தாற்போல் வந்து சேர்ந்தன. அங்கே காவல் புரிந்த தேவதூதன் அவற்றை வழி மறித்து நிறுத்தி, அவற்றின் உலக வாழ்க்கையைப் பற்றிய விவரங்களைக் கேட்டான்.

**முதல் ஆவி:** – தேவ! நான் பூவுலகத்திலே சுத்தப் பிரம்மச்சாரியாயிருந்தேன். பெண்களின் முகத்தைக்கூட ஏறிட்டுப் பார்த்ததில்லை. ஆகையால் என்னை சொர்க்கத்திற்கு அனுப்ப வேண்டும்.

**தேவதூதன்:** – அடே! பூவுலகத்திலே அவ்வளவு சுகமாய் இருந்துவிட்டு இல்வாழ்க்கையில் புகாமலே தப்பித்து வந்தவனா நீ? அப்படியானால் கொஞ்ச நாளைக்கு நீ நரகத்தில் இருந்து வரலாம், போ அந்தப் பாதையில்!

**இரண்டாவது ஆவி:** – ஸ்வாமி! நான் பதினெட்டு வயதில் மணம் செய்து கொண்டேன். அது முதல் அறுபத்திரண்டு வயது வரையில் இல்வாழ்க்கை இன்னல்களை அநுபவித்திருக்கிறேன். கருணை செய்ய வேண்டும்!

**தேவதூதன்:** – ஐயோ பாவம்! நாற்பத்து நான்கு வருஷமா கிரகஸ்தாசிரமத்தில் இருந்து கஷ்டப்பட்டாய்? போதும் உனக்குத் துன்பம், இதோ சொர்க்கப் பாதையில் செல்.

**மூன்றாவது ஆவி** (முதல் இரண்டு ஆவிகளைப் பற்றிய தீர்ப்பையும் கவனித்துவிட்டு): – பிரபோ! அடியேன், ஒரு பெண்டாட்டி இறந்த பிறகு இரண்டாவது மனைவியையும் கல்யாணம் செய்து கொண்டு கஷ்டப்பட்டவன். என்னைச் சொர்க்கத்துக்கு அனுப்புங்கள்.

**அமரர் கல்கி**

**தேவதூதன்:–** அடே, முட்டாள்! ஒரு தடவை இல்வாழ்க்கையின் கஷ்டங்களை அனுபவித்துத் தெரிந்து கொண்ட பிறகும் இரண்டாவது தடவை கல்யாணம் செய்து கொண்டாயா? உன்னைப் போன்ற நிர்மூடர்களுக்குச் சொர்க்கத்தில் இடமில்லை, போ, நித்திய நரகத்திற்கு.

• • •

மேற் சொன்ன கதையில், புருஷர்களுக்கு நரகத்தைப் போல் துன்பம் அளிப்பதாக இல்வாழ்க்கை கருதப்பட்டிருப்பதேன்? அதாவது இல்வாழ்க்கையைப் புருஷர்களுக்கு நரகமாகச் செய்வது எது? – ஸ்திரீகளுடைய விவாதம் செய்யும் சுபாவந்தான் என்று எனக்குத் தோன்றுகிறது.

உதாரணத்திற்கு இதைக் கேளுங்கள். ஒரு நாள் நானும் எனது நண்பர் ஸ்ரீமான்..... அவர்களும் ஸல்லாபம் செய்து கொண்டிருந்தோம். ரவீந்திரநாத தாகூரின் சிறுகதைகளைப் பற்றிப் பேச்சு வந்தது. பாரதியாரும், வ.வே.சு. அய்யரும் சேர்ந்து அச் சிறுகதைகளில் சிலவற்றை அற்புதமான தமிழ்நடையில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார்கள் அல்லவா? அந்தப் புத்தகத்தில் வெளியாகியிருக்கும் கதைகளைப் பற்றிப் பேசினோம். அவற்றில் ஒன்றை, "எல்லாவற்றிலும் சிறந்தது" என்று நான் குறிப்பிட்டேன். அவர் வேறொரு கதையைப் பற்றி அத்தகைய அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். நாங்கள் விவாதமிட்டுக் கொண்டிருக்கையில் அந்த ஸ்ரீமானுடைய தர்மபத்தினி அங்கே வந்தாள். விவாதம் இன்னதென்று அந்த ஸ்ரீமதி அறிந்ததும் என்ன சொன்னாரென்று நினைக்கிறீர்கள்? "நீங்கள் சொல்லும் இரண்டு கதைகளும் அந்தப் புத்தகத்தில் இல்லையே!" என்றுதான்.

எனக்குச் சிரிப்பு வந்தது. ஏனெனில் முதல் நாள் இரவுதான் மேற்படி புத்தகத்தை எடுத்துப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆகையால் ஸ்ரீமதி சொல்வது தவறு என்பதை நன்கு அறிவேன்.

"ரொம்ப நன்றாயிருக்கிறது! கதைகளே இல்லையா?" என்றேன்.

"வெகு அழகு! எங்களை என்னவென்று நினைத்தாய்?" என்றார் ஸ்ரீமான்.

நாங்கள் எவ்வளவு சொல்லியும் அந்த ஸ்ரீமதி கேட்க வேண்டுமே? கிடையாது. திரும்பத் திரும்பப் பிடிவாதமாய் 'அந்தப் புத்தகத்தில் இந்தக் கதைகள் இல்லை' என்றே சொல்லிக் கொண்டிருந்தார்.

"புத்தகத்தை எடுத்து வரச் சொல்லவா?" என்று பயமுறுத்தினேன்.

அப்போதாவது அந்த ஸ்ரீமதி ஒப்புக் கொண்டாரென நினைக்கிறீர்களா? கிடையவே கிடையாது. மீண்டும் மீண்டும் அந்தக் கதைதான்.

கடைசியாகப் புத்தகம் வந்தது. ஏடுகளைப் புரட்டினேன். ஏக காலத்தில் ஆறு கண்கள் புத்தகத்தை உற்று நோக்கின. குறிப்பிட்ட கதைகள் அதில் **இல்லை!**

என்னால் நம்பவே முடியவில்லை. நேற்றிரவு பார்த்த கதைகள் இன்று எப்படி இல்லாமல் போகும்? ஸ்ரீமதிக்கு ஏதேனும் குட்டிச் சாத்தான் வித்தை தெரிந்திருக்குமோ என்று எண்ணலானேன். கடைசியாக, ஆராய்ந்து பார்த்ததில் விஷயம் தெரிய வந்தது.

முதல் நாள் இரவு நான் படித்தது அப்புத்தகத்தின் அழகிய விரிவான முன்னுரையை. இந்த முன்னுரையில் தாகூர் கதைகளின் அழகைத் தனித்



தனியாக எடுத்துக் காட்டியிருந்தது. நாங்கள் குறிப்பிட்டுப் பேசிய இரண்டு கதைகளைப் பற்றியும் அதில் பிரஸ்தாபம் இருந்தது. ஆனால் எக்காரணத்திலோ புத்தகத்தில் அவை விடப்பட்டிருந்தன. ஒரு வேளை பக்கங்கள் அதிகமாகிவிட்டபடியால் இரண்டாம் பாகத்தில் சேர்க்கலாம் என்று விடப்பட்டிருக்கலாம்.




நாங்கள் முன்னுரையை மேலெழுந்த வாரியாகப் படித்து விட்டு, இங்கிலீஷில் கதைகள் படித்த ஞாபகத்தை வைத்துக் கொண்டு வாதம் செய்தோம். அந்த ஸ்ரீமதியோ ஆங்கிலத்தில் தாகூர் கதைகள் படிப்பதில்லையாதலால், முன்னுரையில் கண்ட கதைகள் புத்தகத்தில் விடப்பட்டிருந்தனவென்பதைக் கவனித்திருந்தார்.

பெண்ணாய்ப் பிறந்தவர்களோடு விவாதம் செய்யக் கூடாதென நான் சொல்வது ஏனென்று இப்போது தெரிகிறதல்லவா? அப்பா! ரொம்பப் பொல்லாதவர்கள்! விவாதத்தை எப்போது நிறுத்துவதென்பதே அவர்களுக்குத் தெரியாது. முடிவு வரையில் வளர்த்திக் கொண்டே போவார்கள்.

அவ்வளவு நிச்சயமாய்த்தான் அந்த ஸ்ரீமதிக்கு தெரியுமே, இரண்டு ஆண் பிள்ளைகள் சொல்கிறார்களே என்பதை உத்தேசித்து, 'ஒருவேளை இருக்கலாம்' என்று ஒப்புக் கொள்ளலாமல்லவா? நீங்களும் நானுமாயிருந்தால் அப்படி ஒப்புக் கொள்வோம். ஆனால் இந்தப் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் மாட்டார்கள். சொந்தக் கணவன் விஷயத்தில்கூட, கணவனுக்காகச் சமையல் செய்வது, சாப்பாடு போடுவது முதலிய சாதாரணக் கைங்கர்யங்கள் எல்லாம் அவர்கள் செய்யலாம். ஆனால், விவாதத்தில் விட்டுக் கொடுக்கும் விஷயம் மட்டும் அவர்களிடம் கிடையாது.

● ● ●

**எ**ங்கள் அடுத்த வீட்டில் வசிக்கும் இராகவனும், மைதிலியும் வெகு அன்னியோன்ய தம்பதிகள். ஆனால் என்ன பிரயோஜனம்? அவர்களுடைய இல் வாழ்க்கையை ஒரு நெடிய முடிவில்லாத விவாதமென்றே சொல்லலாம்.

அற்ப விஷயம்: சலவைக்குப் போட்ட துணிகள் வருகின்றன. இராகவன் கணக்கெண்ணி விட்டுப் "பதினெட்டுத் துணி போட்டோம், பதினெட்டும் வந்து விட்டன'' என்கிறான். மைதிலி "பத்தொன்பதல்லவா போட்டோம், ஒன்று குறைகிறதே?'' என்கிறாள்.

"மகா - ஸ்ரீ - ஸ்ரீ - ஸ்ரீ வண்ணாரச் சின்னான் அவர்கள் கணக்கில் தப்புவாரா?" என்று இராகவன் கேட்கிறான். ''நீங்களே தப்பும்போது அவர் தப்ப மாட்டாரா?" என்கிறாள் மைதிலி. இவ்வாறு முக்கால் மணி நேரம் விவாதம் நடக்கிறது.

இத்துடன் போயிற்று என்கிறீர்களா? மறுநாள் இராகவன், "என்னுடைய நீலக்கரை வேஷ்டியைக் காணோமே?" என்று கேட்கும் போது, "நேற்றைக்கு சலவைத் துணி ஒன்று குறைவு என்றேனே, கேட்டீர்களா?" என்று மறுபடியும் விவாதம் தொடங்குகிறாள்.

● ● ●

**வி**வாதம் செய்யும் விஷயத்தில் ஆண் மக்களுக்குக் கிட்டக் கூடாததான ஒரு சாதனம் பெண்மணிகளுக்கு உண்டென்பதையும் மறந்து விடக் கூடாது. மேற் சொன்ன தாகூர் கதை விவாதத்தையே கவனிக்கலாம்.

அந்த ஸ்ரீமதிக்குத் தாம் சொன்னதில் அவ்வளவு நிச்சயமின்றிக் கொஞ்சம் சந்தேகமாயிருந்தது என்று வைத்துக் கொள்வோம். நாங்கள் புத்தகத்தை எடுத்து வர ஆள்விட எத்தனிக்கையில், அவர் **"நான்** சொல்கிறேன்; **நீங்கள்** ஒப்புக் கொள்ள மாட்டோமென்கிறீர்களே" என்பதாகச் சொல்லிக் கண்ணைக் கசக்க ஆரம்பித்திருந்தால், அதற்குப் பதிலாக நாங்கள் என்ன செய்ய முடியும்? பேசாமல், "அம்மணி! அந்தக் கதைகள் இந்தப் புத்தகத்தில் இல்லையென்று ஒப்புக் கொண்டு விடுகிறோம். அது மட்டுமா? அந்தப் புத்தகமே கிடையாது, ரவீந்திரநாத தாகூர் என்பவரே இல்லை என்று தாங்கள் சொன்னாலும் ஒப்புக் கொள்ளத் தயாராயிருக்கிறோம்!" என்றுதானே சொல்ல வேண்டும்?

சீதை, சாவித்திரி, தமயந்தி ஆகிய

வர்களை நமது முன்னோர்கள் கற்புக்கணி கலன்களாகக் குறிப்பிட்டிருக்கிறார் களல்லவா? என்னுடைய பரீக்ஷையில் இவர் களெல்லாம் தவறி விடுகிறார்களென்பதை வருத்தத்துடன் தெரிவிக்க வேண்டியதாயிருக்கிறது. இவர்களில் ஒருவராவது தங்களுடைய புருஷர்களுடன் விவாதத்தில் விட்டுக் கொடுத்தவர்கள் அல்ல.

காட்டுக்கு வந்தால் இன்னின்ன கஷ்டங்கள் உண்டு என்பதை இராமர் சாங்கோபாங்கமாக எடுத்துச் சொன்னாரே, சீதை கேட்டாளா? அந்த நெருக்கடியான சமயத்திலும் அவர் சொன்னதையெல்லாம் ஆட்சேபித்து, விவாதம்தானே தொடங்கினாள்! அவளுடன் விவாதம் செய்வதை விடக் காட்டுக்கே அழைத்துப் போய்விடலாமென்றுதானே இராமர் அவளை அழைத்துச் சென்றது? வேறெந்தக் காரணத்தைக் கொண்டாவது அத்தகைய பைத்தியக்காரச் செய்கையை ஒருவன் செய்ய முடியுமா? சாவித்திரி, தமயந்தி முதலியோரின் கற்பு லட்சணமும் இதுதானே?

நேயர்களே! கணவனுடன் விவாதமே செய்யாத மனைவி – யாராவது உங்களுக்குத் தெரிந்திருந்தால் எனக்கும் தெரியப்படுத்துங்கள். அப்படிப் பட்டவரை "ஒண்ணாங் கிளாஸ் பத்தினித் தெய்வம்" என்று நான் ஒப்புக் கொண்டு திக்கு நோக்கிக் கும்பிடுகிறேன்.

● ● ●

நேற்றிரவு ஒரு அற்புதமான கனவு கண்டேன். நமது நாட்டில் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் எல்லோருக்கும் வோட்டுரிமை கிடைத்து விட்டது! அது மட்டுமா? புதிய சீர்திருத்த அரசியல் சட்டசபைகள் மிகவும் விஸ்தாரமாக அமைக்கப்பட்டன. எனவே ஸ்திரீகள் அனைவருமே சட்டசபை அங்கத்தினர்களாகி விட்டார்கள். மந்திரிகள் மட்டுந்தான் ஆண் மக்கள். மந்திரிகளுக்கும், மெம்பர்களுக்கும் நீண்ட முடிவில்லாத விவாதங்கள் நடக்கலாயின.

அது முதல் வீடுகளில் புருஷன் மனைவிகளுக்குள் விவாதம் என்பது ஒழிந்தது. எல்லாருடைய இல்வாழ்க்கையும் இன்பமயமாக நடந்தது.

ஆஹா! இந்தக் கனவு மட்டும் உண்மையானால்!

(ஆனந்தவிகடன் 25.3.1934)

# சரித்திரம் கண்டிராத தலைவர்!

மகா அலெக்ஸாண்டர், சரித்திரத்திலேயே முதன் முதலாக உலகத்தை ஜெயித்து வெற்றிக் கொடி நாட்டினார்.

எனினும், தாம் கைப்பற்றிய பிரதேசங்களை நிரந்தரமான அடிப்படையில் ஸ்தாபிக்குமுன் அவர் காலமாகி விட்டார். எனவே, அவர் கண்ட சாம்ராஜ்யம் அவருக்குப் பின் சின்னா பின்னமாகியது.

பிரெஞ்சு சக்கரவர்த்தியும், வெற்றி மேல் வெற்றி பெற்று ஐரோப்பிய நாடுகளின் எல்லைகளையே மாற்றி அமைத்தவருமான வீர நெப்போலியன் படுதோல்வியுற்று, உயிருக்குப் பயந்து ஒளிந்து கொண்டார். இறுதியில் கைதியாகி, அழுவாரின்றி, தனிமையில் இறந்தார்.

முறையே ஜெர்மனியையும் இத்தாலியையும் வல்லரசுகளுக்

கெல்லாம் வல்லரசாகச் செய்த ஹிட்லரும் முசோலினியும் கடைசியில் இழிவான முறையில் பரிதாபகரமாக உயிர் இழந்தனர். அவர்கள் உருவாக்கிய வல்லரசுகள் அவர்களுடைய கண் முன்னிலையிலேயே உச்ச ஸ்தானத்திலிருந்து படுபாதாளத்தில் வீழ்ந்தன.

ஆனால் ருஷ்யாவின் சர்வாதிகாரியாக விளங்கிய மார்ஷல் ஸ்டாலினின் வாழ்க்கை மேற்படி சரித்திர நிகழ்ச்சிகளுக்கெல்லாம் விதிவிலக்காக விளங்குகிறது.



ருஷ்யாவை ஜார் சக்கரவர்த்தி ஆட்சி புரிந்த காலத்தில், மார்ஷல் ஸ்டாலின் சிறையிலிருந்து விடுதலை அடைவதில் வெற்றி பெற்றார்.

ருஷ்யாவில் முதன் முதலாகப் போல்ஷிவிக் சர்க்காரை உருவாக்கிய அரும்பெரும் தலைவர் லெனினின் அபிமானத்தைப் பெறுவதில் வெற்றி பெற்றார்.

லெனினுக்குப் பிறகு அவரது வாரிசு யார் என்ற பிரச்னை எழுந்தபோது, இலக்கிய மேதாவியும் அரசியல் நிபுணரும் நாவன்மை படைத்தவருமான டிரோட்ஸ்கியுடன் போட்டி போட்டு வெற்றி அடைந்தார்.

ஸ்டாலினை எதிர்நோக்கி நின்ற பிரச்னைகள் அத்துடன் முடிந்து விடவில்லை.

அவர் உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் எழுந்த எண்ணிக்கையற்ற எதிர்ப்புகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது; வல்லமை பொருந்திய விரோதிகளை வீழ்த்த வேண்டியிருந்தது.

புரட்சி சம்பந்தமான அழிவு வேலைகளில் தமது திறமையைக் காட்டிய ஸ்டாலின், ஆக்கத் திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வருவதிலும் தமது இணையற்ற சாமர்த்தியத்தை வெளிப்படுத்தினார்.

அதன் பயனாக இன்று சோவியத் ருஷ்யா கைத்தொழில், பொருளாதார முன்னேற்றத்தில் அகில உலகிற்கும் முன்னுதாரணமாக விளங்குகிறது.

இராணுவ பலத்தில் கூட ருஷ்யா, வல்லரசுகள் திகில் கொள்ளும்படியான ஸ்தானத்தை அடைந்திருக்கிறது.

ஹிட்லர் ஆரம்பித்த இரண்டாவது உலக மகா யுத்தத்தில் வெற்றி கண்ட ஸ்டாலினின் பெருமையை எவ்வளவு புகழ்ந்தாலும் தகும்.

ஸ்டாலின் கிராட் நகரில் ருஷ்யர்களுக்கு ஏற்பட்ட தோல்வியை ஸ்டாலின் வெற்றியாக மாற்றியதற்குச் சரித்திரத்தில் உவமை காண்பது அரிது.

இப்போது அணுகுண்டு உற்பத்தியிலும் தான் அமெரிக்காவுக்குச் சளைக்கவில்லை என்பதை ருஷ்யா காட்டி வருகிறது.

இன்று உலகத்தின் தலைவிதியே ருஷ்யாவின் கையில் இருக்கிறது என்று கூறுவது மிகையாகாது.

ருஷ்யா இஷ்டப்பட்டால், உலகத்தையே அழிக்கக்கூடிய, மானிட வர்க்கமே பரிதவிக்கும்படி செய்யக்கூடிய பயங்கரமான யுத்தத்தைச் சிருஷ்டித்து விடலாம்.

அதுபோலவே, உலகத்தில் நிரந்தரமான அமைதிக்கு அஸ்திவாரத்தை அமைக்கக்கூடிய சக்தியும் ருஷ்யாவுக்கு இருக்கிறது.

ஸ்டாலினின் தலைமையில்தான் ருஷ்யாவுக்கு உலக சரித்திரத்தில் எந்த நாடும் கண்டிராத இவ்வளவு பெருமை கிடைத்திருக்கிறது.

எனவே, காலஞ்சென்ற ஸ்டாலினின் பூத உடலைத் தரிசிக்கப் பத்து மைல் தூரத்துக்கு ருஷ்ய மக்கள் கண்ணீரும் கம்பலையுமாகக் காத்து நின்றதைக் குறித்துப் பிரமிப்பு அடைவதற்கில்லை.

இன்று ஸ்டாலினின் புகழ் எட்டுத் திசைகளிலும் எதிரொலிக்கின்றது.

மார்ஷல் ஸ்டாலினுக்கு உலக நாடுகள் யாவும் மரியாதை செலுத்துகின்றன.

ஸ்டாலினுக்குப் பிறகு அவரது ஸ்தானத்தில் யார் ருஷ்யாவின் பிரதம மந்திரியாக வருவது என்பது பற்றிப் பலத்த போட்டியும் போராட்டமும் ஏற்படும் என்று அமெரிக்கப் பத்திரிகைகள் கூறிய ஜோஸ்யம் பொய்த்து விட்டது.

யாதொரு அசம்பாவிதமுமின்றி, மிகவும் ஒழுங்கான முறையில் ருஷ்யாவில் புதிய மந்திரி சபை அமைக்கப்பட்டிருக்கிறது.

போல்ஷிவிக் கட்சியின் முக்கிய தலைவர்களில் ஒருவரும், ஒரு சமயம் ஸ்டாலினின் அந்தரங்கக் காரியதரிசியாக இருந்தவருமான ஸ்ரீ ஜார்ஜிமாலங்காவ் ருஷ்யாவின் பிரதம மந்திரி பதவியை ஏற்றிருக்கிறார்.

ஏற்கெனவே பத்து வருஷங்களுக்கு மேல் ருஷ்யா சர்க்கார் வெளிநாட்டு மந்திரியாக இருந்த பழம் பெருச்சாளியான ஸ்ரீ மாலடாவ் மறுபடியும் அதே பதவிக்கு வந்துள்ளார்.

ஐம்பத்தொன்று வயதான மாலங்காவ், ஸ்டாலினின் சவ அடக்கத்தின் போது கூறிய வார்த்தைகள், ருஷ்யாவின் எதிர்காலக் கொள்கையை ஐயம்திரிபுக்கு இடமின்றி, இரண்டு அர்த்தத்துக்கு இடமின்றித் தெளிவாக்குகின்றன.

பரஸ்பர நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட உலக சமாதானம் தான் ருஷ்ய சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கை; வெவ்வேறு முறையான முதலாளித்துவமும் அபேதவாதமும் ஒத்துழைக்க வேண்டும் என்பதே ருஷ்யாவின் கொள்கை என்று மாலங்காவ் கூறியிருக்கிறார்.

அவரது வார்த்தைகள் சர்வதேச சமாதானத்தில் ஆர்வம் கொண்ட உலக மக்களுக்கு மிகுந்த நம்பிக்கை அளிப்பதாக இருக்கின்றன. ●

**(கல்கி, மார்ச் 15, 1953)**

**நடிகைகளின் பல் செட் பற்றி விதவிதமான ஜோக்குகள் வந்து விட்டன. ஆனால் நிஜமாகவே பல் செட் வைத்திருப்பவர்கள் படும் அவஸ்தையை அறிந்தால் சிரிப்பல்ல; அழுகைதான் வரும்!**

நாற்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டவர்களுக்குப் பல், பிரச்னை தரக்கூடும் என்பது பொதுவான தகவல். பற்குழி, பல் கூசுதல், அடிக்கடி 'ஆடி' விழுதல், பல் சொத்தை எனப் பலவிதமான பிரச்னைகள் பல்லினால் வரலாம். கால்ஷியம் குறைவு என்பது இவற்றுக்கான காரணம்.

உடலின் பலதரப்பட்ட வியாதிகளுக்குப் பல் உபாதைகளே மூலகாரணம் என்று மருத்துவர்கள் சொல்வதால் நடுத்தர வயதைத் தாண்டியவர்கள் தம் பல் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு காணும் விதமாக 'பல் செட்' மாட்டிக் கொள்கிறார்கள்.

ஆனால் அதன் மூலம் வேறுவிதமான பிரச்னைகள் வந்து விடுகின்றன.

ஈறுகளிலும் மேல் அண்ணத்திலும் புண்ணாதல், பொய்ப்பல் செட் கெட்டியாகப் பொருந்தாமல் டான்ஸ் ஆடுதல், மிளகாய் விதை, பருப்பு போன்ற உணவுத் துகள்கள் பல் செட்டின் அடியில் புகுந்து கொண்டு குத்திப் பிராணனை வாங்குதல், பேசும் போது திடீரென்று பல்லுக்கடியில் ஒரு போக்ரன் வெடித்து, செட் கழன்று மானத்தை வாங்குதல் இப்படி என்ன என்னக் குறையாத எத்தனையோ பிரச்னைகள் இந்தப் பல் செட் மாட்டுவதால் உண்டாகின்றன.

● ரோஜா போல் அழகிய 'நிஜ' பல் உள்ளவர்களுக்குப் பிரச்னையில்லை. பிறருக்குப்

# பல் 'செட்' ஆக பலே யோசனை!

## மை நேம் இஸ்
## 'நோ நேம்'!

'லே ஹர்லியர்ஸ்' (Les Hurleurs) இசைக்குழுவிற்கு ஐந்து வயதாகிறது. இந்த இசைக் குழுவிலிருக்கும் ஏழு பேரும், பாரீஸ் நகர வீதி களிலும், பிரான்ஸின் மூலை முடுக்குகளிலும் பாடித் திரிந்தவர்கள். திருவனந்தபுரத்திலும், பெங்களூரிலும் நிகழ்ச்சிகளை முடித்துவிட்டு சமீபத்தில் சென்னைக்கு வந்தது 'லே ஹர்லியர்ஸ்'. அலையன்ஸ் ப்ரான்கெய் கம் (Alliance Francaise De Chennai), இந்திய கலாசார உறவு மையமும் இணைந்து, சென்னை மியூசியம் தியேட்டரில் நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தன.

''இதுவரை முன்னூறுக்கும் மேற்பட்ட இசை நிகழ்ச்சிகளை பிரான்ஸ், ஜெர்மனி மற்றும் இத்தாலி ஆகிய நாடுகளில் நடத்தியிருந்தாலும், இந்திய சுற்றுப் பயணத்தின் போது கிடைக்கிற மன நிறைவை வேறு எதுவும் தரவில்லை'' என்றார் இந்தக் குழுவின் பிரதான பாடகர் ஜீன்-சார்லஸ் வெர்சாரி (Jean-Charles Versari).

நம்ம ஊர் ஆர்கெஸ்ட்ராக்காரர்கள் 'ரெடி. ஒன், டூ, த்ரீ, ஃபோர்' என்று சொல்லி ஆரம்பிக்கிற மாதிரி யெல்லாம் இல்லை. ஒவ்வொரு பாட்டும் இயல்பாய் ஆரம்பித்து முடிகிறது (அது பாட்டுக்கு!)

நம் சினிமா இசையில் பழக்கத்திலிருக்கும் கிடார், ட்ரம்ஸ், சாக்ஸபோன், ட்ரம்பட், வயலின் போன்ற இசைக் கருவிகள்தான் என்றாலும், ஒவ்வொரு பாட் டும், ஒவ்வொரு ரகம். அதிலும் நின்றவாக்கில் அந் தப் பெண்மணி இசைத்த வயலினிசை இன்னும் 'ஹம்' பண்ண வைக்கிறது! இசைக்குக் கொடுத்த அதே முக்கியத்துவத்தை பாடல்களின் கவித்துவத் திற்கும் கொடுத்திருக்கிறார்கள். 'மை நேம் இஸ் நோ நேம்', 'பஜார்', 'சன்டே' என்று பல பாட்டுக்கள். 'தி லாஸ்ட் டான்ஸ்' என்ற கடைசி வரவேற்பு. ஒரு மூலையில் ஐந்து பெண்கள் கையைத் தட்டி ஆடத் துவங்க, ஆங்காங்கே எல்லோரும் எழுந்து ஆடக் கிளம்பி விட்டார்கள்!

— கே. பாலசுப்ரமணியன்
படம் : எஸ். சங்கரலிங்கம்



இதிலிருந்து தப்பிக்க ஒரு வழியில்லையா? என்றால் உண்டு.

**பல் செட்டுக்கு மெத்தை போடுங்கள் :**

பள்ளிச் சிறுவர்களின் யூனிஃபார்ம் தைக் கும் வெள்ளை 'ட்ரில்' துணியை சுமார் அரை மீட்டர் வாங்கிக் கொள்ளவும்.

பல் செட்டை இந்தத் துணியின் மீது வைத்து பால் பாயின்ட் பேனா அல்லது பென்சிலால் அதன் அடிப்பாக வடிவத்தை அப்படியே துணி யில் வரைந்து கொள்ளவும்.

பிறகு வரைபடத்தின்படி, கூர்மையான கத்திரிக்கோலால் பிசிறில்லாமல் வெட்டியெ டுக்கவும். இதுதான் 'மெத்தை'.

இந்த மெத்தைத் துணியை நன்கு நனைத்து, பல் செட்டின் அடிப்பாகத்தில் பொருத்தவும். (மேல் பல் வரிசை என்றால் மேல் பாகம்.)

கையால் பொருத்துவதை விட, பிரஷ்ஷின் அடிப்பாகத்தால் அழுத்திப் பொருத்துவது சுல பம். (விரலால் அழுத்தும் போது ஒருவேளை ஒட்டிக் கொள்ளாமல் அடம் பிடித்து வெளியே வந்து விடலாம்.) 'மெத்தை', பல் செட் முழு வதும் பரவி இருக்க வேண்டும் என்பது தவிர, வெளியே நீட்டிக் கொண்டிருக்கக் கூடாது என் பது வெகு முக்கியம்.

இப்படி 'மெத்தை' வைத்துப் பல் செட் அணிவதால், முன் சொன்ன பிரச்னைகளைத் தவிர்த்து விடலாம்.

சில சமயம் 'மெத்தை' மடிந்து போவதால் ஈறில் ஒரே இடத்தில் அழுத்தம் (localized Pressure) ஏற்படலாம். உடனே 'செட்'டை வெளியே எடுத்து, மெத்தையை மடிப்பில்லாமல் சீராகப் பரத்தி விட்டால் தீர்ந்தது விஷயம்!

சுமார் 10 – 12 'மெத்தை'கள் கத்தரித்து ரெடி யாக வைத்துக் கொண்டால் வசதியாக இருக்கும்.

பல் செட் பிரச்னைதான் இனி இல் லையே என்று இளமை துள்ள முறுக்கு, தட்டை என்று நொறுக்கித் தள்ளுவதில் ஆட்சே பணை இல்லை. ஆனால் சூயிங்கம், சூயிங் கம் அளவுக்குக் இளறப்பட்ட அல்வா மாதிரியான சமாசாரங்களைத் தவிர்த்து விடுவதே பெட்டர்!

இரவு படுக்கப் போகும்போது பல் செட்டை எப்படி டூத் பேஸ்ட் கரைசல் நீரில் ஊறவைப்பீர்களோ, அதே போல் இந்த 'ட்ரில்' துணி மெத்தைகளை டிடர் ஜெண்ட் கரைசல் நீரில் ஊறவைப்பதும், மறுநாள் காலை நன்கு அலசி விட்டுப் பயன்படுத்துவதும் அவசியம்.

— எஸ்.ஆர். சாரி

# வெடிகுண்டு வழக்கில் காமராஜ்?

● சிவகங்கை பாளையக்காரர் முத்துவடுகநாதரின் மனைவி வேலு நாச்சியார், கணவர் கும்பினியின் படைக்கு பலியாகிவிட, பிரிட்டிஷாரை எதிர்த்துப் போரிட்டார். அரண்மனைக்கருகே வெடி மருந்து குவித்து வைக்கப்பட்டிருந்தது. வேலுநாச்சியார் அதை அழிக்க விரும்பினார். குயிலி என்ற அரண்மனைப் பணிப் பெண், தம் உடல் முழுவதும் நெய்பூசி நெருப்பைப் பற்ற வைத்துக் கொண்டு அரண்மனை மேல் மாடத்திலிருந்து, வெடி மருந்துக் கிடங்கில் குதித்து ஆயுதக் கிடங்கை அழித்து விட்டாள்!

● சிருங்கேரி மடத்தில் திப்பு சுல்தானின் 29 கடிதங்கள் பாதுகாக்கப்படுகின்றன! மராட்டிய மன்னன் ஒருவன் சிருங்கேரி மடத்தைக் கொள்ளையடித்தபோது, சங்கராச்சாரியார் திப்புவிடம் உதவி கேட்டார். அவரும் உதவினார். அன்று முதல், திப்பு மரணமடையும் வரை ஆண்டு தோறும் பிரார்த்தனை செய்து, திப்புவுக்குப் பிரசாதம் அனுப்புவதை சங்கராச்சாரியார் வழக்கமாய்க் கொண்டிருந்தார்!

● சென்னை மாகாணத்தில் கடும் பஞ்சம் நிலவிய போது, பஞ்ச நிவாரண வேலையின் ஒரு பகுதியாக வெட்டப்பட்டதுதான் பக்கிங்காம் கால்வாய். ஆந்திர மாநிலம் பெத்தகஞ்சம் முதல் மரக்காணம் வரை 261 மைல் நீளக் கால்வாய் இது. 1801-ல் தொடங்கி, ஐந்தரை லட்சம் ரூபாய் வரை செலவிடப்பட்ட பின், தொடராமல் பணி நின்று போனது. மறுபடி 1876 - 78 பஞ்சத்தின் போது மறுபடி முப்பது லட்சம் செலவில் பணி நடந்தது.

● 1933-ல் விருது நகர் போலீஸ் ஸ்டேஷன் மீது வெடிகுண்டு வீசியதாக வழக்கு தொடரப்பட்டது. பின்னர் குற்றம் நிரூபணமாகவில்லை என்று கேஸ் தள்ளுபடி ஆனது. வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட இருவரில் ஒருவர் காமராஜ்!

● "மகாகனம் பொருந்திய நீதிபதி அவர்களே! இந்த உப்பை வாங்கிக் கொள்ளுங்கள். இது சத்தியாகிரகிகள் காய்ச்சிய உப்பு. நீங்களும் உங்கள் பதவியைத் துறந்து எம்மோடு, சத்தியாகிரகம் செய்ய வாருங்கள். தேசம் நம்மை அழைக்கிறது" - இது நாடக வசனமில்லை. 1931-ல் பம்பாய் நீதிமன்றம் ஒன்றில், உப்பு சத்தியாகிரகத்தில் கலந்து கொண்டு கைதான பெண் தொண்டர் ஒருவரின் முழக்கம். அவர் கமலா தேவி சட்டோபாத்யாயா. ○

*(தமிழ்ப்புத்தகாலயம் வெளியிட்டுள்ள 'விடுதலைத் தழும்புகள்' நூலிலிருந்து)*

தொகுப்பு : **சி.எம்.**

# பட்டா

## பதினாறு

**பா**ரதி சற்று யோசனைக்குப்பின் பதிலளித்தாள். "எனக்கு சரியாகத் தெரியாது. நீங்கள் இந்த வீட்டைப் பதிவு செய்த பத்திரங்களிலிருந்து கண்டு கொள்ளலாமே" என்றாள் நிதானமாக.

"டாக்குமெண்ட்ஸ் இருக்கிறதா?"

"அவர்தான் அலமாரியில் எங்காவது வைத்திருக்க வேண்டும். ஆனந்த் போன பின் எனக்கு அவற்றையெல்லாம் தேடவேண்டும் என்று தோன்றவேயில்லை. அப்பாவைக் கேளுங்கள்."

"உங்க கணவருக்கு எவ்வளவு சம்பளம் தெரியுமா உங்களுக்கு?"

"தெரியாது. ஒரு பதினையாயிரம் இருக்கும் என்று எண்ணிக் கொண்டிருந்தேன்."

"இவ்வளவு பெரிய வீடு இந்தச் சம்பளத்துடன் பொருந்துகிறதா? வீடு யார் பேரில் இருக்கிறது?"

"எனக்கு இந்த விவரங்கள் எதுவும் தெரியாது" என்றாள் நெற்றியைச் சுருக்கிக் கொண்டு.

"மன்னிக்கவும். உங்களை ரொம்ப தொந்தரவு செய்கிறேன்."

"சோமசேகர், சோமசுந்தர் இவர்களைத் தவிர வேறு ஏதாவது சோமுவை உங்களுக்குத் தெரியுமா?"

"அதுதான் சொல்லி விட்டேனே. சோமசுந்தரை எனக்குத் தெரியாது. நேரடியாகப் பரிச்சயமில்லை. ஆனந்த்தான் ஆபீசில் தன்னுடைய ஆராய்ச்சிகளையெல்லாம் காப்பியடித்தவர் என்று சொல்லியிருக்கிறார். அதுவரைதான் தெரியும். சோமசேகர், முன்னால் என் உறவுக்காரன். இந்நாட்களில் எனக்கு மன ஆறுதல் அளிக்கும் உத்தம புருஷர்."

"அந்த உத்தம புருஷர் உங்கள் கணவரைக் கொன்றதாக ஒப்புக் கொண்டு வாக்கு மூலம் கொடுத்திருக்கிறார்!"

"யாரு முன்னாவா?"

"சோம சேகர் என்கிற, சோமு என்கிற முன்னா."

பாரதியின் முகம் சட்டென்று ஒளியிழந்தது. தலையைப் பிடித்துக் கொண்டு நாற்காலியைத் தேடி உட்கார்ந்து விட்டாள். கைகள் நடுங்கின. "முன்னாவா! அடக் கடவுளே" என்று அடக்க முடியாமல் பீறிட்டு அழுதாள்.

"மிஸஸ் ஆனந்த், உங்களுக்கு இவ்வளவு பெரிய அதிர்ச்சி தர்றதில் எங்களுக்கு ரொம்ப வருத்தமாக இருக்குது. உங்களுக்கு இந்தச் சமயத்தில் ஆதரவா இருக்கிற ஒருவர் தான் உங்கள் கணவரைக் கொன்றவன்னு தெரிஞ்சா உங்க மனசு எத்தனை வேதனைப்படும்ங்கறது புரியுது."

"முன்னா எங்க இப்ப?"

"அவரைக் கைது பண்ணப் போறோம். காவல் நிலையத்தில் இருக்கார்."

"அவன் கூடப் பேசியாகணும்."

"அவர் உங்க கூட பேச விரும்பாமலிருக்கலாம்."

"இல்லை. பேசியாகணும்" என்று போனை எடுத்தாள்.

"அவர் வீட்டில் இல்லை. ஹை கிரவுண்ட்ஸ் போலீஸ் ஸ்டேஷன்ல வச்சிருக்கோம்."

"அரஸ்ட் பண்ணாதிங்க. நான் அவன் கூடப் பேசியாகணும்."

"..............."

"இல்லை என்னை அங்க அழைச்சுக்கிட்டுப் போங்க."

"அவர் உங்களை சந்திக்க விரும்ப மாட்டார்னு நினைக்கிறேன்."

"இன்ஸ்பாக்ட் அவர் உங்ககிட்ட, தான் குற்றத்தை ஒப்புக் கொண்டதை சொல்ல வேண்டாம்னு கேட்டுக் கொண்டார். நான் தான் அதை நீங்க பத்திரிகை மூலமா தெரிஞ்சுக்கறதைவிட முன்னாலேயே சொல்லிடறது அதிர்ச்சியைக் குறைக்கும்னு உங்ககிட்ட சொல்லிடத் தீர்மானிச்சேன்."

பாரதி முன்னா முன்னா என்று தலையை திருப்பித் திருப்பி அசைத்து அசைத்து அழுதாள். அவள் முகம் மிகவும் விகாரமாக, மூக்கில் சளி ஒழுக அழுதாள்.

பாரதியின் தந்தை வந்து அவளை அணைத்து விசாரித்து "என்ன கண்ணு?"

"முன்னா! முன்னாதான் ஆனந்தைக் கொன்னதா ஒப்புத்துகிட்டானாம்!"

"அப்படியா?" என்று அவரும் பேயறைந்தது போல் முகம் வெளிறிப்போய், "எப்படி? இதை என்னால் நம்பவே முடியலையே இன்ஸ்பெக்டர். உங்ககிட்ட நிரூபண சாட்சியங்கள் இருக்குதா?"

"அவர் விரல் ரேகை அடையாளங்கள் துப்பாக்கி ட்ரிக்கர்ல இல்லைன்னாலும் அதனுடைய உடல் பாகத்தில் இருந்தது. மேலும் அவரே தன்னிச்சையா வலிய வந்து ஒப்புத்துக்கிட்டார்."

"என்ன காரணம் சொன்னான்?"

"பாரதியை ஆனந்த் நடத்திய விதம் சரியில்லை. தான் அவளை மிகவும் நேசித்ததாகவும் அதனால் அவளை அலட்சியப்படுத்தியதைத் தாங்க முடியலைன்னும் காரணம் சொல்கிறார்."

"திஸ் இஸ் அன்பிலீவபிள்" என்றார் பாரதியின் தந்தை. "எங்கே அவன்? இப்பவே பாத்தாகணும்."

"அவர் உங்களைப் பார்க்க மறுப்பார்."

"மறுக்க மாட்டான். மறுக்க மாட்டான். நான் அவனைப் பார்த்தே ஆகணும்."

"மிஸஸ் ஆனந்த், முன்னா சோமசேகர் வேற யாரோ ஒரு கொலைகாரனை காப்பாத்தறதுக்காகக் குற்றத்தை வலிய வந்து ஒப்புத்துகிட்டாரோன்னு ஒரு சந்தேகம் எங்களுக்கு இருக்கிறது. அப்படி இருக்கலாமா? முன்னா எப்படிப்பட்டவர்? கொலை செய்யக்கூடியவரா தெரியலை. ரொம்ப சாப்டா இருக்கார். ரொம்ப சாதுவா இருக்கார். அவர் கண்களில் குற்றம் தெரியலை. எங்களுக்கு அந்த மாதிரி ஒரு சந்தேகம். அது பற்றி உங்களுக்கு எதாவது விஷயம் தெரிஞ்சா அது போலீசுக்கு உதவியா இருக்கும்."

'அது வந்து' என்று தயக்கத்துடன் பாரதி துவங்க, அவள் தந்தை இடைமறித்து "ப்ளீஸ் இப்ப அவளைக் குழப்பாதிங்க. இவளுக்கு ஒண்ணும் தெரியாது. தானுண்டு கணவன் உண்டுன்னு இருந்தா. முன்னாவுக்கு அவளைக் கல்யாணம் செய்து வைக்க நான்தான் தடுத்தேன். காரணம் ஜெனட்டிக் ஆரோக்கிய காரணங்கள்தான். இல்லைன்னா..."

"சொன்னீங்களே."

"அதனால முன்னா யாரையோ மறைக்கிறான். யாரை மறைக்கிறான் என்பதெல்லாம் என் மகளுக்கு ஏதும் தெரியாது. லீவ் ஹர் அலோன். பாரதி, மை சைல்டு. நீ இங்கயே இரும்மா. முன்னாவை போலீஸ் ஸ்டேஷன்ல பார்த்துட்டு வந்துர்றேன். உன்னால அவனைச் சந்திக்கிற அதிர்ச்சியைத் தாங்க முடியாதும்மா. கூடாதும்மா."

ரியாஸை அழைத்தது, "பாருங்க ரியாஸ். என் மகளுடைய ஒரே ஒரு நம்பிக்கையா இருந்தான் முன்னா. அத்தனை ஆறுதல் சொல்லி அத்தனை அன்பா இருந்தான். அவன் இந்தக் காரியத்தை செய்தான்ங்கறது இவளுக்கு எப்படிப்பட்ட அதிர்ச்சியா இருக்கும்? யோசித்துப் பாருங்க. பைத்திய

மாயிடுவா. சில நாளைக்கு இவளை விட்டு வையுங்க."

"நாங்க உங்க மகளை அனாவசியமா தொந்தரவு செய்ய விரும்பலை. அவங்களை என்ன செய்யணுங்கறீங்க?"

"லீவ் ஹர் அலோன்" என்றார் இரைச்சலாக.

"இதற்காக இவ்வளவு இரைச்சலா சொல்ல வேண்டாம்..."

"முன்னாதான் சொன்னான்னு உங்களுக்கு தோணிச்சன்னா பை ஆல் மீன்ஸ் கோ அஹெட், அரஸ்ட் ஹிம். என் மகளுக்குக் கொடுத்த அதிர்ச்சி போதும்" என்று கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டார். கண்ணீர் பெருகியது. பாரதி உறைந்தது போல உட்கார்ந்திருந்தாள்.

"சங்கர் நீங்க சாரை அழைச்சுட்டு சேகரைச் சந்திக்க வையுங்க. சார் உங்க நெவ்யுதானே அவர்? அவரை சந்திச்சு ஒரு லாயரை ஏற்பாடு பண்ணச் சொல்லுங்க. அவர் ஒரு மாஜிஸ்திரேட் முன்னால குற்ற ஒப்புதல் வாக்கு மூலம் கொடுக்கணும். அதுக்கு ஒரு வக்கீல் உதவி இருக்கிறது, பிற்பாடு கோர்ட்டில வாதாடறதுக்கு ஏதுவா இருக்கும். எங்க அனுபவத்தில இருந்து சொல்றம். அதனால... நீங்க போய்த் திரும்பற வரைக்கும் நான் உங்க மகளுக்குக் காவலா, துணையா இருக்கேன். சீக்கிரம் வ்ந்துருங்க."

"பாரதி இருக்கியாம்மா?" என்றார் பணிவுடன்.

தலையசைத்தாள்.

"நீ பாட்டுக்கு பேசாம ரூம்ல போய்ப் படுத்துக்கிட்டு இரு. நீ எதும் அவர்கிட்ட பேச வேண்டாம். உனக்குப் பாதுகாவலாத் தான் இருப்பார். என்ன, நான் முன்னாவை சந்திச்சுட்டு உடனே வந்துர்றேன். நீங்க ஹால்ல உட்கார்ந்திருங்க ரியாஸ்."

"கவலைப்படாதீங்க. உங்க டாட்டரை எந்த விஷயத்திலயும் தொந்தரவு செய்ய மாட்டேன். இனிமே கேள்விகளும் கேட்க மாட்டேன். துணைக்கு இருக்கேன். அவ்வளவுதான்" என்றார்.

தந்தை விலகுமுன் பாரதியை தோளோடு அணைத்து அவள் காதருகே ஆறுதலாகப் பேசி விட்டு அவளை மாடிக்கு அழைத்துச் சென்றார். மெல்ல படுக்கையறைக்குள் சென்று அந்தக் கதவை மென்மையாகச் சார்த்தி விட்டு, "உடனே வந்துர்றேன் கவலைப்படாதே பாரதி" என்று சொல்லி விட்டு ஜீப்பில் ஏறிக் கொண்டார்.

"சங்கர் நீங்க சேகர் கிட்ட அவர் கன்ஃபஷன் எக்ஸ்ட்ரா ஜுடிஷியல்ங்கறதை விளக்கிச் சொல்லுங்க. என்ன?"

"சரி."

> அன்புள்ள கல்கி வாசகர்களுக்கு,
>
> இந்தத் தொடர்கதை முடியும் தருவாயில் இருக்கிறது. ஒரு சம்பிரதாயமான மர்மக் கதையின் அமைப்பில் எழுதப்பட்ட இந்தக் கதையில் எல்லா துப்புக்களும் கொடுக்கப்பட்டு விட்டன. இதன் கதாபாத்திரங்களில் ஆனந்தைக் கொன்றது யார்? உங்களால் கண்டுபிடிக்க முடிகிறதா பாருங்கள். பரிசாக என்னால் மாருதி கார், சௌபாக்கியா வெட் கிரைண்டர் எதுவும் அளிக்க முடியாது. நான் எழுதி அடுத்த மாதம் வெளிவரப் போகும் இன்டர்நெட் இணையம் பற்றிய (தமிழ்தான்) இந்த புத்தகத்தை வெளிவந்து ஒரு அத்தியாயம் வாரத்துக்குள் (18.11.98க்குள்) சரியான விடையளிப்பவர்களுக்குப் பரிசாக அளிக்கிறேன்.
>
> அன்புடன்,
> சுஜாதா

அவர்கள் சென்றதும் ரியாஸ் ஹாலில் தனியாக உட்கார்ந்திருந்தார். 'அவுட் லுக்' இதழைப் புரட்டினார். டீ.வி.யின் ரிமோட் சோபாவில் கிடந்தது. அதை எடுத்து பட்டன்களை அழுத்திப் பார்த்தார். அந்த தெலுங்குப் படம் இன்னமும் ஓடிக் கொண்டிருந்தது. இப்போது அந்த மனைவி தன் மகன் காலில் விழுந்து கண்ணீர் சிந்தி தன் கணவனின் உயிரைக் காப்பாற்றும்படி கேட்டுக் கொண்டிருக்க, இன்ஸ்பெக்டர் தான் மகன் போலும் - அவள் கேட்கக் கேட்க, என் தகப்பன் குற்றவாளி; அவரைக் கைது செய்வது என் கடமை என்று சொல்ல, தாய் தரையில் இழுக்கப்பட, மகன் தந்தை இரண்டு பேரும் என்டிஆரோ, அக்கினேனியா அவருக்குச் சரியாக சொல்லத் தெரியவில்லை.

சானலை மாற்றினார்.

(தொடரும்)

"படத்தோட டைட்டிலுக்காகவே இதில் நடிக்க ஒத்துப்பீங்க சார்" என்று நடிகர் சல்மானிடம் ஆரம்பித்தார், கதை சொல்ல வந்த புது டைரக்டர்.

"அப்படி என்ன பேரு?"

"சல்'மான்' வேட்டை!"

"Fantastic! அப்ப கதையச் சொல்லு சீக்கிரம்" என்று போட்டுக் கொள்ள எடுத்த சட்டையை விசிறி விட்டு விசாலமான மார்பைக் காட்டியபடி சோபாவில் அமர்ந்தார்.

"ஓபனிங் ஷாட், ராஜஸ்தான் பாலைவனம். ஜூம் பண்ணறோம்... ஒரு பங்களா, நடு ஹால்ல வேட்டை ட்ரஸ்ல நீங்க... ஹாஃவ் கட்-அப்!"

சோமி, சோனம்னு அதைக் கொஞ்சம் கிளாமரா காட்டறோம். நீங்க அவங்களை ஏமாற்றி, அவங்க உங்களை ஏமாற்றினதால உங்க மனசு 'டைனமைட்' மாதிரியாயிடுது!"

"வெரி இன்ட்ரஸ்டிங். அப்புறம்?"

"அதனால, மான்கள் மேல உங்களுக்குத் திரா வெறுப்பு! பழிக்குப் பழி வாங்கறீங்க. மான்களை எங்க பார்த்தாலும் உடனே உங்க வலது கண் துடிதுடிக்கும், இடது கை நடுநடுங்கும், மொத்த உடம்பே டிஸ்கோ ஆடும்! அதைத் தீர்த்துக் கட்டி, வேர்த்துக் கொட்டினப்புறந்தான் தன் நிலைக்கு வருவீங்க."



"எடுத்தவுடனே வேட்டை ட்ரஸ்ஸா?"

"இல்லை! உடனே இங்க ஒரு சின்ன ஃப்ளாஷ்பேக். உங்க வாழ்க்கைல பல பொய் மான்களைத் துரத்தித் துரத்தி வெம்பிப் போயிட்டீங்க! அதான் உங்க கேரக்டர்."

"பொய் மான்னா?"

"கேர்ல்ஸ்! பொண்ணுங்க! சங்கீதா,

"டெட்லி!"

"மான் வேட்டைக்குக் கிளம்பறீங்க, என்னதான் ஹீரோவாயிருந்தாலும் ஓடிப் போய் மானை வேட்டையாட முடியுமா? அதனால இம்போர்ட்டட் ஜீப்!"

"குட்!"

"நீங்க என்ன செஞ்சாலும் அத கைதட்டிப் பாராட்ட கூட நாலு பேர் இல்லேன்னா வெறியாயிடுவீங்க. அதான் உங்க கேரக்டர்."

"அதனால?"

"கூட தபு, சோனாலி, நீலம், ஹீரோயின்ஸ், அப்புறம் ஃசைப் அலி, சதிஷ் ஷா காமெடியன்ஸ்."

"Terrific!"

"ஜீப்ல மான்களைத் துரத்தறீங்க, எல்லாரும் கைதட்டி ஆரவாரம் செய்யறாங்க. அது ஆட்டங் காட்டுது. அது பிடிபடாம ஓட ஓட உங்க மனசு டைனமைட்டா மாறுது. மானுக்கு பதிலா, சங்கீதா, சோனியா- இப்படித் தெரியறாங்க. விரட்டி, விரட்டி...

"ஓ... சூப்பர்!"

"இன்னொரு பக்கம், மாரப்பன்னு பயங்கர காட்டு விலங்குத் திருடன். யானைகளைக் கொன்று தந்தம் கடத்தறான். போலீஸ், காட்டு இலாகா, ராணுவம் யாராலையும் அவனை மடக்க முடியலை! மந்திரி காட்டு இலாகாவையும், போலீஸையும் கிழி கிழின்னு கிழிக்கறாரு."

"ரொம்ப விறுவிறுப்பாயிருக்கு!"

"காட்டுல கள்ளி பொறுக்கற ரெண்டு சோணாசலத்த மாரப்பன் கூட்டாளின்னு உள்ள தள்ளறாங்க போலீஸ்...

"ஸோ, ஸாட்..."

"எங்களுக்குப் பூனையைக் கொல்லக் கூட திராணி இல்லை! யானையைக் கொல்றோம்னு பழி போடறீங்களேன்னு அழறாங்க. ரொம்ப எமோஷனல் சீன்!

மாதுரி

இப்படி ஏகக் கடுப்பாயிருக்கிற போலீஸும், காட்டு இலாகாவும் நீங்க மானை வேட்டையாடறதைப் பார்த்திடறாங்க."

"ஓ... நோ! அப்புறம்?"

"அரெஸ்ட் ஹிம்னு கைது பண்ணி கம்பிக்கு பின்னாடி தள்ளிடறாங்க."

"என்னோட இருந்தவங்களை?"

"கேர்ல்ஸ் 'ஓ'ன்னு அழறாங்க! நாங்க சும்மா கைதான் தட்டினோம்னு கெஞ்சி, கொஞ்சம் கவர்ச்சிக் காட்டி கூத்தாடி வெளியே வந்திடறாங்க!"

"சரி. ஃசைப் அண்ட் ஷா?"

"அவங்களும் கேர்ல்ஸ் மாதிரி அழறாங்க. ஆனா கவர்ச்சி இல்ல, காமெடி. துப்பாக்கியைத் துடைக்கிறது மட்டுந்தான் எங்க வேலை. கடத் தெரிஞ்சா நாங்களும் இந் நேரம் ஹீரோவாயிருப்போமேன்னு ஒரு லாஜிக் சொல்லி விடுபடறாங்க."

"அய்யய்யோ! நான் மட்டும் தனியாவா?"

"ஆமா ஒன் மேன் ஆர்மி! கோர்ட்டில வீராவேசமா பேசறீங்க நீங்க. "நாட்டில பரம்பரை, பரம்பரையா மாரப்பன் போன்ற மெகா மிருகத் திருடங்க இருக்காங்க. அவங்களைப் பிடிக்க வக்கில்ல. என்னைப் போல குருவி சுடற அப்பாவி... அப்பாவின்னு சொன்னவுடனே அதிலேயிருந்து 'அப்பா'ன்னு ஒரு க்ளு எடுத்து 'ஃபார்ம் ஹவுஸ்'ல மான் வளர்க்கிற உங்க அப்பாவையும் உள்ள தள்ளிடறாங்க!"

"இதென்ன புதுக் குழப்பம்?"

"மகனே, என்னைக் காப்பாத்துனு அவர் அலறார். எமோஷனல் சீன்! இங்கேயிருந்து சட்டத்திற்கும், மானுக்கும், நீதிக்கும், உங்களுக்கும்...."

"சரி சரி... க்ளைமாக்ஸ் எப்படி?"

"முடிவில சட்டம் உங்களை கண்டிச்சு விட்டுடும். ஆனா நீங்க பொய் மான்கள் மேல இருந்த வெறுப்பிலே நிஜ மான்களை வேட்டையாடின தவறை உணர்ந்து, மான்களோட வாழ்க்கை மேம்பாட்டிற்காக உழைக்க, ஆப்பிரிக்கா காடுகளுக்குப் போய் செட்டிலாயிடறீங்க..."

"சில்வர் ஜுப்னிதான் போ!" என்று டைரக்டரின் எலும்பே நொறுங்கும் அளவுக்கு அவரைக் கட்டித் தழுவுகிறார் சல்மான்! ⭘

# அக்னிசர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

குரு, புதன், கேது உங்களுக்கு அனுகூலமா இருக்கறதால உங்களைச் சுத்தியிருக்கறவங்களும் உங்களுக்கு அனுகூலமாத்தான் இருப்பாங்க. நல்ல காரியங்கள் நடக்கறதுக்கான சூழ்நிலைகள் உருவாகும். வெளிநாட்டுலேர்ந்து வர்ற சேதியால உங்களுக்கு ஆதாயமே கிடைக்கும். பணப்புழக்கம் நீங்க திருப்தியடைகிற அளவுக்கு இருக்கும். குடும்பத்தில விசேஷங்கள் நடக்கறதுக்கான சூழ்நிலைகள் கூடி வர்றதால விருந்து கேளிக்கைனு உற்சாகமா இருப்பீங்க.

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் நீங்க மிக முக்கியமா ஒண்ணைக் கவனிச்சே ஆகணும். அதுதான் உங்க ஆரோக்கியம். எந்தக் காரியமா இருந்தாலும் எளிதில் கைகூடி வராது. ரொம்ப ரொம்பச் சிரமப்பட்டுத்தான் செய்ய வேண்டியிருக்கும். அதிக உழைப்பும் அலைச்சலும் இருக்கற அளவுக்கு வருமானம் இருக்காது. செலவும் உங்க கையை மீறிப் போவதற்கான சான்ஸ் இருக்கு. உஷாரா இருந்தாத்தான் சமாளிக்க முடியும்ங்கிறது மட்டுமல்ல; கைப் பொருள் இழப்பிலேர்ந்தும் அப்பத்தான் தப்பிக்க முடியும்.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

பலரோட ஆதரவும் உங்களுக்குக் கிடைக்கறதால வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். திருமணப் பேச்சு, மகப்பேறு மாதிரியான சுப விஷயங்களால குடும்பத்தில் குதூகலத்துக்குக் குறைவிருக்காது. போட்டி, பந்தயம் - கொடுக்கல், வாங்கல் எல்லாமே உங்களுக்கு ஆதாயம் தரக்கூடியதாவே இருக்கும். உத்தியோகஸ்தர்களுக்குப் பதவியுயர்வு மாதிரியான சந்தோஷ சமாசாரங்கள் நடக்கும். வேலையில்லா இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு உறுதி. சிலருக்கு வெளிநாட்டு வேலையும் கிடைக்கும்.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

வெண்ணெய் திரளும் போது தாழி உடைஞ்ச மாதிரின்னு சொல்லுவாங்களே, அது மாதிரியான வாரம் உங்களுக்கு. எல்லாம் கூடி வந்து முடியற மாதிரி தெரியும். ஆனா அந்தக் காரியம் முடியாமலே போயிடும். குடும்பத்திலுள்ளவங்களே ஒருத்தரையொருத்தர் அனுசரிச்சுப் போக மாட்டாங்க. இந்த நிலைல மத்தவங்ககிட்ட நீங்க என்னத்தை எதிர்பார்க்க முடியும்? நீங்க ஜோக்கடிச்சாக் கூட அதை அவங்க குதர்க்கமா எடுத்துக்கறதுக்கான சான்ஸே நிறைய இருக்கும். கவர்மெண்ட் விஷயம் ஏதும் இருந்தா ரொம்பவே உஷாராயிருங்க. பயணத்திலயும் எச்சரிக்கையா இருக்கணும்.

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்க ஆற்றலும் திறமையும் வெளிப்படுகிற வாரம் இது. உங்களுடைய பேச்சு சாமர்த்தியமே பல விஷயங்களைச் சாதித்து விடும். கல்யாணம், கிரஹப்பிரவேசம் மாதிரியான சுப காரியங்கள் நடக்கற சான்ஸ் நிறைய இருக்கு. கவர்மெண்ட் விவகாரம் ஏதும் இருந்தா அதுவும் உங்களுக்கே சாதகமா முடியும். பணம் ஒரு பிரச்னையாவே இருக்காது. கலைத் துறையினர், விளையாட்டு வீரர்களுக்குப் புகழ் கூடுகிற வாரம் இது. கமிஷன் ஏஜெண்டுகளுக்கு நல்ல லாபம் வருகிற வாரம்.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*



சுக்கிரன் தவிர வேறு எதுவுமே உங்க பக்கம் இல்லீங்க. இதனால நீங்க எதுலயும் பதற்றமில்லாம நிதானமாச் செயல்பட வேண்டியது ரொம்பவே முக்கியம். உடல் நலத்துல கவனமா இருக்கறது மட்டுமில்லே; குடும்பத்தில் அமைதி காண்பது கூட கஷ்டம். கொடுக்கல் வாங்கல் விஷயத்தில ஜாக்கிரதையா இருந்தா மட்டும் போதாது; ஜாமீன் கையெழுத்து மாதிரி எதுவும் யாருக்கும் போட்டுடாதீங்க.



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

அந்தஸ்தும் கௌரவமும் உயர்ந்த துன்னா ஆட்டோமாடிக்கா மனசுல ஒருவித உற்சாகம் கொப்புளிக்கத்தானே செய்யும்! பண வரவு அதிகரிக்கும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் உண்டு. திருமணம், மகப்பேறு மாதிரியான சுப விசேஷங்கள் நடக்கும். விளையாட்டு, கேளிக்கை, உல்லாசப் பயணம்னு ஒரே குதுகலம்தான். கலைத்துறையினருக்கு வெறும் வாய்ப்புகள் அல்ல; அதிர்ஷ்ட வாய்ப்புகளே கூடி வரும். அரசியல்வாதிகள் புதிய சவால்களைச் சந்திக்க வேண்டியிருக்கும்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

எதிர்ப்புகளையெல்லாம் அலட்சியமாகப் புறந்தள்ளி விட்டு வெற்றி நடை போடுகிற வாரம். வீடு, மனை, நிலம்னு ஏதாவது ஒண்ணை வாங்கற யோகம் இருக்கு. இல்லேன்னாலும் அதால ஆதாயமாவது அடைவீங்க. கோர்ட் விஷயங்கள், போட்டி பந்தயங்களில் வெற்றி உங்க பக்கம்தான். கொடுக்கல் வாங்கலிலும் ஆதாயம் கிடைக்கும். சிலர், புது டீ.வி. டூவீலர்னு வாங்கக் கூட செய்வீங்க. பண விஷயமும் திருப்திகரமாவே இருக்கும்னாலும் செலவும் அதிகமாத்தான் இருக்கும்.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்க செல்வாக்கும் சுயபலமும் குறைகிற சான்ஸ்தாங்க நிறைய இருக்கு. தேக ஆரோக்கியத்திலும் கவனம் காட்டணும். பொருளாதார விஷயங்களில் அபிவிருத்திகாக வேண்டி நீங்க ரொம்பவே உழைப்பீங்க. ஆனாலும் எல்லாமே நடங்கலாத்தான் தெரியும். ஸ்பெகுலேஷன் விஷயங்களில் நஷ்டம்தான் வரும். கூடப் பிறந்தவங்களால செலவுதான் கூடும். பயணத்தாலும் பிரயோஜனம் இருக்காது. கலைத் துறையினருக்கு மட்டும் ஓரளவுக்காவது முன்னேற்றமான பாதை புலப்படும்.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

சமயோசித புத்தி, சாமர்த்தியம்.. இவை இருக்கும் போது சாதனைக்கு எப்படிப் பஞ்சம் வர முடியும்? நினைச்சது நினைச்சபடி நடக்கும். மத்தவங்களின் பாராட்டுக்கும் பஞ்சமிருக்காது. வியாபாரிகளுக்கு ஓகோ வாரம் தான். ஸ்பெகுலேஷன் சமாசாரங்களும் ஆதாயமே தரும். சுப காரியம், சுப சேதின்னு எல்லாமே குஷிப்படுத்தற விஷயங்களாத்தான் இருக்கும். பண விஷயத்திலும் பிரச்னை இருக்காது. உத்தியோகஸ்தர்களுக்கும் இது உயர்வு தரும் வாரம்தான்.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

# நடக்குமென்பார் நடக்கும்!

சேல்ஸ் மேன்களுக்கு ரொம்பவும் உற்சாகமான வாரம். நீங்க நெனைச்சதைவிட அதிகம் விற்று, கம்பெனியோட நல்லெண்ணத்தைச் சம்பாதிப்பீங்க. மத்தவங்களும் கவலைப்படத் தேவையில்லை. சாதனைகள் படைக்கிறதுக்கான சந்தர்ப்பங்கள் கூடியே வரும். பிரச்னைகள் வரும்னாலும் சாமர்த்தியமா சமாளிச்சிடுவீங்க. பெண்களைப் பொறுத்துவரை இது ரொம்பவும் உற்சாகமான வாரம். சேலைகளையும் புதுப் புதுப் பொருள்களையும் வாங்கற சான்ஸ் நிறையவே இருக்கு. ஆகவே, ஆண்களே நீங்க செலவுகளைச் சமாளிக்க வேண்டியிருக்கும்.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

மலையைக் குடைஞ்சு எலியைப் பிடிக்கற கதைதாங்க உங்களுக்கு. எதுவானாலும் தாமதம், தடைகளைத் தவிர்க்க முடியாததா இருக்கும். பணப் புழக்கம் ஒரே சீரா இருக்காதுங்கறதால சிக்கனம் ரொம்பவே அவசியம். சாதாரண வாக்கு வாதம் கூட சண்டைல முடியும்; ஜாக்கிரதையா இருங்க. கொடுக்கல், வாங்கல் வேண்டவே வேண்டாம். வியாபாரிங்க அகலக் கால் வைக்காம இருக்கறதே நல்லது. பயணங்களில் ஜாக்கிரதையா இல்லேன்னா பிக்பாக்கெட் மாதிரி கைப் பொருள் இழக்க நேரிடலாம்.



• வெறும்... • .... கருவேப்பிலைத் • ... தழைகள்!

! எதுவும் 'ஓட'வில்லை. சில நடக்கின்றன. பெரும்பாலும் உட்கார்ந்துவிட்டன.

● டி.கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.

*? சட்டென்று கூறுங்கள் - மத்திய அமைச்சரவை விஸ்தரிப்பு இப்போதைக்கு உண்டா? கிடையாதா?*

! விஸ்தரிப்பாவது ஒண்ணாவது! மம்தா காரணமாக அமைச்சரவையே உண்டா இல்லையா என்ற நிலை தோன்றியிருக்கிறது! பெர்னாண்டஸ் விழுந்தடித்துக் கொண்டு கல்கத்தா ஓடுகிறார்!

● என். சண்முகம், திருவண்ணாமலை.

*? அசாருதீன் முந்நூறாவது போட்டியில் இப்படி நம்மை ஏமாற்றி விட்டாரே?*

! முந்நூற்றியோராவதில் மட்டும் என்ன வாழ்ந்ததாம்? ஒரே ஒரு ரன்!

● ஜோ. ஜெயகுமார், நாட்டரசன் கோட்டை.

*? சமுதாய ஏற்றத்தாழ்வுகளைச் சட்டத்தால் நீக்க முடியாது என்று தலித் எழில்மலை முழங்கியுள்ளாரே?*

! இந்த உண்மையைப் பிற அரசியல்வாதிகளும் உணர்ந்தால் நாடு உருப்படும். தேவை, பல்முனை மேம்பாடு. கல்வியில் தொடங்கி, பொருளாதாரம், வேலை வாய்ப்பு, வாழ்க்கைத் தரம் என அனைத்தும் கவனம் பெற வேண்டும். ஜாதிப் பிரச்னையும் தன்னால் மறைந்து போகும்.

● த. சத்தியநாராயணன், அயன்புரம்.

*? வை.கோவும் ராம்தாஸும் 'ஜெ'யைவிட்டு விலகிவிடுவார்களா?*

! அவர்கள் விலகும் வரை காத்திராமல், ஒட்டுமொத்தமாக எல்லா கூட்டணி கட்சியினரையும் (சு. சுவாமி தவிர!) தொலைத்துத் தலைமுழுகி விட்டாரே ஜெ! தாங்கள் எல்லோரும் கருவேப்பிலைகளாகத்தான் கருதப்பட்டு வந்ததை இப்போதாவது சம்பந்தப்பட்டவர்கள் உணர்ந்தால் சரி!

● ஜெ. கி. சசிராமன், கும்பகோணம்.

*? தீபாவளி ரிலீஸ் படங்களின் ரிசல்ட் எப்படி?*

● கே. பெருமாள், கூனியூர்.

*? தமிழ்நாட்டில் ஆங்கில மோகத்தைக் குறைத்து தமிழுக்கு முதலிடம் கொடுக்கலாமே...?*

! வொய் நாட்!?

● ஆர். பார்த்திபன், சேத்துப்பட்டு.

*? ஹைக்கூ கவிதைகளில் உங்களுக்குப் பிடித்தது?*

! தீப்பெட்டி,
திறந்தால்
பிஞ்சு விரல்கள்!

- எப்போதோ எங்கோ படித்து இன்னும் மனத்தில் இருக்கும் ஹைகூ இது.

> ❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
> பி. ஜெயப்பிரகாஷ்,
> TNEB குடியிருப்பு,
> சர்க்கார்பதி - 642 133.
> சேத்துமடை (வழி)
> கோவை மாவட்டம்.

● வாசுதேவன், மும்பை - 86.

*? தங்களுடைய ஃபிரெண்ட், ஃபிலாசஃபர், கைட் யார்...?*

! சுப்ரமண்ய பாரதியார் - இந்த நூற்றாண்டின் எழுதப்படிக்கத் தெரிந்த தமிழர்கள் அனேகருக்கு அவர்தான் சுமைதாங்கி, தாய்மடி, வழிகாட்டி...!

● எஸ். சுடர்கொடி, காட்பாடி.

*? 'வெங்காயப் பிரச்னையை சரஸ்வதி வந்தனைப் பிரச்னை பின்னுக்குத் தள்ளி*

# அரசியல்வாதிகளைப் பாலைவனத்தில் விட்டால்...?

விட்டதால், டெல்லி தேர்தலில் எங்கள் வெற்றி நிச்சயம்' என்று இல. கணேசன் மகிழ்ச்சி கொள்வது பற்றி?

! வெங்காயப் பிரச்னையை மறுபடி முன்னுக்குக் கொண்டு வந்து விட்டாரே, மம்தா பானர்ஜி!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி ❑

? 'கடவுளோடு பேசும் மொழி சமஸ்கிருதம்' — கருத்து உண்மையா சார்...?

! எத்தனையோ பிரச்னைகள் இருக்க, இன்று இது பெரிய, தேவையற்ற பிரச்னையாக வளர்க்கப்படுகிறது. கோயில்களில் வாழையடிவாழையாக வந்த மரபுகள் மதிக்கப்பட வேண்டும். இல்லையெனில் அரசு மக்களிடையே மதிப்பிழந்து போகும். பக்தன் இறைவனுடன் 'பேசுவது' தன் தாய்மொழியில்தான். ஆனால் அர்ச்சனை என்பது வேறு. அதை சமஸ்கிருதமோ தமிழோ — அவரவர் விருப்பப்படும் மொழியில் ்கேட்க வசதி செய்யப்பட வேண்டும்.

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்.



• த்ரீ-இன்-ஒன்!



• உண்மை உரை



• மகிழ்ச்சிக்கு அபாயம்!



• புதிய மிரட்டல்!

• டபுள் ஏமாற்றம்!

? நம் அரசியல்வாதிகளையெல்லாம் பாலைவனத்தில் கொண்டு போய் விட்டு விட்டு வந்தால்...?

! ஒட்டக பேர ஊழல் என்று புதிதாக ஒன்று உருவாகும்!

● டி.என். சத்யா முருகவேல், சூரம்பட்டி.

? 1) கவிஞர்கள், 2) காதலர்கள், 3) ஜோதிடர்கள், 4) அரசியல்வாதிகள் — பொய் சொல்வதில் சாமர்த்தியசாலிகள் யார்?

! 1) அனுமதிக்கப்பட்ட அழகான பொய். 2) ஆனந்தமான அவசிய பொய். 3) இதமாக ஊக்குவிக்கும் பொய். 4) ஈவு இரக்கமின்றி ஏமாற்றும் பொய்! — சாமர்த்தியசாலி யார் என்று நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்.

● ஜி.ஜி. கிருஷ்ணன், விசலூர் - 1.

? 'வெங்காயம்' — ஹைக்கூ ப்ளீஸ்...?

! அரிந்தால் கண்ணீர்;
விலை அறிந்தாலும் கூட...!

● சி.பொ. குமார், மதுரை - 7.

? எப்போதும் இளமையோடு இருப்பது எப்படி?

! Grow old gracefully.

மும்தாஜ் யாசீன்

ஆபீசுக்குப் பக்கத்திலேயே மெஸ் வந்து விட்டது. வெங்கிடு சொல்லித் தான் தெரிய வந்தது. "தெக்கத்திக்காரவுக. அங்கத்த ருசி அப்படியே இருக்கு... காட்ட சாட்டமா..." நற்சான்றும் வழங்கினான். நாக்கு ருசியில் அவனை மிஞ்ச ஆள் கிடையாது.

"பார்த்துருவோம்..." என்றார்கள் பாபுவும் - கணேசனும்.

"பார்க்கிறது என்னடா? இனிமே அங்கதான் சாப்பிடப் போறேன்..." என்றான் வெங்கிடு.

"ஓ.கே. பாஸ்... நாளைக்கே எல்லாரும் போறம்..."

அவர்களுக்கு இது நல்ல செய்திதான். பண்டாரத்தார் ஓட்டல் சாம்பார் மணத்தில் தடித்துப் போன நாக்குக்கு ஒரு மாற்று ருசி. கிராமமாகவும் இல்லாமல், டவுனாகவும் இல்லாமல் நடுத்தரமான இந்த ஊரிலும் வக்கனையாகச் சாப்பிட வசதி கிட்டியதில் சந்தோஷப்பட்டுக் கொண்டார்கள்.

"ஹெட் கிளார்க் சாரும் வருவீகளா?"

"நானா?" ரங்கநாதன் நிமிர்ந்து பார்த்தார். முத்துலட்சுமி தினத்துக்கும் தயிர் சாதம் கிண்டித் தருகிற உத்தரவாதம் இருந்தது. அவளுக்கு முடியாதபோது உப்புமா கிளறிக் கொள்ள அவருக்கே தெரிந்திருந்தது.

''நான் வெளியில சாப்பிடறது இல்லையே...'' என்றார்.

"நான் சொல்லலை?" என்றான் பாபு.

மறுநாள் மூவரும் போய் விட்டு வந்தார்கள். தொடர்ந்து போக ஆரம்பித்தார்கள்.

தினமும் அவர்கள் கிளம்புகிற நேரத்திற்கு, டிபன் பாக்ஸை டேபிள் மீது வைத்துக் காத்திருப்பார் ரங்கநாதன்.

"என்ன சார்... எப்பப் பார்த்தாலும் தயிர் சாதம். எங்க கூட ஆச்சி மெஸ்ஸுக்கு வாங்க. ஒரு புடி புடிப்போம்...." வெங்கிடு தவறாமல் கூப்பிடுவான்.

"அதுக்கென்ன... வந்தாப் போச்சு. ஒரு நாளைக்கு."

"வெளியே சாப்பிடறது தப்பான காரியமா சார் உங்க அகராதியிலே?"

''அதுக்கில்லை. வீண் செலவுன்னு தான்...''

"உண்கிறதும் உடுத்தறதும் வீண் செலவுன்னா... அப்புறம் எதுக்கு சார் சம்பாரிக்கிறது?''

''நல்ல கேள்விதான். உனக்கும் கல்யாணம் ஆகட்டும். அப்புறம் பதில் சொல்றேன்."

"போங்க சார்..."

ஆச்சி மெஸ்ஸுக்குப் போகாமலிருப்பது தன் கௌரவத்தையே வீழ்த்தும் செயலாகி விடும் போலிருந்தது. இப்போது மாலை நேரத்தில் கூட போண்டாவும், மிக்சரும் போட ஆரம்பித்திருந்தார்கள். இந்தக் குறைந்த பட்ச செலவுக்குக் கூடத் தயாராக இல்லாத ஒருத்தனை மற்றவர்கள் என்னதான் நினைப்பார்கள்?

முத்துலட்சுமி கிடக்கிறாள். ஒரு நாளைக்கு முழுச் சாப்பாட்டிற்கே சென்று வருவது என முடிவு செய்து கொண்டார் ரங்கநாதன்.

விரைவிலேயே அதற்கான சந்தர்ப்பம் வாய்த்தது.

முத்துலட்சுமி எப்போதும் பனிக்காலத்தில் மட்டும் வரும் மூச்சிரைப்பு இந்தத் தடவை பனி இல்லாத போதும் வந்து விட்டது.

"உங்க மிஸஸ் உடம்பு ரொம்ப வீக்கா இருக்கு. ரெண்டு மாசம் கம்ப்ளீட் ரெஸ்ட் எடுக்கச் சொல்லுங்க."

"சரீங்க டாக்டர்..."

தன் சரீரத்தைத் தானே சுமக்க மாட்டாமல் புலம்பும் முத்துலட்சுமிக்கு இது வசதியாகப் போயிற்று. ஸ்கூல் லீவு முழுக்க தன் அம்மா வீட்டிலேயே தங்கிவிடப் போவதாகச் சொன்னாள்.

"நான் சாப்பாட்டுக்கு என்ன பண்றது லச்சு?"

"சமைச்சு சாப்பிடுங்க..."

"ஆடிட் சமயம். நேரங் கெட்ட நேரத்துக்குப் போகணும். வரணும்... சட்டியைச் சுரண்டிக்கிட்டு இருந்தா பொழைப்பு நடக்காது..."

"என்னவோ பண்ணுங்க. என் உடம்பையும் நான் பார்க்கணும்..." குழந்தைகளும் அவளுடன் சேர்ந்து கொண்டன. அவர்கள் ஊர் போவது உறுதியாகி விட்டது.

இப்பத்தான் ரங்கநாதன் முதல் தடவையாக ஆச்சி மெஸ்ஸுக்குப் போனது.

மெஸ் ஒன்றும் அவர்கள் உருவாக்கியிருந்த பிரமைக்குப் பொருத்தமாக இல்லை. இரண்டு அங்குலம் அளவில் இரண்டு அறை. முன் வாசலில் கூரைப் பந்தல் போட்ட ஹால். நான்கு மடக்கு மேஜை. பெஞ்ச். தினத்தந்தி. ஊதுபத்தி வாசனையுடன் சாமி படங்கள்.

உள்ளே நுழைந்ததும் "ஸார்... வாங்கோ..." முண்டா பனியனுடன், உருட்டுக் கட்டை போலிருந்த ஆசாமி வரவேற்றார். வெற்றிலை குதப்பும் வாய். முறுக்கி விட்ட மீசை. அடர்ந்த தலை முடி. இருதா கீழ்த் தாடை வரை நீண்டு முகத்தைக் கட்ட பொம்மன் சைசுக்கு அகலமாக்கி இருந்தது. ஐம்பது வயசுக்கு மேல் இருக்கும்.

"இதான் ஓனர். ஆச்சி புருஷன்" வெங்கிடு காதோரத்தில் முணுமுணுத்தான்.

டேபிளின் எதிரில் உட்கார்ந்தார்கள். அதன் உயரத்திற்கு இருந்த சிறுவன் இலை போட்டான். வரிசையாக தம்ளர் வைத்து தண்ணீர் ஊற்றிக் கொண்டு போனான். சொம்பின் கனம் தாங்காமல் கை நடுங்கியது. தன் மீது இவன் கொட்டத் தான் போகிறான் என்று அவர் நினைக்கும் போதே பிடி நழுவி சொம்பு 'ணங்'கென்று விழுந்தது. இலையில் வாய்க்காலாக வெள்ளம். ரங்கநாதன் அவசரமாக ஈரத்தை உதற, மீசை கவனித்து விட்டது.

"ஏண்டா மூதேவி... ஒழுங்கா தண்ணி ஊத்தக் கூடத் தெரியாதா?" முதுகில் பளீரென்று அறைந்தான்.

வாய் விட்டு எழும்பாத சத்தத்துடன், "அம்மா..." என்று அலறினான் பையன். முகக் கோணலில், உடல் நெளிப்பில், துடிப்பில் வலியை உணர முடிந்தது. வளைந்து



பின்னங்கையால் முதுகைத் தேய்த்தான்.

இவனைப் பெற்றவள் எங்கிருக்கிறாள்? தான் பிசைந்து தின்னும் கவளச் சோறு, தன் பிஞ்சு மகனின் வியர்வையும், அழுகையும் தான் என்பதை அவள் அறிவாளா?

"என்னடா நிக்கிறே? சாருக்கு வேற எலை போடு..." அழக் கூட அவகாசம் அற்று பையன் மீண்டும் இயந்திரமானான்.

"அடிக்கு மிஞ்சினது எதுவும் இல்லை. என்ன சொல்றீக?" மீசை அண்ணாந்து சிரித்தான். கையில் பொறியல் கிண்ணம்.

"என்ன சார் யோசனை... வீட்டு ஞாபகமா?" சேனைக் கிழங்கு பொறியல் போலும். வாயில் குதப்பிக் கொண்டே வெங்கிடு கேட்டான்.

"நான் இனிமே இங்கே வரப் போறது இல்லை..." என்றார் ரங்கநாதன்.

குரலின் கடுமையும், முகத்தின் தீவிரமும் அவனைக் குழப்ப, "என்னாச்சு?"

"எனக்குப் பிடிக்கலை..."

"அவ்ளோதானே... ஆச்சியைப் பாத்த பெறகு சொல்லுங்க..."

"ஏய் கூமுட்டை. சாதத்தை எடுத்தார இவ்ளோ நாழியா?" மீசை உள்ளே திரும்பிக் கத்தினான்.

**"நீங்க நடிச்ச ப்ளூபிலிம் கேசட் பிடிபட்டிருக்காமே... அதைப் பற்றி என்ன சொல்றீங்க?"**

**"முழுக் கதையும் கேட்காம ஒப்பு கொண்டது என் தப்புதான்!"**

**– அம்பை தேவா**



"ஆச்சு. வந்தாச்சு... அப்பப்பா..." ஆவி முகத்தில் அடிக்க சோற்றுக் குண்டாவை துணியைப்பற்றித் தூக்கியபடி ஓடி வந்தாள். ஆச்சியா? கோடாலிக் கொண்டையின் அசைவு தலையாட்டும் சேவலைப் போல வேடிக்கையாக இருந்தது.

"இதான் ஆச்சி. என்னா ஸ்ட்ரக்சர் பாருங்க..." வெங்கிடு விலாவில் இடித்துக் கிசுகிசுத்தான்.

அவரது மனச்சித்திரம் சேதமடைந்தது. ஆச்சி கிழவியில்லை. மிஞ்சிப் போனால் நடுத்தர வயது. பேரிளம் பெண். கருத்து உருண்ட முகம். அகன்ற விழிகள். அகலப் பொட்டின் வசீகரம். இறுகிய தேகம். அழகை வேண்டுமென்றே அலட்சியப்படுத்தி இருப்பதைப் போன்ற பாவனை. அல்லது மமதை?

"ஆச்சி... ரொம்பப் பசிக்குது. சீக்கிரம்..."

"தம்பிகளுக்கு ரொம்பத்தான் அவசரம் போல..." சுடச்சுட பரிமாறினாள்.

"பின்ன... ருசியைக் காட்டி அநியாயம் பண்றீக..."

"இதுக்குத்தான் கண்ணாலம் பண்ணிக்கணும்... வேணும்போது கிடைக்கும்ல?"

"அதான் தேடிக்கிட்டிருக்கேன் ஆச்சி மாதிரியே..."

"ஆச்சி மாதிரியா..." மீசை கெக்கக்கே என்று சிரித்தான். "அப்ப செக்கு மாடுதான் கிடைக்கும்..."

சுர்ரென்று சூடுபட்ட துடிப்பு ஒரு நொடி அவள் முகத்தில். எல்லோரும் சிரித்தார்கள்.

"ஆன்னு என்னத்தப் பாக்கிறவ.. இலையைப் பாத்துப் போடு..." உச்சியில் அழுத்தினான். தலை ரப்பர் பொம்மை மாதிரி ஒரு தடவை குனிந்து நிமிர்ந்தது.

மீண்டும் சிரிப்பலை எழும்பி அடங்கியது.

தன்னருகில் அவள் வந்தபோது ரங்கநாதன் தலைநிமிரவில்லை. "ஆச்சி... சார் தான் எங்க பாஸ்... நல்லா கவனிங்க..."

ஆச்சி பதில் சொல்லவில்லை.

சட்டென்று இருள் கவ்வியதாக இருந்தது ரங்கநாதனுக்கு. மனது உறுத்த ஆரம்பித்தது. அந்த முகம் அன்னியமாக இல்லை. இள நரையும், கன்னத்தில் மண்டிய நீர்ச்சதையையும், நெற்றியின் கவலை ரேகைகளையும் கழித்துப் பார்த்தால் பளிச்சென்று தெரியும் கிராமிய முகம்.

கடவுளே! அவள்தானா இது. நிலை கொள்ளவில்லை அவருக்கு.

அம்மா அவருக்கும் பெண் தேடிய நேர்த்தியே அலாதி. அழகு, வடிவு, சொல், செய் நேர்த்தி, தரம் என எடைபோட்டு நிரா கரித்துக் கொண்டே வந்து இரண்டு இடங் களை மட்டுமே தேர்வு செய்தாள்.

கிராமத்தில் ஒன்று. டவுனில் ஒன்று.

மஞ்ச நாய்க்கன்பட்டியில் வீட்டுத் தோற் றமே பயப்படுத்தியது. சின்னக் கருப்பையா காடா பனியனும், மடித்துக் கட்டிய வேட்டி யுமாக எதிரில் வந்து "யார்?" என்று கேட் டார். தரகர் சொல்லவில்லையாம். பெண் மாட்டுத் தொழுவத்தில் புண்ணாக்குப் போட்டுக் கொண்டிருந்தாள். பின்னர் அவள் அலங்கரித்து வந்த போதும் சாணி நெடி வீசுவது போலிருந்தது அவருக்கு.

"இந்த இடம் வேணாம்மா...."

"எனக்குப் புடிச்சிருக்குப்பா. நமக்கேத்த பொண்ணு... படிச்ச மாப்பிள்ளைன்னு அவு களும் ஆசைப்படறாக..."

"ம்ஹூம்... எனக்குப் புடிக்கலை."

அடுத்துப் பார்த்த முத்துலட்சுமிக்குத் தான் சம்மதம் சொன்னார். தேரடித் தெரு வில் வீடு. அரசியல் பேசும் மாமனார். கிரிக் கெட் ரசிக்கவும், சினிமாத் துணைக்கும் மச்சி னன்கள். பில்டர் காப்பி தருகிற மாமியார். சிவப்பாய், ஒல்லியாய் அவள்....

ஆச்சி மெஸ்ஸில் தன்னைக் கவ்விய இருள் விலகாது போலிருந்தது. இப்போது ஆச்சியின் முகத்தில் தான் காணும் மஞ்ச நாய்க்கன்பட்டி பெண்ணின் சாயல் நிஜம் தானா? பிரமையா ஒருவேளை?

அந்த நேரத்தில் ஆச்சி அவரை எதிர் பார்க்கவில்லை. ஏழு மணி கூட ஆக வில்லை. "டிபன் கிடைக்குமா?" என எதிரே நின்றார் ரங்கநாதன்.

"டிபன்... ஆங்.... இதோ ஆயிரும். பத்து நிமிஷம்..."

சரேலென்று விலகினாள். ஆண்களின் முகச் சாயல் பெரிய மாறுதல்களுக்கு ஆளாகி விடுவதில்லை. தன்னை அடை யாளம் கண்டிருப்பாளா?

பெஞ்சில் உட்கார்ந்தார். பாதி திறந்த அறைக் கதவு வழியே மீசைக்காரனின் வேட்டி விலகிய கெண்டைக்கால் தெரிந்தது. சாக்கு விரிப்பில் உரித்த வெங்காயம். நாலைந்து தேங்காய். மல்லிக் கட்டு. உருளைக் கிழங்கு, மூடி போட்ட பாத்திரத்தில் இட்லி மாவு...

ஆச்சியிடத்தில் ஒரு பதற்றத்தைக் காண



"ஏம்பா, உங்கிட்ட வாங்கின சேவல் காலைலே 5 மணிக்கு கூவுதற்கு பதிலா 10.30 க்கு கூவுதே?"

"அது லண்டன்லே வாங்கினதுங்க, அந்த நாட்டு நேரப்படி கூவுதுங்க!"

– பூவராகன்

முடிந்தது. எதை எதையோ உருட்டினாள். ஸ்டவ்வைப் பற்ற வைத்து புஸ்புஸ்ஸென்று காற்றடித்தாள். பாத்திரத்தை வைத்து, எண் ணெய் ஊற்றி சூடேற்றி காய்களை நறுக்கிப் போட்டு வதக்கினாள். ஈரம் படர்ந்த பிடறி யையும், முதுகையும் அவருக்குக் காட்டிக் கொண்டு.

ரங்கநாதனின் பார்வை சுவரின் மீது படிந்தது. ரவிவர்மாவின் தூரிகை வண்ணத் தில் உயிர் கொண்ட சாமி படங்கள். பார் வதி கல்யாணம். ராமர் பட்டாபிஷேகம், விநாயகர். கீழ் வரிசையில் குடும்ப போட் டோக்கள். 10 - 15 வருஷங்களுக்கு முந்திய இளமையுடன் அவளது புருஷன். கல்யாண கோலத்தில் அவனுடன் அவளும். பெரிய அளவு குரூப் போட்டோ. ஏகப்பட்ட மனி தர்கள். வீடென்றால் விசேஷங்களுக்கா பஞ்சம்? வெறுமனே பார்த்துக் கொண்டு வந்த கண்கள் விரைத்தன. படத்தின் பின்ன ணியில் சுவரில் காட்டெருமைத் தலை.

சந்தேகமில்லை அதே வீடு. மஞ்சநாய்க் கன்பட்டி....

சுருக்கென்றது.

தன்னுள் குற்ற உணர்ச்சி தலை தூக்கு வதை உணர முடிந்தது.

ஆச்சி பையனை எழுப்பி சட்டினிக்கு தேங்காய் கிறச் சொன்னாள். அரைத் தூக்கத் திலேயே பையன் இயங்க ஆரம்பித்தான்.

"ஸாரி... உங்களுக்கு சிரமம். வேணா அப் புறம் வர்றேனே."

'சிரமம் என்ன.. டிபன் சாப்பிட்டே போகலாம், உக்காருங்க..." திரும்பாமலேயே பதில் சொன்னாள்.

"அம்மா போதுமான்னு பாரு..." பையன் நொடிக்குள் வேலையை முடித்துக் கொண்டு வந்தான். பழக்க தோஷம்.

"போதும் கண்ணு... நீ போ..."

"உங்க பையனா?"

"ம்..."

"படிக்கிற வயசுல பாவம் இப்படி...."

"படிப்பா.. அதுக்கெல்லாம் அதிர்ஷ்டம் வேணும் சார்... எங்களுக்கு எச்சில் இலை எடுக்கத்தானே விதிச்சிருக்கு" குரல் கனத்து ஒலித்தது.

பொட்டில் அடித்த மாதிரி இருந்தது. அம்மாவின் வார்த்தைகள் காதில் ஒலித்தன. "படிச்ச மாப்பிள்ளைன்னு அவுகளும் ஆசைப்படறாக."

ஆசை நிராசையான வருத்தம் இன்னும் இருக்குமா? அப்போது தனக்கு என்ன வந்தது? அம்மா பாங்கான பெண் என்று பிரியப்பட்டதையும் கேளாமல்...

தன்னை சபித்திருப்பாளா? அந்த சாபம் தான் எப்போதும் நோய் கொண்டாடி பிறந்த வீடு போய்விடும் முத்துலட்சுமியுடனான தற் போதைய வாழ்க்கையா?

கடவுள் கருணை உள்ளவர்தானா? அவரவர் இழப்பு, அவரவர் ரகசியம். ஒருவர் மற்றவரை அறிந்து கொள்வதை விடவும் துக்கம் வேறில்லை. இத்தனை காலத்திற்குப் பிறகு ஏன் இப்படியொரு சந்திப்பு? தொண் டையைக் கனைத்துக் கொண்டார். "நீங்க... நீங்க... மஞ்சநாயக்கன்பட்டிதானே?"

"ம்...?"

"இல்ல.... அங்க சின்னக் கருப்பைய் யான்னு. அவரு மகதானே?"

"ஏன் கேக்கறீங்க?"

அதானே. ஏன் கேட்கிறேன்? அவர் பதில் சொல்லவில்லை.

'சொய்ங்.... செய்ங்...'கென்று தோசை வார்க்கிற சத்தம். ஆவியும், எண்ணெய் நெடி யும், புகையும்....

ஆறிய புண்ணைக் கிறி வலி எப்படி இருக்கும் என்று அறியத்தான் என்று சொல் லலாமா? அவளுக்கும்தானே வலிக்கும்?

ஆச்சி எதையும் லட்சியம் பண்ணாதவள் போல் இன்னும் அடுப்படியிலேயே இருந் தாள். அவளது அலட்சியம் சற்று ஆறுதலாக இருந்தது. இந்த விலகல் நல்லதுதான். அது தானே இவளை எவ்வளவு அன்னியம் என்று காட்டுகிறது.

"கண்ணு... சாருக்கு இலை போடு..."

பையன் இலையைப் போட்டான். பரி மாறினான்.

ஆச்சியின் கை மணந்தது. ஆத்மார்த்த மான மணம். சமைப்பவருக்கும், சாப்பிடு பவருக்கும் உள்ள உறவை வளர்ப்பது இந்த மணம்தானே. சாப்பிட்டு எழுந்தார். ஆச்சி அப்போது உள்ளே போயிருந்தாள். தன் கேள் விக்கு பதில் சொல்ல விரும்பவில்லையா? அவரும் கிளம்ப ஆயத்தமானார்.

"தம்பி... கணக்கு எவ்ளோ ஆச்சுன்னு கேளு..."

அவன் வாயைத் திறப்பதற்குள், "சின்னக் கருப்பையா... சார்கிட்ட காசு வேணாம்னு சொல்லிரு..." உள்ளே இருந்து அவளது குரல் வந்தது.

பையனின் பெயரையும் அவளது கரிசனத் தையும் கேட்டதும் ரங்கநாதனின் மனத்தில் மீண்டும் இருள் படியத் துவங்கியது.

---

"'பரந்த மனப்பான்மையுள்ள கணவர் தேவை'ன்னு விளம்பரம் தந்துருக்கீங்களே... ஏன்?"

"சில கணவர்கள் டைவர்சுக்கு அப்புறமா நடக் கற என் மறு கல்யாணத்துக்கு அழைச்சாலும் வர்றது இல்ல!"

– அம்பை தேவா





# கொலைஞர் பினோசெட்!

அகஸ்டோ பினோசெட் என்ற 82 வய தான சர்வாதிகாரி சமீபத்தில் லண்டனில் கைது செய்யப்பட, இது பல தென் அமெரிக்க மற்றும் ஐரோப்பிய நாடுகளில் சலசலப்பை ஏற்படுத்தியுள்ளது.

தென்னமெரிக்காவின் மேற்குப் பகுதியில் உள்ள சிலியை சுமார் கால் நூற்றாண்டுக் காலம் ஆண்டு விட்டு, சில வருடங்களுக்கு முன்தான் ஒரு வழியாகப் பதவி இறங்கினார் பினோ செட். இந்தக் காலத்தில் அவர் செய்த அக்கிரமங்கள் கொஞ்சநஞ்சமில்லை. அமெரிக்காவைத் திருப்திப்படுத்துவதற்காக இடதுசாரிக் கொள்கை கொண்டவர்களை நூற்றுக்கணக்கில் கொத்துக் கொத்தாக 'மறைய' வைத்தார். அது மட்டுமல்ல; தமது சர்வாதிகாரக் கொள்கைக்கு எதிராகக் குரல் கொடுத்ததற்காகத் தமது ஆட்சிக் காலத்தில் சுமார் மூன்று லட்சம் பொது மக்களைத் தீர்த்துக் கட்டியிருக்கிறார்!

பினோசெட்டின் ஆட்சியில் படு கொலை செய்யப்பட்டவர்களில் ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்தவர்களும் உண்டு.

சமீபத்தில் முதுகெலும்பு சிகிச்சைக்காக இவர் லண்டனுக்குச் சென்ற போது, இவரைக் கைது செய்து தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசைக் கேட்டுக் கொண்டது ஸ்பெயின் அரசு. அவர் மீது கொலைக் குற்ற வழக்கை ஸ்பெயின் நாட்டில் நடத்துவதற்காகத்தான் அந்த வேண்டுகோள்.

பிரிட்டிஷ் அரசு பினோசெட்டைக் கைது செய்ததைத் தொடர்ந்து அவரை ஸ்பெயினுக்கு அனுப்பலாமா, கூடாதா என்பதைக் குறித்து பிரிட்டிஷ் நீதிமன்றம் விவாதித்து வருகிறது.

ஸ்பெயின் மட்டுமல்ல; ஸ்விட்ஸர்லாந்து, பிரான்ஸ், ஸ்வீடன் ஆகிய நாடுகளும் கூட பினோ செட்டைத் தம்மிடம் ஒப்படைக்க வேண்டும் என்று கோரியுள்ளன. அந்தந்த நாட்டுக் குடிமக்களில் சிலரும் பினோ செட்டின் சர்வாதிகார ஆட்சியின்போது கொலை செய்யப்பட்டிருக்கிறார்கள்.

அதே சமயம் 'பினோ செட்டிடம் தூதரக பாஸ்போர்ட் இருப்பதால் அவர் மீது வழக்குத் தொடுக்க முடியாது' என்று சிலி நாட்டின் தற்போதைய அரசு கூறியுள்ளது.

பெரும் குற்றங்களைச் செய்திருந்தாலும் ஒரு நாட்டின் முன்னாள் தலைவரை இன்னொரு நாட்டில் கைது செய்து விசாரணை நடத்துவது சரியா என்ற கேள்வி எழுந்துள்ளது.

— குல்லூ



"அவரு மிகப் பெரிய தேச பக்தர்னு எதை வச்சி சொல்றே?"

"'தேசியகீதம்' படத்தை இரண்டரை மணி நேரமா அட்டென்ஷன்ல நின்னு பார்த்திட்டிருந்தாரே!"

— நெல்லையப்பபுரம் செல்வன்

தமிழ்நாட்டில் நடக்கிற பெரிய கோவில்களின் கும்பாபிஷேகங்களாகட்டும், பிரம்மாண்டமான கட்சி மாநாடுகளாகட்டும், உலகத் தமிழ் மாநாடு போன்ற மெகா அரசு நிகழ்ச்சிகளாகட்டும், வி.வி.ஐ.பி. வீட்டுத் திருமணங்களாகட்டும் – வீடியோ கவரேஜ் செய்வது சரவணா வீடியோஸ்தான். நேரடியாக இவர்களுக்கு ஆர்டர் வராத சமயங்களில் கூட, யார் வீடியோ கவரேஜ் ஆர்டர் எடுத்தாலும், கடைசியில் கேமிரா முதலிய உபகரணங்களுக்கும், இதர பணிகளுக்கும் நாடுவது சரவணாவைத்தான்! இன்று நம் ஊரில் தயாரிக்கப்படும் டீ.வி. தொடர்களில் முக்காலே மூணு வீசத்துக்கு, சரவணா உபகரணங்கள்தான் பயன்படுத்தப்படுகின்றன. சாதாரண வாட்ச் ரிப்பேர்க்காரராக, வாழ்க்கையைத் துவக்கின சரவணா அதிபர் கணேசனின் வெற்றிக் கதை சுவாரசியமானது; இன்றைய இளைய தலைமுறையினருக்கு ஓர் உற்சாக டானிக். (இவருக்கும் சரவணா ஸ்டோர்ஸ், சரவணா பவன் ஆகியவற்றுக்கும் துளியும் சம்பந்தமில்லை – பெயர் ஒற்றுமை தவிர):

எனக்கு தஞ்சாவூர் அருகில் முத்துப்பேட்டைதான் சொந்த ஊர். பெரிய குடும்பத்தில் நான்தான் மூத்தவன். என் அப்பா முத்துப்பேட்டையிலேயே வாட்ச் ரிப்பேர் கடை வைத்திருந்தார். நாலைந்து வயதிலிருந்தே எனக்குக் கடிகாரங்களை ரிப்பேர் செய்வதில் ஆர்வம் உண்டு. என் அப்பாவும், கடிகாரங்களின் பாகங்கள், அவற்றில் என்ன பிரச்னை வரும், அவற்றை எப்படி சரி செய்வது என்றெல்லாம் சொல்லித் தருவார். நானே சின்னச் சின்ன ரிப்பேர்களைச் சரிசெய்யும் அளவுக்குத் திறமைசாலி ஆனேன்.

அப்போது எனக்குப் பத்து வயசிருக்கும். முத்துப்பேட்டை தர்காவுக்கு, பல ஊர்க்காரர்களும் வருவார்கள். அப்படி வந்த ஒரு வெளியூர்க்காரருடைய ரோலிஃப்பிளெக்ஸ் கேமிரா ரிப்பேராகி விட்டது. முத்துப்பேட்டையில், கேமிரா ரிப்பேர் செய்பவர்கள் யாரும் இல்லை என்பதால் என் அப்பாவின் கடிகார ரிப்பேர் கடைக்கு வந்து, 'இதை எப்படியாவது சரிசெய்ய முடியுமா? பாருங்கள்! என்று அவர் கேட்டார். "முயற்சி செய்து பார்க்கிறேன்" என்று சொல்லி அதை வாங்கிக் கடையில் வைத்து விட்டு, என் அப்பா, மதிய சாப்பாட்டுக்கு வீட்டுக்குப் போய் விட்டார்.

கேமிராவைப் பார்த்த என் கைகள் துறுதுறுத்தன. எடுத்துப் பார்த்தேன். ஷட்டரில்தான் பிரச்னை. நின்று போன கடிகாரத்தை லேசாய் ஆயில் போட்டு, சர்வீஸ் செய்து இயங்க வைக்கிறாற்போல, கேமராவின் ஷட்டரிலும், முயற்சி செய்தேன். என் அதிர்ஷ்டம்! ஷட்டர் சரியாகி விட்டது. அப்புறம், கடையில் உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. ஒரு ஸ்டுடியோவுக்குப் போய், பிலிம் ரோல் ஒன்று வாங்கிக் கொண்டு, அங்கேயே கேமராவை எப்படிப் பயன்படுத்துவது என்றும் கேட்டுக் கொண்டு, பக்கத்திலிருந்த என் பாட்டி வீடான திருத்துறைப்பூண்டிக்குப் போய் விட்டேன். அங்கே போட்டோவாக எடுத்துத் தள்ளினேன். விஷயம் அறிந்ததும் என் அப்பா, மூணாவது மனுஷரது கேமராவை என் இஷ்டத்துக்குப் பயன்படுத்தியதைக் கண்டித்தாலும், ரிப்பேரான கேமராவைச் சரிசெய்த என் திறமையைப் பாராட்டினார்!



• கணேசன்

திருத்துறைப்பூண்டியில், என் தாத்தா வீட்டாருக்கு, சவுண்டு சர்வீஸ் பிசினஸ். அங்கேயும் போய்

# ரிப்பேர் To வீடியோ உலகம்!



ஆர்வத்துடன் தொழில் கற்றுக் கொண்டேன். நாடகங்களுக்கு லைட்டிங் செய்யவும் அப்போது கற்றுக் கொண்டதுதான்.

அதே நேரம், அப்பாவுடைய பிசினசான கடிகார ரிப்பேரிலும் எக்ஸ்பர்ட் ஆனேன். எந்த வகை கடிகாரம் ஆனாலும் சரி, அக்கு அக்காகப் பிரித்து, மறுபடி அசெம்பிள் செய்ய என்னால் முடியும்.

என்னுடைய இருபதாவது வயது வரை நான் முத்துப்பேட்டையிலேயே இருந்தேன். அப்போது, என் திறமையைப் பற்றிக் கேள்விப்பட்ட திருச்சியைச் சேர்ந்த நூர் அண்டு சன்ஸ் என்ற கம்பெனியிலிருந்து எனக்கு வேலைக்கு அழைப்பு வந்தது. அவர்களுடைய கடிகார உற்பத்திப் பிரிவில் வேலை. நாலைந்து வருடம் அங்கே வேலை பார்த்தேன். அடுத்தபடியாய், சென்னையில் பி.ஆர். அண்டு சன்ஸ் நிறுவனத்தில் கூப்பிட்டார்கள். அங்கேயும் கடிகார உற்பத்திப் பிரிவில்தான் வேலை.

அந்தக் காலத்தில், வழக்கமாக அலாரம் அடிக்கும் சுவர் கடிகாரத்திலேயோ உபரியாய், கால் மணியானதும் நாலு தடவை, அரை மணிக்கு எட்டு தடவை, முக்கால் மணி நேரத்துக்குப் பன்னிரண்டு, ஒரு மணி நேரத்துக்கு பதினாறு தடவை என்று இன்னிசை எழுப்பும் வெஸ்ட் மினிஸ்டர் சைம் மாடல் கடிகாரம் ரொம்பப் பிரபலம். அதன் தயாரிப்பில் நான் ஸ்பெஷலிஸ்ட் ஆனேன். அங்கே வேலை பார்த்தது மூனே வருஷம்தான் என்றாலும், வேலைக்குச் சேர்ந்தபோது ஐந்நூறு ரூபாய் சம்பளம் வாங்கிய நான், விலகும் போது வாங்கினது மூவாயிரம்!

கடிகார உதிரி பாகங்கள் இறக்குமதி பிரச்னையாகி விட்ட காரணத்தால், உற்பத்திப் பணிகள் பாதிக்கப்பட்ட சமயம், என்னை விற்பனைப் பிரிவுக்கு மாற்றினார்கள். அங்கே எனக்குப் பெரிய சுவாரசியமில்லை. வேலையை விட்டு விடத் தயாரானேன்.

ஆனால் அடுத்து என்ன செய்வது என்பது பற்றி நான் சிறிதும் கவலைப்படவில்லை. காரணம், பி.ஆர். அண்டு சன்ஸின் உற்பத்திப் பிரிவில் வேலை பார்த்தபோது, மாலை ஆறு மணி வரையே எனக்கு வேலை. ஓய்வு நேரத்தில், வீட்டிலிருந்தபடியே பிரைவேட்டாக, கடிகாரம், கேமரா ரிப்பேர் செய்து கொடுத்துக் கொண்டிருந்தேன். இதனால், எனக்கு நேரடியாகவே ஏகப்பட்ட கஸ்டமர்கள். உற்பத்திப் பணி பாதிக்கப்பட்ட சூழ்நிலையில் விற்பனைப் பிரிவுக்கு மாற்றின போது, இவர்கள் எண்ணிக்கையைத்தான் பெரும் பலமாக எண்ணி, நான் என் வேலையை ராஜினாமா செய்தேன்.

**வி**யட்நாம் சண்டை சமயத்தில், அங்கிருந்து வெளியேறி இந்தியா வந்த ஒருவரின் அறிமுகம் கிடைத்தது. அவரிடமிருந்த ஒரு கருவி என்னை பிரமிப்பில் ஆழ்த்தியது. அதுதான் வீடியோ! அவர் அந்த உபகரணத்தின் மூலம் என்னைப் படம்பிடித்து, எனக்குப் போட்டுக் காட்டியபோது, வாய் பிளந்து பார்த்துக் கொண்டிருந்தேன்.

அடுத்து ஒரு தடவை சிங்கப்பூர் சென்றிருந்த சமயம், அங்கே சென்னை நண்பர் ஒருவரைச் சந்தித்தேன். அவர் வீடியோ



கேமரா ஒன்று வாங்க வேண்டும் என்றும், சரியான கேமரா வாங்குவதில் தமக்கு உதவும்படியும் கேட்டுக் கொள்ள, நாங்கள் இரண்டு பேருமாய்ப் போய் கேமரா வாங்கினோம்.

சென்னை வந்தபின், ஒரு வி.ஐ.பி. வீட்டுத் திருமணத்தை எட்டு மி.மீ. பிலிமில் படமாய் எடுத்துத் தரும்படிக் கேட்டபோது, நான் வீடியோவில் எடுத்துத் தருவதாய்க் கூறினேன். சிங்கப்பூரில் வீடியோ கேமரா வாங்கிக் கொடுத்த நண்பருக்கு அந்தத் திருமண ஆர்டரைப் பெற்றுக் கொடுத்தேன்.

என் இன்னொரு நண்பரிடமும் ஒரு வீடியோ கேமரா இருப்பதும், அதை அவர் பயன்படுத்தாமல், சும்மா வைத்திருக்கிறார் என்றும் அறிந்து கொண்டேன். அடுத்தடுத்து வந்த ஒருசில ஆர்டர்களை (எல்லாம் நான் ஏற்பாடு செய்து கொடுத்த முதல் கவரேஜ் பார்த்து, பிடித்துப் போனதன் பலன்) இந்த நண்பரின் கேமராவையே கடன் வாங்கி, எடுத்துக் கொடுத்தேன். அப்போதுதான் நாமே ஏன் ஒரு வீடியோ கேமராவை வாங்கிக் கொண்டு கல்யாண ஆர்டர்களுக்கு எடுத்துத் தரக் கூடாது என்ற எண்ணம் ஏற்பட்டது.

உடனடியாய் ஒரு வீடியோ கேமரா வாங்கினேன். ஆர்டர்கள் ஒன்றன் பின் ஒன்றாக வரத் தொடங்கின. அப்போது, டெலிவிஷன் கூட இல்லாத காலம் என்பதால், திருமணங்களுக்கு, நானே சில டி.வி. செட்களையும் கொண்டு போவேன். (வியட்நாமிலிருந்து இரும்புபவர்கள், தவறாமல் ஒரு டெலிவிஷன் செட் கொண்டு வருவது அப்போதைய பழக்கம்) நானே ஒரு செட்டை, சிங்கப்பூரிலிருந்து முன்னூறு சதவீத வரி கட்டி எடுத்துக் கொண்டு வந்தேன். (இதற்கே ஒரு லகரம் பழுத்து விட்டது)

என் வீடியோ ஏற்பாட்டைக் கல்யாணத்துக்கு வருகிறவர்கள் பார்த்து, பிரமித்து, தங்கள் வீட்டில் அடுத்த கல்யாணம் என்றால் என்னிடம் வந்து விடுவார்கள். இப்படித்தான் வளர்ந்தது என் பிசினஸ்.

டெலிவிஷன் அறிமுகமானது. வீடியோ பிரபலமானது. இதெல்லாம் என்னை மேலும் பிஸியாக்கியது. சொந்தமாக மேலும் சில கேமராக்கள் வாங்கினால்தான் சமாளிக்கலாம் என்ற நிலைமை ஏற்பட்டது. வாங்கினேன்.

கேமராக்கள் எண்ணிக்கை அதிகரிக்க அதிகரிக்க, ஆள் பலமும் அதிகமாகத் தேவைப்பட்டது. என் உறவினர்கள் தவிர, பல புதிய இளைஞர்களையும் சேர்த்துக் கொண்டேன். நான் வெறும் பத்தாம் வகுப்புடன் படிப்பை நிறுத்திக் கொண்டவன் என்பதால், அதிகம் படிக்காத, சாதாரணமான, முன் அனுபவம் ஏதும் இல்லாத இளைஞர்களாகவே வேலைக்குச் சேர்த்துக் கொண்டேன். சுறுசுறுப்பு, ஆர்வம், உழைப்பு இவை இருந்தால் போதும், நீங்கள் வாழ்க்கையில் முன்னேறி விடலாம் என்று அவர்களுக்கு நான் சொல்லுவேன். இதுவரை என்னிடம் பயிற்சி பெற்றுப் போய், தமிழ்நாட்டில் மூலை முடுக்குகளில் எல்லாம் சொந்தமாய் வீடியோ கவரேஜ் மூலம் சம்பாதித்து, நன்றாய் இருக்கிற இளைஞர்கள் ஓராயிரம் பேர்களாவது இருப்பார்கள்!

ஒரு கால கட்டத்தில், முகூர்த்த நாள் என்றால், இருபது, முப்பது கல்யாணங்களில் கவரேஜ் செய்ய ஆர்டர்கள் கைவசமிருக்கும். திணறிப் போவேன். அந்தத் தருணத்தில்தான், கூடுதலாக சில வீடியோ கேமராக்களை வாங்கிப் போட்டு, திறமையான, சொந்தக் காலில் நிற்க வரும் இளைஞர்களைக் கூப்பிட்டு, "நீ துணிந்து, கல்யாண ஆர்டர்கள் வாங்கிக் கொண்டு வா! வாடகைக்கு கேமரா நான் தருகிறேன்" என்று ஊக்கம் கொடுத்தேன். அதற்கும் ஏக வரவேற்பு.



வெறும் கல்யாண ஆர்டர்கள் என்று நிறுத்திக் கொண்டு விடாமல், பொது நிகழ்ச்சிகள், கட்சி நிகழ்ச்சிகள், கோவில் கும்பாபிஷேகங்கள் என்று பலதரப்பட்ட ஆர்டர்களையும் ஏற்றுக் கொள்ளத் துவங்கினோம்.

டெலிவிஷன் தொடர்கள் ஷூட் பண்ண 'யூமேடிக்' என்ற பிரத்யேக கேமரா யூனிட் தேவை. தனியார் தயாரிப்புகளாக விளம்பரதாரர் தொடர்கள். தனியார் சானல்களின் பல்வேறு நிகழ்ச்சிகள் இவற்றுக்காக, யூமேடிக் கேமராவுக்கு நல்ல டிமாண்டு இருப்பதைப் பார்த்து விட்டு, அவற்றையும் கணிசமாய் வாங்கிப் போட்டேன். இன்று அவை எல்லாமே பிஸி. (விசுவின் அரட்டை அரங்கத்துக்காக என் கேமராக்கள் கடல் கடந்தும் போய் வந்திருக்கின்றன.) இந்தத் தொழிலில் பல சுவாரசியமான அனுபவங்கள்!



● பழனி கோவில் கும்பாபிஷேகத்தின் போது, இருநூறு டீ.வி.கள் மூலம், மலை மீதும், அடிவாரத்திலும் உள்ள பக்தர்கள், கும்பாபிஷேகத்தைப் பார்க்க ஏற்பாடாகியிருந்தது. இந்தப் பணிக்காக பலரும் கொடேஷன்கள் கொடுத்திருந்தார்கள். (அதிகபட்ச கொடேஷன் பத்து லட்சம்) பழனி முருகனுக்காகப் பணமே வாங்காமல் நான் செய்து கொடுக்க முன்வந்தேன். மாவட்டக் கலெக்டரும், கோவில் தக்காரும் நான் சொன்னதை நம்பவில்லை. குறைந்தபட்ச கொடேஷன்தாரர்களிடம் வேலையை ஒப்படைத்து விட்டு, எங்களுக்கும் பச்சைக் கொடி காட்டினார்கள். (வேலையை ஆரம்பித்த இரண்டாவது மணியில், "ஐயோ! நம்மால் ஆகாது!" என்று அவர்கள் ஜகா வாங்கி விட்டனர்). டயனோரா, சாலிடேர் இரண்டு கம்பெனிகளும், ஒளிபரப்புக்குத் தேவையான இருநூறு டெலிவிஷன் பெட்டிகளை, இலவசமாகவே கொடுக்க முன்வந்தன. இறக்குமதி செய்யப்பட்ட கேபிள்கள் சகிதம் பழனி போய் இறங்கினோம்.

மடமடவென்று வேலைகள் ஆரம்பித்தோம். மலை மீதும், அடிவாரத்திலும், இடம் தேர்ந்தெடுத்து இருநூறு டீவி. பெட்டிகளைப் பொருத்தினோம். கேபிள்கள் போடப்பட்டன. மலை மீதே ஒரு கண்ட்ரோல் ரூம் செட் பண்ணி, இரவு ஏழரை மணிக்கு, திருவிளையாடல் கேசட்டைப் போட்டதுதான் தாமதம். மறு விநாடி, மொத்த ஜனமும் டீ.வி. பார்க்கத் தரையில் அமர, பழனியே ஸ்தம்பித்தது.

நடு இரவு, ஒரு தடவை டெஸ்ட் பண்ணிய போது, தடங்கல். படம் தெரியவில்லை. கேபிள் போகிற வழியில் உற்று கவனித்து நடந்து போய், இரண்டு இடங்களில் குரங்குகள், கேபிளைக் கடித்துத் துண்டித்திருந்ததைக் கண்டுபிடித்துச் சரிசெய்தோம்.

மறுநாள் காலை கும்பாபிஷேகத்தை பழனியில் லட்சக்கணக்கான மக்கள் மெய்மறந்து டீ.வி.யில் பார்த்து, ரசித்ததும், மாவட்ட கலெக்டரும், போலீஸ், கோவில் உயர் அதிகாரிகளும் கை குலுக்கிப் பாராட்டியது ஆயுசுக்கும் மறக்காது!

● ஒரு தடவை, ரயிலில் வரும்போது, எங்களுடைய கேமரா அடங்கிய சூட்கேஸை, யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்கள். போலீசில் புகார் கொடுக்க, சில வாரங்கள் கழித்து, கேமரா திரும்பக் கிடைத்தது. பணத்தை எதிர்பார்த்த திருடன், ஏமாற்றத்தில், கேமராவையும், சூட்கேஸையும் ஒரு குட்டையில் போட்டு விட்டுப் போய்விட, அதைத்தான் போலீஸ் மீட்டுக் கொடுத்தது!

● கடந்த சில வருடங்களாக, சத்ய சாயிபாபாவின் பிறந்த நாள் வைபவத்தை வீடியோ எடுக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்து வருகிறது. சிரத்தையுடன் நான் செய்யும் அப்பணியை பாபாவே பாராட்டி, எனக்கு நினைவுப் பரிசு தந்து ஆசீர்வதித்தது மெய்சிலிர்க்கும் அனுபவம்!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **யோகா**

# கட்சிகளை உலுக்கும் உட்கட்சித் தேர்தல்கள்!

● அம்மாவின் அருட்பார்வையில் இருந்து சமீபத்தில் விலக்கப்பட்ட அந்த முன்னாள் அமைச்சர் இப்போது மிகவும் நொந்து போய் இருக்கிறார். 'சிறப்பு நீதி மன்றம் நியமிக்கப்பட்டது சரியே' என்று உயர் நீதி மன்றம் தீர்ப்புக் கொடுத்து விட்டதுதான் கவலைக்குக் காரணம் என்பார்கள். ஆனால் அந்த மாஜியின் கவலை அதுவல்லவாம். அம்மாவின் அருட்பார்வை இருந்த போது மேற்கண்ட வழக்கில் அவர் சார்பில் வாதாடும் பிரபல தில்லி வழக்கறிஞர்களுக்கான கட்டணம், அவர்கள் தங்க வசதிகள் ஆகியவற்றை ஏற்பாடு செய்யும் பொறுப்பை அம்மா இவரிடம் ஒப்படைத்திருந்தாராம். அவரின் கட்டளையை சிரமேற்கொண்டு செயல்படுத்தினார் அந்த மாஜி. அந்த வகையில், அவர் சேர்த்து வைத்த சொத்து கணிசமாகவே கரைந்து விட்டதாம். அதுவும் இரண்டு முறை வழக்கு விசாரிக்கப்பட்டதால் இரட்டைச் செலவாம். வழக்கும் தோல்வியடையவே, வாடிப் போயிருக்கிறார் அவர்.



● அ.தி.மு.க. உட்கட்சித் தேர்தல் நடந்து கொண்டிருக்கிறது. தமிழகமெங்கும் கட்சிக்குள் அடிதடிகள். சில இடங்களில் வெட்டு குத்துகள். தினசரி தேர்தல் முறைகேடுகளைப் பற்றிய தந்திகளும், கடிதங்களும் அம்மாவிடம் வந்து குவிகின்றனவாம். கட்சிப் பொறுப்புகளில் பெண்களுக்கு 33 சதவீதம் ஒதுக்கீடு உண்டு என அம்மா அறிவித்தார் அல்லவா! சில மாவட்டச் செயலாளர்கள், தங்கள் மாவட்டம் பெண்களுக்கான ஒதுக்கீட்டில் வந்து விடக்கூடாது என்பதில் மிகவும் கவலையோடு இருக்கிறார்கள். சேடப்பட்டி, சின்னசாமி, சத்தியமூர்த்தி ஆகியோரிடம், 'அண்ணே... எங்க மாவட்டத்தை விட்டுடுங்க...' என்று கெஞ்சிக் கொண்டிருக்கிறார்கள். இதற்கிடையில் மாநில மகளிர் அணிச் செயலாளர் கவிநிலவு தர்மராஜ், சில குறிப்பிட்ட மாவட்டங்களில் உள்ள தாய்க் குலங்களிடம் 'மாவட்டச் செயலாளராக்குகிறேன்' என்று "வாக்கு" கொடுத்திருக்கிறாராம். சர்வாதிகாரமாகச் செயல்படும் கவிநிலவை முதலில் மாற்ற வேண்டும் என்று அம்மாவிடம் முறையிட ஒரு அணியினர் தயாராகி வருகிறார்கள். இதற்கிடையில் பொறுப்பில் இருக்கும் பிரமுகர்களின் குடும்பத்துப் பெண்மணிகள், பெண்கள் ஒதுக்கீட்டைப் பயன்படுத்திக் கொண்டு கட்சித் தேர்தலில் போட்டியிடக் கூடாது என்று தடை போட யோசிக்கிறாராம் அம்மா!

● பல மாவட்டங்களில் பா.ம.க. செயற்குழு, பொதுக்குழுக்கள் நடந்து வருகின்றன. டாக்டர் போகும் இடங்களிலெல்லாம், பா.ம.க.வினர் தவறாமல் சொல்வது 'எந்தக் காரணம் கொண்டும் அ.தி.மு.க. கூட்டணியிலிருந்து நாம் விலகக் கூடாது!' என்பதுதானாம். (ஊ¬ம்! என்ன பிரயோசனம்?) அம்மாவுடன் அதிக பட்சமாக டாக்டர் அட்ஜஸ்ட் செய்து கொள்வதற்கான காரணமும் இதுதானாம். பா.ம.க. உட்கட்சித் தேர்தல்களிலும் ஆங்காங்கே கசமுசாக்கள். சமீபத்தில் விருத்தாசலத்தில் டாக்டரின் முன்னேயே மோதல் வெடித்ததாம். வெறுப்படைந்த டாக்டர் இடையிலேயே வெளி நடப்புச் செய்து விட்டார்.

● தேர்தல் கமிஷன் கட்டளைக்கேற்ப தி.மு.க.வில் கடந்த வருடம்தான் உட்கட்சித் தேர்தல்கள் நடந்தன. தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் பதவிக் காலம் மூன்று வருடம் உண்டு. ஆனால் இந்த வருடமே, மீண்டும் உட்கட்சித் தேர்தல்கள். இது ஏன்? போன வருடம் அவசர அவசரமாய் நடத்தப்பட்ட தேர்தலில், பணம், ஜாதி என்று விளையாடியதால் தகுதியில்லாதவர்கள் பலர், பொறுப்புகளுக்கு வந்து விட்டார்களாம்! 'அவர்களை வைத்துக் கொண்டு எதிர்காலத்தில் கட்சியையும் நடத்த முடியாது, தேர்தலையும் சந்திக்க முடியாது. எனவே உடனே மீண்டும் உட் கட்சித் தேர்தல் நடத்த வேண்டும்!' என்று குரல் கொடுத்தவர் மாறன்தானாம். கட்சித் தேர்தல் காரணமாக இங்கும் புகைச்சல்கள் ஆரம்பமாகத் தொடங்கி விட்டன. ●

— தில்லப்பா

**காதில் விழுந்தவை:**

தலைப்பைப் படித்ததும் மண் வாசனை மூக்கில் ஏறி, கண்களை ஒரு கலக்குக் கலக்கி விட்டு, ட்ரியோ என்று மூளை வரை சென்று ஒரு தாக்கு தாக்குகிறதா?

எல்லாம் தலைப்போடு சரி. படத்தில் வெறும் கசாப்பு வாசனைதான்.

கோடம்பாக்கத்து சிந்தனைச் சிற்பிகளுக்கு சந்தன வீரப்பன் சமாசாரம் எப்போதுமே ஓர் அட்சய பாத்திரம். இம்முறை வீரப்பர் மற்றும் அவர்தம் திருவிளையாடல்களை அதிகபட்சம் நியாயப்படுத்தும் வைபவம் அரங்கேறியிருக்கிறது. இந்தப் புண்ணிய காரியத்தை முன்னின்று நடத்த ஓர் ஆசாமி போதாதென்று அப்பா + மகனாக இரு விஜய்காந்த்கள்.



சீனியர் வீரப்பர் நியாயத்துக்குக் கட்டுப்பட்டு போலீஸில் சரண்டராகி விடுவதோடு படம் முடிந்தால் அதில் என்ன சுவாரஸ்யம் இருக்க முடியும்? ஆகவே, எங்கே தம் தகிடுதத்தங்கள் அம்பலமாகி விடுமோவென ஊழல் அமைச்சர்களும் உதவாக்கரை போலீஸாரும் அவரைச் சுட்டுக் கொன்று விடுகிறார்கள்.

இது போதாதா, ஜூனியர் வீரப்பர், தந்தையின் திருப்பணிகளைத் தொடர கானகம் புகுவதற்கு? இதில் மகத்தான விசேஷம் என்னவென்றால், அங்ஙனம் ஆரண்ய காண்டம் காணும் ஜூனியர், ஓர் அஸிஸ்டென்ட் கமிஷனர் என்பதே!

இது போன்ற உன்னதமான கதையமைப்பைக் கண்டு மயிர்க் கூச்செரிந்து, புல்லரித்து, புளகாங்கிதமடையவில்லையென்றால் நாம் சினிமா பார்க்கவே லாயக்கில்லாதவர்களாகி விடுவோம்.

மேலும், படம் முழுவதுமே புல்லரிக்கச் செய்து விடுவது என்று விஜய்காந்த் அண்ட் கோ முடிவு செய்து விட்டபடியால், நகைச்சுவைக் காட்சிகளில்கூட நம் நரம்புகளெல்லாம் புடைத்து விண்ணென்று தெறிக்கின்றன! பரவசத்தில் நாற்காலி நுரைப் பஞ்சையெல்லாம் பிய்த்துப் பறக்க விட்டு விடுகிறோம்.

வெறுமனே இப்படிச் சொன்னால் விளங்காதல்லவா? உதாரணம் பாருங்கள்.

செந்திலின் மகளை ஓர் இன்ஸ்பெக்டர் மானபங்கப்படுத்த முயல்கிறார். பாவம், ஆழ்வார்க்கடியான் சைஸில் இருப்பவரால் என்ன செய்து விட முடியும்? உடனே செந்தில் மனத்தளவில் (தம் மகள் சார்பில்) திரௌபதியாகி, ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் இரண்டாவது எடிஷனான விஜய்காந்தை 'துரைப் பாண்டியா' என மோனிகா செலஸ் குரலில் உரக்க அழைக்கிறார்.

ஓர் அக்கிரமம் நடப்பதைப் பார்த்து இயற்கை சும்மா இருக்குமா? அந்தக் குரலை பல கிலோமீட்டர்கள் தொலைவில் இருக்கும் வீரப்பரின் திருச்செவிகளில் கொண்டு சேர்க்கிறது. உடனே டைட் க்ளோசப்பில் விஜய்காந்தின் விழிகள் பயங்கரமான கதகளி நடனம் ஆடுகின்றன. ஆயுத உடை தரித்து, ஒளியின் வேகத்தை விடவும் கூடுதலான வேகத்தில் அவர் பாய்ந்து வந்து துஷ்ட நிக்ரஹம் பண்ணும்போது, புல்லரிப்பில் நம் தோல் பிய்ந்து விடுகிறது!

இன்னும் பல உதாரணங்களையும் பட்டியல் போட்டுக் காட்டலாம்தான்! ஆனால் அதையெல்லாம் கேவலம், எழுத்தால் வர்ணித்து விடக்கூடிய சாதாரணங்கள் என்றா கருதுகிறீர்கள்? ஒருக்காலும் இல்லை.

ரசிகமகா ஜனங்களைப் பரவசத்தில் பாயைப் பிறாண்டச் செய்தே தீருவது என்கிற உயர்ந்த நோக்கத்துடன் வந்திருக்கும் படம் இது. பார்த்துப் பரவசப்படுங்கள்! ● — ஜி.

# வீரம் வெளஞ்ச மண்ணு

# ஜெயிப்பாளா

**ர**யில்வே அமைச்சர் ராம்நாயக், ரூ. 50,000 உதவித் தொகை, ரயில்வேயில் வேலை, போனஸாக ப்ரேவரி அவார்டு ஆகியவற்றைத் தந்தார். மனோஹர் ஜோஷி, முரளி தேவ்ரா (காங்.) இன்ன பிற அரசியல் பிரமுகர்கள் சில பல ஆயிரங்கள், ஹிந்துஸ்தான் லீவர் அதிகாரிகளிலிருந்து ஹிந்துஸ்தானில் வாழும் சாதாரணர்கள் வரை, காசோலைகள், என்றெல்லாம் ஜெயபாலா எனும் 23 வயது காமர்ஸ் மாணவி காலடியில் குவிக்கிறார்கள்! அதுவும் மில் வேலையை இழந்த அப்பாவும், கர்சீஃப் வியாபாரம் செய்யும் அண்ணாவும், வேலையில்லாப் பட்டதாரியான தம்பியும், வயதான தாயாரும் உள்ள குடும்பச் சூழலில், இவை ஜெயபாலாவை சந்தோஷக் கூத்தாட வைத்திருக்க வேண்டும். ஆனால் முடியவில்லையே! இத்தனை வரவுகளுக்கும் அவள் விலையாகக் கொடுத்திருப்பது இரண்டு கால்களையுமல்லவா? காலேஜுக்கு, ரயிலில் பயணித்துக் கொண்டிருந்த அதிகாலைப் பொழுதில், லேடீஸ் கம்பார்ட்மெண்டில் ஒரு கயவன் நுழைந்து, இவள் பர்ஸை (70 ரூ) திருட எத்தனிக்க, ஜெயபாலா மறுத்துப் போராட, அந்த வெறியன் இவளை ஓடும் ரயிலிலிருந்து தூக்கி எறிய... கால்கள் சதக்!

இந்த கோர சம்பவம், மும்பை மக்கள் கண்களிலிருந்து அருவியாக நீரைக் கொட்ட வைக்க, ஜெயபாலா கண்களிலிருந்து ஒரு சொட்டு நீர் கூட உதிரவில்லை! இந்த மன உறுதி பிரிதொரு சுதா சந்திரனைப் பிரசவிக்கலாம்; ஆனால், சம்பவத்தன்று ரயில் பெட்டியிலிருந்த வேறு இரண்டு



• ஜெயபாலா • தாயுடன்



பெண் பயணிகள், உதவியும் செய்யாமல், கள்வன் மறைந்த பின்னும் அடுத்த ஸ்டேஷனில் கம்ப்ளெ யிண்டும் கொடுக்காமல், இன்று வரை மௌனச் சாமி யாரிணிகளாயிருக்கிறார்களே, அவர்களைத் தேடிப் பிடித்து "உலகளாவிய கோழைகள்" அவார்டைக் கொடுத்தாலென்ன?

## அழுகிய காயம்

'ஐயோ! அம்மா! அபாண்டம்! அக்கிரமம்! இது அடுக்குமா?' என மும்பைக்காரர்கள் அலறினார்கள் – சீச்சி, கொலை இலை எல்லாமில்லை; அதுதான் சகஜ மாகி விட்டதே! துபாயிலிருந்து ஒரு அம்ரித்ஸர் வியா பாரி இறக்குமதித்த 150 டன் வெங்காயம், மும்பைத் துறைமுகத்தில் இறங்கி, ஏதோ 'டெக்னிகல்' காரணங் களுக்காக க்ளியரன்ஸ் கிடைக்காமல், வாரக் கணக்கில் கிடந்து, அழுகி, நாற்றமெடுக்கத் துவங்கி விட்டது! கிலோ 40 ரூ விற்கும் போது, 'இது OGL (Open General Licence) முறையில் இறக்குமதிக்கப்பட்டதா? Restricted வகையில் வந்ததா?' என்றா விவாதித்துக் கொண்டிருப்பார்கள்? வெங் காய விவகாரம் அரசையே கவிழ்த்து விடுமோ என்ற வெல வெலப்பில், ரேஷன் கடையில் இப்போது, ஒரு கார்டுக்கு ஒரு கிலோ (ரூ. 15) வெங்காயம் போடுவதாக அறிவித்து விட்டார்கள்!

## காலம் கடந்த வசந்தம்!

"ஹூம்... உங்களைப் போலவா? எங்க காலத்துல ஒரு பார்க், பீச்னு போயிருப்பமா..." என்று மும்பைப் பெரிசு கள் இனி இளசுகளைப் பார்த்துப் பொறாமைப்பட வேண் டிய தில்லை! பெரியவர்கள் விட்ட பெருமூச்சினால் பொசுங்கிப் போன பிரமோத் நவால்கர், கிர்காவ் சௌபாத்தி பீச்சை ஒட்டி, வில்சன் காலேஜுக்கு எதிராக, ஒரு "நானா - நானி" (தாத்தா - பாட்டி) பார்க்கை வடிவமைத்திருக்கிறார். பார்க்கில் பூச்சொரியும் பச்சை விரிப்புகளுடன் 'வாக்' செய்ய தனி ட்ராக், நியூஸ்பேப்பர் ஸ்டாண்டு, இருக்கைகள் இவற் றுடன், ஹி...ஹி... ஊஞ்சல்களுமுண்டு! "ஆகாயப் பந்த லிலே பொன்னூஞ்சல்" ஆடும் வசதி களைச் செய்து கொடுத்திருப் பவர், கூடவே மருத்துவ மையமமைத்து, டாக் டர்களையும் அவ்வப்போது வரவழைக்கும் வழி வகைகளையும் செய் திருக்கிறார் பாருங்கள்... அதுதான் 'நவால்கர்' டச்!

## ஆ!'ரம்ப' விழா!

'நறுக்'கென்று முடித்தால்தான் விழாக்களெல்லாம் சோபிக்கும். 'சண்முகானந்தா' ஹாலின் கிரகப்பிரவேச மென்னவோ ஹோமம், பூஜை புனஸ்காரங்களுடன் சிறப்பாகவே ஆரம்பித்தது. அதன் பிறகு இசை நிகழ்ச்சி கள் ரப்பராக இழுத்தடித்து, நிரம்பியிருந்த ஆடிட்டோரி யத்தைப் படிப்படியாக காலி யாக்கியது. ஆர்கெஸ்ட்ரா முடிந்து, 'வெற்றி வேல் முரு கனுக்கு' என்று மேடையில் ஒருவர் கோஷமெழுப்ப, "அரோகரா" சொல்லக் கூட திராணியற்ற, மெலிந்து, நசிந்த (கான்டீனும் இல் லையே!) கூட்டம்! அதுவும் கூட கடைசியில் காண் பிக்கப்பட்ட 'அறுபடை வீடு' டாகுமெண்டரியைக் காணத் தவமிருந்த முருக பக்தர்கள்தாம்! படம் மட்டுமில்லை என் றால், பாவம், ஓரளவு நன் றாகவே வாசித்த வயலின் மாணாக்கர்களும் தொடர்ந்த அருமையான சித்தார் கலைஞர்களும், காலி நாற்காலிகளுக்குத் தான் வாசித்திருக்க வேண் டும்! ○

ஜெய்யாலா?

— ஜெயஸ்ரீ ராஜ்

சுவாமி தேசிகன் தம் மனைவியிடம் கொண்டு போய்க் கொடுத்த அரிசியிலே அவள் கல் – மண் நீக்கிச் சுத்தம் செய்தாள்.

எப்போதுமே பகவானுக்கு நிவேதனம் பண்ணுவதற்காக சமைக்கும் பொருள்களைச் சுத்தப்படுத்தி, சோதிப்பது வழக்கம்.

சாப்பிட உட்கார்ந்த பிறகு இலையிலே கல் வந்து விழுந்தால் அந்த நேரத்திலே பத்னியிடம் கேட்கக் கூடாது. ஏனென்றால், அது ஏற்கெனவே பகவானுக்கு நிவேதனமான பதார்த்தம். அவனுக்குக் கல்லோடு சமைத்துப் போட்டுவிட்டு நாம் மட்டும் சாப்பிடும்போது குறை சொல்லி, கேள்வி கேட்கலாமா... இதைத் தவிர்க்கணும் என்றால் பதார்த்தங்களை சுத்தம் செய்து சமைக்க வேண்டும். அப்படிச் சுத்தம் செய்யப் பரிசோதிக்கிற போதுதான் சுவாமி தேசிகனின் மனைவி அரிசியிலே ஒரு ஸ்வர்ண அரிசியைக் கண்டெடுத்தாள்.

அதைக் கொண்டு போய்... சுவாமி நின்று கொண்டிருந்தார்... அவரிடம் போய்க் காட்டினாள். "இது என்ன...?" என்று கேட்டாள்.

"அது புழு! அதை வெளியிலே தள்ளு!" என்று சொல்லிவிட்டார் அவர்.

சுவாமி தேசிகன், தங்கத்தைப் புழுவாக மதிக்கிறார். சுவாமியின் மனைவியோ தங்கத்தைப் பார்த்து, 'இது என்ன?' என்று கேட்கிறார்! எப்படிப்பட்ட தம்பதி பாருங்கள்!

இதே சுவாமி தேசிகன்தான் ஒரு பிரும்மசாரிக்காகப் பிரார்த்தனை பண்ணி மஹாலக்ஷ்மியை ஸ்தோத்திரம் பண்ணி – தனத்தை வரவழைத்துக் கொடுத்தார். அப்படியே கொட்டியது ஐச்வர்யம்!

வாக்கசைந்தால் நாடசையும் என்கிற மாதிரி, சுவாமிதேசிகன் வாக்கிலே மஹாலக்ஷ்மி தாண்டவமாடினாள்.

அப்படிப்பட்ட வைராக்ய விதியுடனிருந்தவர் சுவாமி தேசிகன்.

வித்யாரண்ய சுவாமியும் சிறந்த ஞானி. வேதத்துக்கு பாஷ்யம் எழுதினார். சிருங்கேரி பீடத்தை அலங்கரித்தார்.

அந்த வித்யாரண்யர் என்ன பண்ணினார்? மஹாலக்ஷ்மியை ஸ்தோத்திரம் பண்ணினார். மஹாலக்ஷ்மி பிரத்யக்ஷமானாள். 'என்ன வேண்டும்?' என்று கேட்டாள்.

"ஐச்வர்யம்!" என்றார் இவர். அதற்கு மஹாலக்ஷ்மி சொன்னாள் : "இந்த ஜன்மாவிலே ஐச்வர்யத்தை அடைவதற்கு இல்லை... அடுத்த ஜன்மாவிலேதான் உனக்குக் கிடைக்கும்" என்றாள்.

உடனே அவர் யோசனை பண்ணினார். அடுத்த ஜன்மா என்றால் ரொம்பக் காலம் பொறுத்திருக்க வேண்டுமே. இப்போதே அடுத்த ஜன்மாவை வரவழைக்க வேண்டும் என்று தீர்மானம் பண்ணினார். உடனே சன்யாசம் வாங்கிக் கொண்டுவிட்டார்!

சன்னியாசம் என்பது இரண்டாவது ஜன்மா. அது புனர்ஜன்மா. அதனால்தான் சாதுர்மாஸ்ய சங்கல்பம் கணக்கு பண்ணப்படுகிறது. 'ஐந்து சங்கல்பம் ஆயிற்று. ஆறு, அல்லது ஏழு' என்று சொல்வார்கள். சங்கல்பம்தான் அவர்களுக்கு வயது. அதனால், அந்த அடிப்படையிலே தான் பெரியவர் – சின்னவர் என்று நிர்ணயம் செய்யப்படுகிறது. சாதுர்மாஸ்ய சங்கல்பத்தை அதிக முறை செய்து கொண்டவர்களை, சங்கல்பம் குறைவாக ஆன சன்னியாசிகள் வணங்க வேண்டும்.

இப்படியிருப்பதால், வித்யாரண்யர் என்ன பண்ணினார், அடுத்த ஜன்மா அடைவதற்காக வேண்டி, சன்னியாசம் வாங்கிக் கொண்டு விட்டார். மறுபடியும் மஹாலக்ஷ்மியைப் பிரார்த்தனை பண்ணினார். லக்ஷ்மி மறுபடியும் பிரத்யக்ஷமானாள். 'என்ன வேண்டும்?' என்று கேட்டாள்.




"ஐச்வர்யம்" என்றார் இவர்.

"அடுத்த ஜன்மாவில்தானே தருவதாகச் சொன்னேன்..."

''இதோ வந்து விட்டதே, அடுத்த ஜன்மா..." என்று காஷாயத்தைத் தூக்கிக் காண்பித்தார்.

மஹாலக்ஷ்மி ஆச்சர்யப்பட்டாள். ரொம்ப சந்தோஷம் அவளுக்கு.... 'இப்போதே கொடுத்தேன்' என்று ஐச்வர்யத்தை வாரிக் கொடுத்து விட்டாள்! அப்படியே கொட்டுகிறது ஐச்வர்யம்....

"நான் போய்விட்டு வரட்டுமா?..." என்று மஹாலக்ஷ்மி கேட்டாள்.

"நன்றாகப் போய்விட்டு வரலாம்...." என்றார். வெறுமே 'போ' என்று சொல்லக் கூடாது மஹாலக்ஷ்மியை!

மஹாலக்ஷ்மி போன பிற்பாடு அந்த ஐச்வர்யம் முழுவதையும் பார்த்தார். 'ஐயோ! தெரியாத்தனமாகக் கேட்டு விட்டேனே...' என்று வருத்தப்பட்டார்.

'இப்போது இருக்கிற சன்யாஸாசிர மத்திலே இதையெல்லாம் கையாலேயே தொடக் கூடாதே. இதை எதற்காகக் கேட்டோம்! அப்போது கேட்டோமென்றால் அது வேறு ஆசிரமம். சன்னியாஸாசிர மத்தில் திரவியத்தைக் கையால் தொடலாமா! ஐச்வர்யத்தைத் தொடலாமோ..!' என்று மனம் வருந்தினார்.

சன்னியாசிகள் தாரு பாத்திரத்தைத்தான் – (கட்டையினால் ஆன பாத்திரம்) – கையிலே வைத்துக் கொள்ளலாம். அதைத் தவிர மற்றதையெல்லாம் தொடுவதற்கே இல்லை...

'இதைப் போய்த் தொடும்படியாகி விட்டதே' என்று யோசித்துப் பார்த்தார் வித்யாரண்யர்.

ராஜ சன்னியாசிகள் இருக்கிறார்கள் என்றால், பகவானை ஆராதனை பண்ணும் படியான பொறுப்பு அவர்களுக்கு இருக்கிறது. அந்தப் பொறுப்பிலே அந்தப் பாத்திரங்களை அவர்கள் தொடலாம். ஆனால் சாமான்யமாக சன்னியாஸாசிரமத்தை ஏற்றுக் கொண்டால் இந்த மாதிரியான வஸ்துக்களைத் தொடுவதற்கில்லை என்கிறது சாஸ்திரம்.

பார்த்தார் வித்யாரண்யர்.... அந்த திரவியத்தைக் கொண்டு, மாலிக் கஃபூருடைய படைகளினால் சிதிலமடைந்த கோயில்களையெல்லாம் புதுப்பித்தார். அது தவிர, ஹரிஹர – புக்கர் ஸ்தாபனம் பண்ணிய அந்த விஜயநகர சமஸ்தானத்திலே ஏகப்பட்ட திரவியத்தைச் செலவழித்து, அதையெல்லாம் விசேஷமாக நடத்தினார். வேதத்துக்கு பாஷ்யம் எழுதினார். சிருங்கேரி பீடத்தை அலங்கரித்து அங்கு விசேஷமாக திருவாராதனை பூஜைகளெல்லாம் பண்ணினார்.

சிருங்கேரி பீடத்திலே பிரும்மாண்டமான சாலிக்கிராமம் உண்டு. அந்த சாலிக்கிராம மூர்த்திக்கு நரசிம்ஹ ஜயந்தியின் போது அபிஷேகம் பண்ணுவதைப் பார்க்க ரொம்ப அழகாக இருக்கும். அப்படி விசேஷமாக அவர் பண்ணினார்.

இந்த மாதிரி, சுவாமி தேசிகனைப் போல், வித்யாரண்யருக்கும் மஹாலக்ஷ்மி பிரத்யட்சமாகியிருக்கிறாள். அதே மாதிரி, ஆதி சங்கரரும் துவாதசி அன்றைக்கு அந்த கிரகத்தினுடைய தாரித்ரியத்தைப் போக்குவதற்காக, கனகதாரா ஸ்தோத்திரம் மூலமாக விசேஷமாக மஹாலக்ஷ்மியை ஸ்தோத்திரம் பண்ணி, கனகவர்ஷம் பொழியச் செய்தார்.

இப்படி கனகதாரா ஸ்தோத்திரம், வித்யாரண்யர் பண்ணிய ஸ்ரீஸ்தவம்; சுவாமி தேசிகன் பண்ணிய ஸ்ரீ ஸ்துதி – இவை மூன்றுமே அடியேனுக்கு நன்றாகத் தெரியும்... நித்தியம் சொல்லிக் கொண்டிருக்கிறேன்; ஆனால் ஐச்வர்யம் கொட்ட மாட்டேன் என்கிறது!

காரணம், இதிலே சொப்பிரயோஜனம் (சுய பிரயோஜனம்) – நமக்கென்று கேட்கிறோம். கல்மிஷம் கலந்திருக்கிறது...! அதனால் நம் பிரார்த்தனை சரியில்லை என்று தெரிகிறது.

ஆனால் அந்தப் பெரியவர்கள் பண்ணியதெல்லாம் லோக கல்யாணார்த்தமான செயல்கள். உலகுக்காகப் பிரார்த்தித்தார்கள்; கொட்டியது!

நமக்குக் கொட்டவில்லை என்பதால், நம் பிரார்த்தனை சரியில்லை என்று ஏற்படுகிறதல்லவா!

மஹா நிபுணரான வித்யாரண்யர், விசேஷமாக அந்த விஜயநகர சமஸ்தானத்திலே இருந்து சுவாமி தேசிகனுக்கு எழுதினார். ஆனால் வைராக்கியத்தினாலே சுவாமி தேசிகன் உஞ்ச விருத்தி பண்ணும் படியான அந்த வழியிலேயிருந்து மாறி சமஸ்தான அழைப்பை ஏற்கவேயில்லை.

அப்படிப்பட்ட சுவாமி தேசிகனுக்கு சமஸ்த ஐச்வர்யமும் கொட்டிற்று!

### அருள்வாக்கு

'லோகம் முழுவதையும் பகவானுடையதாகப் பார்த்து அதற்கேற்ப எப்படி நடக்க வேண்டுமோ அப்படி நடப்பதே மநுஷ்யர்களின் தர்மம். தனக்கென்று மட்டும் இவன் செய்து கொள்கிற காரியங்கள் இவனை அதர்மத்தில்தான் தள்ளும். எனவே, இப்போது இவனுக்கு இருக்கிற சுயநலத்தைக் குறைக்க வேண்டும்; இவனுக்கு ஈசுவரனின் நினைப்பை உண்டாக்கி, அவனுடைய உடைமையே உலகமெல்லாம் என்ற அறிவை ஏற்படுத்த வேண்டும்' என்ற அடிப்படையில்தான் சகல மதங்களும் உண்டாகியிருக்கின்றன. 'உன் ஆசைப்படி நடந்து கொண்டு உனக்கென்றே சொத்து சேர்த்துக் கொள்' என்று சொல்கிற மதம் எதுவுமே இல்லை. தன்னை முக்கியமாக நினைத்துக் கொள்கிற வரையில் இவன்



சுயநலத்துக்குத்தான் காரியம் செய்து கொள்வான் என்பதால் அத்தனை மதங்களும் கடவுள் என்கிற ஒன்றை இவனுக்குச் சொல்லி, 'அப்பா, பிரபஞ்சம் முழுவதையும் செய்த அந்த மகாசக்தியின் முன் நீ ஒன்றுமேயில்லை' என்று காட்டி இவனுடைய அகங்காரத்தைக் குறைக்கின்றன. அவனைப் பிடித்து விட்டால் நம் மூளையைச் செய்த அவனே அதை எப்படித் திருத்த வேண்டுமோ அப்படித் திருத்தி நம்மை நம் தர்மத்தில் ஈடுபடுத்தி விடுவான் என்பதால் பக்தியையே பெரும்பாலான மதங்கள் முக்கியமாக வைத்திருக்கின்றன.

ஆனாலும் கடவுள் என்று ஒரு தத்துவம், அதனிடம் பக்தியில் மனசைத் தோய்க்க வேண்டும் என்று மட்டும் சொல்லி விட்டால் சாமானிய ரீதியில் அதைப் பிடித்துக் கொண்டு ஸ்திரமாக நிற்க முடியவில்லை. பக்தியையும் காரியரூபத்தில் [illegible]து என்றாலே சாதாரண ஜனங்களால் முடிகிறது. இதற்காகத்தான் ஒவ்வொரு மதத்திலும் சடங்குகள் – சந்தியாவந்தனம், ப்ரேயர், நமாஸ் – எல்லாம் வந்திருக்கின்றன. லோக வாழ்க்கையில் இருந்து கொண்டே இப்படி பக்தி செய்கிறபோது உலகில் எப்படி நடப்பது இவனுக்கு தர்மம் என்பதை மதங்கள் சொல்கின்றன. 'எல்லோரிடமும் அன்பாக இரு; தியாகம் பண்ணு; சேவை பண்ணு' என்று இப்படி எல்லாம் அத்தனை மதங்களும் சொல்கின்றன. இப்படி இவன் வாழ்க்கை நடத்திவிட்டால் அப்புறம் உடம்பு போனபின் உயிரானது அந்தக் கடவுளிடமே போய்ச் சேர்ந்து விடும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்.**

ஆகையினாலே, நாம் ஐச்வர்யத்தைப் பிரார்த்திக்க வேண்டுமானால், அதையும் அக்னியிடத்திலே பிரார்த்திக்க வேண்டும். வைராக்யத்தைப் பிரார்த்திக்க வேண்டுமானால், அதையும் அக்னியினிடத்திலே பிரார்த்திக்க வேண்டும்.

ஹே அக்னே! நல்ல வழியிலே என்னை அழைத்துச் செல் – முன்னுக்கு அழைத்துச் செல்பவனே! உயர்ந்த ஐச்வர்யங்களை நீ எனக்குக் கொடுப்பாய் – சன்மார்க்கத்திலே என்னை அழைத்துக் கொண்டு போ.... நீ வித்வான்! சமஸ்தத்தையும் உணர்ந்தவன்; இந்த உலகத்திலே இருக்கும்படியான கஷ்ட நஷ்டங்கள் அனைத்தும் உனக்குத் தெரியும் – அதனால், என்னை நல்ல வழியிலே நீ அழைத்துக் கொண்டு போ... அதற்கும் மேலே, பாபக் கூட்டங்கள் அனைத்தையும் எங்களிடமிருந்து போக்கடிப்பாய்!

– கவனிக்க வேண்டும்! 'பாபம்' என்று சொல்லாமல் பாபக் கூட்டங்கள் என்று சொல்லியிருக்கிறது. பாபக் கூட்டங்கள் என்றால் ஏற்கெனவே பண்ணிய பாபம், இப்போது பண்ணிக் கொண்டிருக்கிற பாபம், இனி பண்ணப் போகிற பாபம்... என்று எல்லாவற்றையும் சேர்த்துச் சொன்னது.

பாபக் கூட்டங்கள் அனைத்தையும் எங்களிடமிருந்து போக்கடிப்பாய், ஹே அக்னி!

இப்படி நீ பண்ணும்படியான உபகாரத்துக்கு பிரதியுபகாரமாக நான் என்ன பண்ண முடியும்?! ஹே அக்னி பகவானே! நம : என்று சொல்வதற்கு மேலாக என்னால் என்ன பண்ண முடியும்?

நம : என்று சொல்வேன். வேறொன்றும் அறியேன்.

இந்த நம : சப்தம் வைகுண்டத்திலேயும் ஒலிக்கிறது. வைகுண்டத்திலே நித்ய சூரிகள், முக்தாத்மாக்கள் எல்லோருமே நம : நம: என்று சொல்கிறார்கள்.

நம : என்ற பதம் இருக்கிறது பாருங்கள்... அது ரொம்ப உயர்ந்தது! வைகுண்டத்திலேயும் பகவானைப் பார்த்து நம : நம : என்கிறார்களாம்.

அதனால்தான் பிள்ளை லோகாசார்யார், மணவாள மாமுனிகள் போன்ற ஆசார்யர்கள் எல்லாரும் நம : என்று சொன்னாலே போதும் என்கிறார்கள். விழுந்து சேவிக்கக் கூட வேண்டியதில்லை.

நம : என்று சொன்னாலே, பகவான் ஓடோடி வந்து விடுவான். 'ஓ இவனுக்கு நம : என்று சொல்ல வருகிறதே' என்று பூரிப்பான். நம : என்ற சொல்லையே பொறுக்க மாட்டானாம் பரமாத்மா. அதுவே அவனுக்கு பளுவாகிவிடுமாம். அப்படியானால் அவனை விழுந்து சேவித்தால் எப்படியிருக்கும் என்று நினைத்துப் பாருங்கள்.

(தொடரும்)

ஜன்னல் வழியே வெளிச்சச் சதுரங்கள் தரையில் வேகமாய்த் துரத்தி வந்தன. இயந்திர கதியில் ரயில் ஓடிக் கொண்டிருந்தது.

பஸ்ஸிலோ ரயிலிலோ பிரயாணம் செய்யும்போது, பக்கத்து சீட்டில் கழுத்தறுக்காத பயணி அமையப் பெறுபவன் பாக்கியவான். ரவியின் பக்கத்து 'சீட்' காலி. அவன் வரிசையில் அவன் மட்டுமே. எதிர் சீட்டில் ஒரு பெரியவர் உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பக்கத்தில் ஒரு நான்கு வயதுச் சிறுமி. பேத்தியாக இருக்கும் போல. எதிர் சீட் சிறுமி (ப்ரீதா? ப்ரியா? ஸ்வேதா?) இவனைப் பார்த்து நாணிக் கோணிச் சிரித்தாள். தீர்க்கமான முகம்; பெரிய கண்கள்; சந்தன நிறம். 'க்யூட்'டாக இருந்தாள்.

"பாப்பா, உம் பேரென்ன?"

"அனந்தா தேதி"

"என்ன? அஞ்சாம் தேதியா?"

பெரியவர் புன்னகையுடன் உதவிக்கு வந்தார்.

"அரவிந்தா தேவி."

"ஓ, அப்படியா?"

அசடுவழிந்தான் ரவி. இந்தக் காலத்தில் இப்படிக் கூட பேர் வைக்கிறார்களா?

உடனே ரவிக்கு பிரசாத்தின் ஞாபகம் வந்தது. அவனும் இப்படித்தான்; புரியாத மாதிரி பெயர் வைத்துக் கொண்டான்.

இத்தனை வருஷத்துக்கப்புறமும், இன்று நினைக்கும் போது கூட பிரசாத் ஆச்சரியமான மனிதனாகத்தான் தெரிந்தான்.

பிரசாத் நூதன அறிவாளி. யாருமே சிந்திக்காததைச் சிந்திப்பான். யாருமே பேசாததைப் பேசுவான். கல்லூரி நாட்களில் பிரசாத்தான் எல்லாப் பையன்களுக்கும் ரோல் மாடல்.

நல்ல புத்தகம் படிக்க வேண்டுமா? பிரசாத்தைத்தான் கேட்க வேண்டும். நல்ல சினிமா? அதற்கும் பிரசாத்தான்.

கல்லூரியில் படிக்கும் காலத்திலேயே அவன் கதைகள் பிரபலமான பத்திரிகைகளில் பிரசுரமாகி இருக்கின்றன. இதாலிய நியூவேவ் சினிமா, பிரெஞ்சு கறுப்பு சினிமா; த்ரூபோவின் படைப்பாளிக் கோட்பாடு



என்றெல்லாம் பேசி பயமுறுத்துவான். குருதத்தைத் தவிர இந்தியாவில் வேறு யாருக்கும் சினிமா தெரியவில்லை என்பான். பிற்காலத்தில் தான் போகப் போகும் துறை சினிமாதான் என்று அப்போதே நிச்சயித்துக் கொண்டான்.

கல்லூரிப் படிப்பு முடிந்து எல்லோரும் உத்யோக நிமித்தமாக திசைக்கொருவராகப் பிரிந்து போனார்கள். ரவி மட்டும் அவ்வப்போது பிரசாத்தை சந்தித்து வந்தான். குமார் இஞ்சினீயர் ஆனான். ரவி ஆடிட்டர் ஆனான். வேறு எவனோ ஒருத்தன் என்னமோ ஆனான். ஆனால், பிரசாத் மட்டும் ஒன்றுமே ஆகாமல் புறப்பட்ட இடத்திலேயே இருந்தான்.

அவனைப் பார்க்கும்போது ரவிக்குப் பாவமாக இருக்கும்.

'பிரசாத், ப்ளீஸ் யோசி. காலம் போய்க் கொண்டிருக்கிறது. நமக்கு வயதாகி வருகிறது. உடனே பிழைப்புக்கு ஏதாவது வழி தேடிக் கொள்' என்று கவலையுடன் சொல்லுவான்.

பிரசாத் பதில் பேசாமல் சிரிப்பான்.

பிரசாத் தான் சினிமா டைரக்டர் ஆக வேண்டும் என்பதில் விடாப்பிடியாக இருந்தான்.

பிரசாத்துக்குப் பிடித்த திரைப்பட இயக்குநர்கள் குருதத்தும், ரோமன் பொலான்ஸ்கியும். குருதத்தைப் பற்றிப் பேச்செடுத்தால் மணிக்கணக்கில் பேசுவான்.

# ரோமன் பொலான்ஸ்கியும் ரொட்டித் துண்டும்



எம். ஜி. சுரேஷ்

'ப்யாஸா' 'காகஜ் கே பூல்' போன்ற படங்களை வியப்பான். பொலான்ஸ்கியின் 'டெத் அண்ட் தி மெய்டன்', 'நைப் இன் தி வாட்டர்' போன்ற படங்களைப் பற்றிப் பேசிப் பேசி மாய்ந்து போவான்.

"மோசமான படங்களை எடுத்துக் கொண்டிருக்கும் இந்த நாட்டில், நீ எப்படி நல்ல படத்தை எடுத்து ஜெயிக்க முடியும்?"

"சத்தியஜித்ரேக்கு முடிந்திருக்கிறது; வாசுதேவன் நாயருக்கு முடிந்திருக்கிறது."

"ஆனால், அவர்கள் தமிழ்ப் படம் எடுக்கவில்லை, தம்பி."

"வாஸ்தவம். பன்றிகளுக்கு அழுக்குதான் பிடிக்கும் என்று தீர்மானித்து அதையே தின்னக் கொடுக்கிறார்கள். ஒரு விஷயம் தெரியுமா? பன்றிகளுக்குக் காரட்டும் பிடிக்கும். நான் காரட் தின்னக் கொடுப்பேன்."

"முதலில் உன் வயிற்றுக்கு ரொட்டி தின்னக் கிடைக்கிறதா என்று பார். பன்றிகளுக்குக் காரட் தருவது பற்றி பிறகு யோசிக்கலாம்."

வேட்டை நாயாய் மூச்சிரைக்க ரயில் ஓடிக் கொண்டிருந்தது.

ரவி யோசித்துப் பார்த்தான்.

ரவியும் சரி; அவன் 'பாட்ச்' பையன்களும் சரி; ஆளாளுக்கு ஒரு நுகத்தடியில் போய் மாட்டிக் கொண்டு செட்டில் ஆகி விட்டார்கள்.

பிரசாத் ஒரு மாபெரும் கலைஞனாக மின்னப் போகிறான் என்றே நிறையப் பேர் நம்பினார்கள். அதற்கேற்றாற் போல் அவன் இயக்கிய ஒரு துண்டுப் படம் ஏகப்பட்ட அவார்டுகளை அள்ளிக் குவித்தது. அதைத் தொடர்ந்து என்.எஃப்.டி.சி., அவனுக்கு ஒரு படம் தர முன்வந்தது. பிரசாத் மாய்ந்து மாய்ந்து படம்பிடித்தான். 'க்ளீஷே'க்கள் இல்லாத, பழைய சினிமா மரபுகளை மீறிய வித்தியாசமான படமாக அது அமைந்தது. அந்தப் படம் கலாபூர்வமாக வெற்றியடைந்தபோதிலும் வர்த்தகரீதியாகப் படுதோல்வி அடைந்தது. எப்போதும் 'டேக் இட் ஈஸி' என்று ஜாலியாகவும் தன்னம்பிக்கையோடும் இருந்த பிரசாத், முதல் தடவையாக பீதிக்குள்ளானான். இது அவன் வாழ்க்கையில் அவனுக்கு விழுந்த முதல் அடி. அதன் பிறகு இரண்டாவதாகப் படம் பண்ணும் தருணம் அவனுக்கு வாய்க்கவில்லை.

அந்த நேரம் பார்த்து அவன் வாழ்க்கையில் எல்லோருக்கும் வரும் முக்கியமான தருணமும் வந்தது. நிர்ப்பந்தங்களின் பேரில், சொந்தக்காரர்களின் வற்புறுத்தலால் மல்லிகா என்ற பெண்ணைக் கைப்பிடித்தான். பதிலுக்கு அவள் பிடித்தது இவன் கழுத்தை. கல்யாணம் ஆன நாள் முதலே அவனுக்கு இம்சைகள் ஆரம்பித்தன. வர்த்தக ரீதியாக ஜெயித்த இயக்குநர்களை உதாரணம் காட்டி இவனை மட்டம் தட்டினாள். ஒவ்வொரு வார்த்தையும் ஒரு சவுக்கடி. "அந்த டைரக்டர் ஒரு படத்துக்கு ஒரு கோடி சம்பளம் வாங்குறானாமே. உங்களுக்கு ஏன் ஒரு லட்சம் கூட வாங்கும் யோக்யதை இல்லை?"

சுளீர். "ஆமா, பேர் வாங்கிட்டா போச்சா? பேரை வச்சு ஒரு கிலோ அரிசி வாங்க முடியுமா?" சுளீர். கல்யாணம் பிரசாத்தின் வாழ்க்கையில் அவனுக்குக் கிடைத்த இரண்டாவது அடி. என்ன செய்யட்டும்? வாழ்க்கை உதைகளால் ஆனது தானே?

சமீப காலமாக இந்திய நாவலாசிரியர்கள் எழுதும் ஆங்கில நாவல்கள் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் 'சக்கை'போடு போடுவதை ஒரு ஹாலிவுட் நிறுவனம் கவனித்தது. தனது அடுத்த 'ப்ராஜக்ட்'டாக ஒரு இந்தோ-ஆங்கில நாவலைத்தான் படமாக்க வேண்டும் என்று முடிவு செய்தது. கதைக்களன், சம்பவங்கள் எல்லாம் புதுசாக இருக்கும். பிரசாத்தின் முதல் படம் இந்தியாவில் தோற்றபோதும் வெளிநாடுகளில் அவனுக்கு நல்ல பெயரை வாங்கித் தந்திருந்தது. இப்போது பிரசாத் தன் பெயரை குரு பொலான்ஸ்கி என்று வேறு மாற்றிக் கொண்டிருந்தான். (குருதத் + ரோமன் பொலான்ஸ்கி என்பதன் சுருக்கம்.)

ஒரு இந்தோ - ஆங்கில நாவலை இந்த இந்திய இயக்குநரை வைத்துப் படமாக்கினால் என்ன? புது ருசி கிடைக்கும். அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் நல்ல அறுவடை செய்யலாமே என்று யோசித்தது.

உடனே பிரசாத்துடன் - ஸாரி - குரு பொலான்ஸ்கியுடன் கடிதத் தொடர்பு கொண்டது.

அந்தக் கடிதம் பிரசாத்துக்கு 24 மணி நேரம் தாமதமாகக் கிடைத்தது. முன்னதாகக் கிடைத்திருந்தால் வாழ்க்கை வேறு மாதிரி ஆகியிருக்கும். இது அவன் வாழ்க்கையில் அவனுக்குக் கிடைத்த மூன்றாவது அடி. அந்தத் தினத்துக்கு முன் தினம்தான் அவன் வாழ்க்கையில் அது நடந்திருந்தது.

வீட்டில் மல்லிகாவுக்கும் அவனுக்கும் வழக்கமாக நடக்கும் சண்டையின் உஷ்ணம் கொதிநிலையைத் தாண்டியதில், அவன் அவளை அடிக்க, அவள் தடுமாறிப் போய்

எக்குத்தப்பாய் எதிலோ போய் விழ, எதிர்பாராத விதமாய் 'கோமா'வுக்குப் போய் விட்டாள்.

அதற்குப் பின் வந்த நாட்களில் பிரசாத்துக்கு வீடே ஆஸ்பத்திரி; ஆஸ்பத்திரியே வீடு என்றானது. ஹாலிவுட் நிறுவனம் அவனுக்கு அனுப்பிய கடிதத்தை எப்படியாவது அவள் கண்ணில் காட்டி விடவேண்டும் என்று தவியாய்த் தவித்தான். இரவும் பகலும் அவள் பக்கத்திலேயே கிடந்தான். ஒருதரம், ஒரே ஒரு தரம் கண்ணைத் திறக்க மாட்டாளா? மல்லிகா பிடிவாதமாக 'கோமா'விலேயே இருந்தாள். செத்தும் போனாள். பிரசாத் அதிகம் உடைந்து போனது அப்போதுதான்.

ரவி, பிரசாத்துக்கு எவ்வளவோ ஆறுதல் சொன்னான். அவன் ஏற்கவில்லை.

'நான் அவளைக் கொன்னுட்டேன். நான் செஞ்ச தப்புக்கு தண்டனை அனுபவிக்கணும்' - என்றே விடாமல் புலம்பிக் கொண்டிருந்தான்.

அந்த ஹாலிவுட் படத்தையும் அவன் இயக்கவில்லை. அந்த யோகம் வேறு யாருக்கோ அடித்தது.

**ர**யில் அந்த ஸ்டேஷனில் வந்து நின்றது. உடனே ரவி ஜன்னல் வழியே பார்த்தான். அவன் இறங்க வேண்டிய ஊர் வந்து விட்டது.

சிலர் ஏறினார்கள். அவர்களில் ஒருத்தன் அந்த விசித்திரமான பேர்வழி.

பரட்டைத் தலை, அடர்ந்த தாடி, சலவைக்கு எப்போதோ 'குட்பை' சொல்லிவிட்ட பாண்ட் சட்டை இத்யாதிகளுடன் வண்டியில் ஏறிய அந்த விசித்திரமான பேர்வழி, உள்ளே வந்து சீட்டில் உட்காராமல், படுத்துக் கொண்டான், ஸ்ரீரங்கநாதர் போஸில்.

அவசர அவசரமாகத் தன் மூட்டை முடிச்சுகளை எடுத்துக் கொண்டு இறங்கப் போன ரவி தற்செயலாக, அந்த உருவத்தைப் பார்த்தான். அடிவயிற்றில் 'திகீர்'. இவன்... இவன்... பிரசாத் இல்லை? ஆமாம் பிரசாத்தேதான். அந்த நாளைய ரோல் மாடல் பிரசாத்! வயசுக்கு மீறின அறிவும் பெருந்தன்மையும் கொண்டிருந்த அதே பிரசாத். அழுக்குத் தின்னும் பன்றிகளுக்குக் காரட் போட விரும்பிய பிரசாத்.

இந்த நேரத்தில்... இங்கே... இப்படி....? உலக வரிசையில் வைத்து மதிப்பிடப்பட வேண்டிய நட்சத்திரம் இப்படி ஒரு கறுத்த நட்சத்திரமாய்... வீழ்ந்து விட்ட தேவதையாய்...

குழந்தை அரவிந்தா தேவிக்கு, பிரசாத்தைப் பார்க்கையில் ஒரு பிச்சைக்காரனைப் போல் தோன்றியிருக்க வேண்டும்.

'ஏய்... இந்தா...' என்று தன் கையில் இருந்த பிரெட் பாக்கெட்டிலிருந்து ஒரு ரொட்டித் துண்டை எடுத்து அவன் மேல் எறிந்தாள்.

"ம்ம் தின்னு. நல்லா இருக்கும்."

பிரசாத் அரவிந்தா தேவியைப் பார்த்தான்.

ரொட்டியைப் பார்த்தான். பின்பு வழக்கம் போல் எங்கோ வெறிக்க ஆரம்பித்தான்.

அவன் தன்னை இன்னமும் தண்டித்துக் கொண்டிருக்கிறான். இன்னும் தண்டனைக் காலம் முடியவில்லை போல.

அவன் வாழ்க்கையை அவன் வாழ்ந்து கொண்டு போகட்டுமே. அதில் குறுக்கிட நான் யார் என்று ஒருகணம் ரவி யோசித்தான்.

பின்பு பிரசாத்தைத் தவிர்த்து விட்டு, யாரோ போல் தான் போக வேண்டிய பாதையில் நடக்க ஆரம்பித்தான். ●









"என்னப்பா இது...! இரண்டு நாள்ல ஆளே பாதியாயிட்டே! எங்கே உன் மிஸஸ்? வீட்லே இல்லியா...?"

"ஆபீஸ் போயிருக்கா..."

"இந்த மாதிரி நேரத்திலே கூட லீவ் போட மாட்டாங்களாமா...?"

கோபி, வார்த்தைகளை வளர்த்தக் கூடாது என்று தீர்மானித்து, பேசாதிருந்தான்.

"ஏன் கோபி? இவ்ளோ காச்சலடிக்குது... அவங்களை வீட்ல இருக்கச் சொல்லக் கூடாதா...?"

"லெட்டரையெல்லாம் கொடு இப்படி... கையெழுத்துப் போட்டுத் தரேன்..."

சுந்தரிடமிருந்து ஃபைலை வாங்கிப் படிக்க ஆரம்பித்தான். கடந்த இரண்டு நாட்களில் வந்திருந்த முக்கியமான கடிதங்கள் - பதில்கள் கம்ப்யூட்டரில் டைப் செய்யப்பட்டுத் தயாராயிருந்தன.

"அட்வகேட்டுக்கு அனுப்ப வேண்டிய லெட்டரை மட்டும் மாத்தி, திருத்தியிருக்கேன் சுந்தர்... இரண்டு நாள் ஆனாலும் பரவாயில்லை... நான் ஆபீஸ் வந்த பிறகு அனுப்பலாம்."

ஃபைல்களையும் கடிதங்களையும் ப்ரீஃப்கேஸுக்குள் போட்டு மூடினான் சுந்தர்.

அவங்க என்ன... செக்ஷன் சூபர்வைஸர்தானே? அதே எக்ஸ்போர்ட் கம்பெனிதானே...?"

"ஆமாம். சிமா எக்ஸ்போர்ட்ஸ். அதிலே சீனியர் மானேஜர்..."

"இப்பல்லாம் எல்லாருக்கும் அந்தஸ்தா 'மானேஜர்'னு பட்டம் குடுத்து ஷோ காட்டறாங்கப்பா... நீ கம்பெனி செக்ரடரி... ரொம்ப பெரிய பொறுப்புதான். இப்ப இரண்டு நாளா ஆபீஸ் வரல்லே... அதுக்காக ஆபீஸ் நடக்கலியா? இல்லே வேலை ஏதாவது நின்னு போச்சா...? முக்கியமான விஷயத்தை ஃபோன்ல பேசிக்கறோம், கையெழுத்து வேணும் - அதுவும் கான்ஃபிடன்ஷியல் பேப்பர்ஸ்ல - நானே வந்து பொறுப்பா வாங்கிட்டுப் போயிடறேன். அந்த மாதிரி சிமா எக்ஸ்போர்ட்ஸும் நடக்காதா என்ன...?"

- நீண்ட நாள் நெருக்கத்தின் உரிமையில் சுந்தரின் குரல் உயர்ந்தது.

"ப்ளீஸ், சுந்தர்! சத்தமா பேசாதே. தலை அதிருது..."

"அவங்களுக்கா தோணலைன்னா நீயாவது லீவு போடச் சொல்லிக் கேட்கக் கூடாதா கோபி...?"

தலையைப் பிடித்து இறுக்கியிருந்த கைகளை உயர்த்தி, "போதுமே" என்றான் கோபி.

வீட்டோடு வளைய வரும் மனைவி வாய்த்தவனுக்கு இந்தத் திரிசங்கு வாழ்க்கை புரியாது. தனக்கே ஜுரம் என்றால்கூட அரை நாளுக்கு மேல் விடுப்பெடுக்காத ரகம் கல்பனா.

"புருஷனுக்கு ஜுரம்னு விடுப்பு விண்ணப்பத்துல யாராவது எழுதி என்கிட்டே நீட்டினா என்ன சொல்லுவேன் தெரியுமா...? உன் புருஷன் என்ன கைக்குழந்தையான்னு கேட்பேன்..."

"ஐயோ! உன்னை யாரு இப்போ லீவ் போடச் சொன்னது! உங்க அம்மாவுக்கு போன் பண்ணி இரண்டு நாள் உதவிக்கு வரச் சொல்லேன்..."

"ஆமாம்! அப்படியே உங்கம்மாவுக்கும் எஸ்.டி.டி போட்டு வரச் சொல்லிடலாம்...

# 2 இல்லத்தரசி



ஆளுக்கொரு பக்கம் உங்களை கவனிச்சுப் பாங்க. அப்படியே எனக்கு ரிடையர்மெண்ட் குடுத்துடுங்க..."

"சே! சே! என்ன இப்படிப் பேசறே நீ...?"

சற்றும் எதிர்பாராதகணத்தில் அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டு நெஞ்சில் முகத்தைப் புதைத்து, 'அடடா, இது பச்சைக் குழந்தை' என்று கனிய வைத்து...

மெள்ள அவனை அகற்றி, அமர்த்தி, 'இதோ பாரு...' என்று ஆரம்பிக்க,

"இப்போ நான் சொல்றதை நீங்க கேளுங்க... புருஷனுக்கு ஜுரம்னா பார்த்துக்கத் தெரியாதா எனக்கு? அப்படி ஒண்ணும் வக்கில்லாதவ இல்லை நான்... உங்களுக்கு எல்லாம் செய்து வெச்சு, ஃப்ளாஸ்க்ல கஞ்சி காய்ச்சி ஊத்தி வைச்சுட்டுப் போறேன். வீட்டிலே ஃபோன் இருக்கு. அவசரம்னு கூப்டா வரப் போறேன்... இதுக்கெதுக்கு ஊரைக் கூட்டி எல்லாரையும் தொல்லை பண்ணிக்கிட்டு...?"

"சரிங்க மேடம்..."

அவன் கை கட்டி வேடிக்கை பண்ண, சிரித்துக் கொண்டே போய் விட்டாள்.

சீதா ரவி

**சொ**ன்னபடியே கவனமாக, படுக்கையருகே ஓர் அணிவகுப்பு. கஞ்சி, ஹார்லிக்ஸ், வெந்நீர்

என்று வகை வகையாக... அத்தனையையும் ஏற்பாடு செய்ய ஒரு மணி நேரம் பிடித்திருக்கும் என்பது புரிந்தது. ஆனாலும் ஒரு சூன்யம் தொந்தரவு கொடுக்கிறது. மாத்திரை விழுங்கினால் அரை மணி நேரத்தில் குறையும் ஜுரம். இரண்டு மணி நேரம் ஆனால் மீண்டும் ஆக்கிரமித்துக் கொள்கிறது. மனத்தின் வெறுமையை உச்சப்படுத்துகிறது. சுந்தர் அதைச் சுட்டிக் காட்டும்போது அந்த ஆதரவான கோபத்தில் இளைப்பாறத் தோன்றுகிறது.

பிரீஃப்கேஸுடன் புறப்பட்டவன் சற்று தயங்கி நின்றான்.

"கோபி... இட் மே பி நன் ஆஃப் மை பிஸினஸ் – ஆனா உன் வொய்ஃப் வேலைக்குப் போய்த்தான் உன் குடும்பம் நடக்கணுமா...? யோசிச்சப் பாரு. அவங்ககிட்டே என்னிக்காவது இதப் பத்திப் பேசியிருக்கியா...?

"எதைப் பத்திப் பேசணும்ங்கறே...? நான் எதையுமே பேசறதில்லே. பேச முடியறதில்லே... எல்லாமே அவ யோசிச்சு முடிவெடுத்துக்கறா... முடிவோட என்கிட்ட வரும்போது நான் என்ன பேசறது...? முட்டுக்கட்டைப் போடலாம். போட்டா சண்டையாகும்... வாழ்க்கை ஓடணுமில்லே..."

பெட்டியைத் திரும்பவும் கீழே வைத்துவிட்டு அருகில் வந்தான் சுந்தர்.

"சாரி! உடம்பு சரியில்லாத நேரத்திலே உன்னை இன்னும் கொஞ்சம் கஷ்டப்படுத்திட்டேன்..."

"பரவாயில்லே. எனக்கும் எப்பவாச்சும் யார்கிட்டேயாவது பேசணுமில்லே. வீட்லே மூணும் அக்காவாயிடுச்சு... அதுங்ககிட்டே மனசு விட்டுப் பேச கூச்சமாயிருக்குது. போதாததுக்கு ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு ஊர்ல இருக்காங்க. எப்பவாச்சும் வந்தா அவுங்க வீட்டுப் பிரச்னையை நாம கேட்டுக்கவே சரியாப் போயிடுது..."

தயங்கி, வார்த்தைகள் தேடினான் கோபி.

"சும்மா சொல்லு. என்னால முடிஞ்சா உதவி பண்றேன்; ஊர் பூராவும் போயி இதப் பேச மாட்டேன்..."

"பட்டியல் போட்டுச் சொல்றா மாதிரியெல்லாம் இல்லைப்பா... எல்லாமே பல சமயங்களிலே பிரச்னையாயிருக்கு. அவகிட்டே நெருங்கி என்னாலே பேச முடியலை... இந்த இரண்டு வருஷமா..."

**"அந்த ஆளை ஏன் எல்லோரும் அடிக்கறாங்க?"**

**"கஞ்சா வளர்ப்புத் திட்டத்துல முதலீடு பண்ணா, பத்து வருஷம் கழித்து ஆயிரம் மடங்கு பணம் தருவேன்னு விளம்பரம் பண்ணாரு!"**

**– பா. ஜெயக்குமார்**

"ம்...?"

"இல்ல... இரண்டு வருஷமா குழந்தை வேண்டாம்னு அவ முடிவெடுத்து மருந்து - மாத்திரை ஏதாச்சும் போட்டுக்கறாளா... இல்லே அப்படி எதுவும் எங்களுக்கு உண்டாகலையான்றதேகூடத் தெரியலை..."

"கேட்டுட வேண்டியதுதானே! சரியான மடையன் நீ!"

"உண்மையச் சொல்லணும்னா எனக்குக் கேட்க பயமாயிருக்கு. நான் எதைக் கேட்டாலும் விவாதமாயிடுது. எல்லா விவாதமும் கடைசிக் கட்டமா ஒரே இடத்துல போய்த்தான் முடியுது..."

"என்ன புதிரா பேசறே...?"

"இல்ல... அவ வேலைக்குப் போறதை நியாயப்படுத்தறா மாதிரியும், வீட்டையும் வெளி வேலையையும் சேர்த்து பார்த்துக்கறதாலே எங்க லைஃப்ல அவ பங்களிப்புத்தான் முக்கியமானது, அதிகமானது என்கிற மாதிரியும் விவாதம் முட்டி நின்னு போகுது. அதுக்கப்புறம் நான் சொல்ல என்ன இருக்கு...?"

சுந்தர் அவன் கைப்பிடித்து இறுக்கினான்.

"நீ ரொம்ப மனசு கலங்கிப் போயிருக்கே கோபி... நான் ஒண்ணு சொல்றேன் கேட்கறியா...?"

'என்ன...?' என்பது போல் பார்த்தான்.

"எனக்குத் தெரிஞ்ச ஜோசியர் ஒருத்தர் இருக்கார். ராமமூர்த்தின்னு பேரு... சும்மா கையப் பார்த்தே துல்லியமாச் சொல்லிடுவாரு..."

"அதெல்லாம் வேணாம், விடு..."

"சும்மாயிரு! முதல்ல உன் உடம்பு நேராகட்டும். அப்புறம் நான் அழைச்சுட்டுப் போறேன். நல்ல பலனிருக்கும்... என் சிஸ்டருக்கும் அவ ஹஸ்பெண்டுக்கும் பிராப்ளம் வந்தப்போ அவர்கிட்டேதான் போனோம். எல்லாம் சரியாகி, ஆறு மாசத்திலே



கர்ப்பம்னு செய்தி சொன்னா..."

"எங்கே இருக்காரு ராமமூர்த்தி?..."

"அதைப் பத்தி என்ன...? அழைச்சுட்டுப் போக வேண்டியது என் பொறுப்பு..."

"போட்டுப் பாருங்க ஸார்... சரியாயிருக்குதா?"

ஸ்வர்ணலக்ஷ்மி ஜுவல்லர்ஸ் கவுன்டரிலிருந்த நடுத்தர வயதுப் பெண், மோதிரத்தை எடுத்துக் கையில் கொடுத்தாள். பெரிய புளியங்கொட்டை அளவில் ஒரு பவழம். அதைத் தங்கத்தில் கட்டி, பொன் விளிம்பின் ஓரங்களில் இலேசாகச் செதுக்கிப் பளபளக்க வைத்திருந்தார்கள். வலது கை மோதிர விரலில் போட்டுப் பார்த்தான். கச்சிதமாகப் பொருந்தியது.

"பில் போட்டுடுங்க. அட்வான்ஸ் தவுஸன்ட் ருபீஸ் குடுத்திருக்கேன்..."

மேற்கொண்டு இரண்டாயிரத்து ஐந்நூறுக்கு செக் எழுதிக் கொடுத்தபோதுதான் கவுன்டர் பெண்மணி கேட்டாள்.

"சார், நீங்க கல்பனா ஹஸ்பென்ட் தானே...?"

"ஆமாம்."

"பார்த்த முகமாயிருக்கேன்னு நினைச்சேன். உங்க மேரேஜுக்கு வந்திருந்தேன். அவங்க ஃபேமிலி எங்க ரெகுலர் கஸ்டமர் சார்... கல்பனாவுக்கு நகை பூரா இங்கேதான் செஞ்சது. உங்களுக்குக் கூட கல்யாணத்துக்கு இரண்டு சவரன்ல சங்கிலி செய்தாங்க..." - அவள் பார்வை அவன் கழுத்தில் தேடியபோது கூச்சப்பட்டான்.

"கல்பனா எப்படியிருக்கா சார்...? ரொம்ப நல்ல பொண்ணு... ஹைலி பிரின்ஸிபிள்ட்... கொஞ்சம் நேரம் பேசிக்கிட்டிருந்தாகூட அவளை யாருக்கும் பிடிச்சுப் போயிடும்..."

நிஜமான சந்தோஷத்துடன் பேசினாள்.

"ஏன் சார் அவளை அழைச்சுட்டு வரலை...? ஆர்டர் கொடுக்கும்போதும் தனியாத்தான் வந்தீங்க... உங்களுக்கு டிசைன் கல்பனாதானே செலக்ட் பண்ணணும்... ஓ! ஏதாவது நல்ல செய்தியா...? கல்பனா அம்மாவாகப் போறாளா...?"

அவன் முகம் சிவந்ததைப் பார்த்து இன்னும் பரபரப்பானாள்.

அடடா! நீங்க வந்தவுடனே சொல்லியிருந்தா ஸ்வீட் வாங்கி வரச் சொல்லியிருப்பேனே..."

அவன் எழுந்ததும், "கல்பனாகிட்டே ஜெயந்தியைப் பார்த்ததாக மறக்காம சொல்லுங்க... நான் ரொம்ப விசாரிச்சேன்னு சொல்லுங்க.. மோதிரம் எப்படியிருக்குன்னு போன் பண்ணச் சொல்லுங்க..."

'எப்படி?' என்பதைக் காட்டிலும் 'ஏன்?' என்கிற கேள்விதான் முக்கியமாயிருந்தது.

சாப்பிடும்போது கழற்றி தட்டின் பக்கத்தில் வைத்த போதுதான் கவனித்தாள் கல்பனா.

"ஏதுங்க மோதிரம்...?"

"ஆர்டர் குடுத்து செஞ்சது... ஸ்வர்ண லக்ஷ்மி ஜுவல்லரியிலே."

இடுக்கியால் பிடித்திருந்த பாத்திரத்தைச் சாப்பாட்டு மேஜை மேல் வைத்து விட்டு மோதிரத்தைக் கையில் எடுத்தாள்.

"ஏன் திடீர்னு நகை ஆசை உங்களுக்கு...?"

"ஒண்ணுமில்லே..." - ரொம்பவும் சங்கடப்பட்டான்.

"நீங்க ஒண்ணுமில்லேன்னு சொல்லும்போதே ஏதோ இருக்குதுன்னு தெரியுது... என்னாச்சு? சொல்லுங்க..."

"அட, ஒரு மனுஷன் ஆசைப்பட்டு மோதிரம் வாங்கிப் போட்டுக்கக் கூடாதா...?"

"என்னையும் அழைச்சுட்டுப் போயிருந்தா இன்னும் நல்ல டிசைன்ல, கல்லு பதிச்ச மோதிரம் அழகா செலக்ட் பண்ணியிருப்பேனில்லே... இது என்னமோ பரிகார ஜோசியக்காரங்க கொடுக்கற பிரிஸ்க்ரிப்ஷன் மோதிரம் மாதிரியிருக்கு..."

மிரண்டு போன அவன் பார்வையே அவள் பலமாயிற்று.

"சொல்லுங்க, என்ன ஆச்சு...?" - நாற்காலியை மிக நெருக்கமாக இழுத்துப் போட்டு உட்கார்ந்து அவன் முகத்தைப் பார்த்துக் கேட்டாள்.

(தொடரும்)




# காந்தி ஆசிரமத்தில் கல்கி விழா!

அமரர் கல்கி நூற்றாண்டு விழாக் கொண்டாட்டம் சூடு பிடித்து விட்டது!

கோவையில் கிருஷ்ணா ஸ்வீட்ஸ் நிறுவனமும் நமது வாசகர்களும் இணைந்து ஜமாய்த்துவிட்ட விழாவை அடுத்து, திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் அக்டோபர் 26ம் தேதி கல்கி விழா மிகக் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது.

இந்த விழாவுக்கு ஒரு முக்கியமான சிறப்பு உண்டு. அமரர் கல்கி, தம் மனைவியுடன் இங்கே தங்கி தேசப் பணியில் ஈடுபட்டிருக்கிறார்!

தம் பேச்சில் இதனை நினைவு கூர்ந்த கல்கியின் புதல்வி ஆனந்தி ராமச்சந்திரன், பொருத்தமாக 'எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி' என்ற பாரதி பாடலை நினைவூட்டிப் பேசத் தொடங்கியபோது கூட்டத்தினர் உற்சாக மிகுதியில் ஆரவாரமாக அதை ரசித்தார்கள்.

சர்வ சமயப் பிரார்த்தனையுடன் தொடங்கிய கூட்டத்தில் வெங்கட்ராமன் பாடிய காந்தீயப் பாடலுக்குப் பிறகு வரவேற்புரை ஆற்றினார், ஆசிரமத்தின் அறங்காவலரான ஆராவமுதன்.

தலைமை தாங்கி, கல்கியின் உருவப் படத்தைத் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றிய நீதியரசர் ஆர். செங்கோட்டு வேலனும் விழாவில் கலந்து கொண்டு பேசிய நீதிபதி அப்துல் ஹாதியும் தம் பேச்சில் அமரர் கல்கியின் சமூக, கலை, இலக்கியச் சேவைகள் பற்றி அற்புதமான ஒரு சொற்



பந்தலே அமைத்து விட்டனர்!

ஆத்மார்த்தமான சொற்பொழிவுகளில் கூட்டத்தினர் சொக்கிப் போயிருந்தபோது அழகாகத் தமிழ் எழுதும் போட்டி நடத்திப் பரிசளித்ததும் செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள ஸ்ரீ சாரதா அநாதை இல்லத்துக் குழந்தைகளுக்கு ரூ. 2000 மதிப்புள்ள நோட்டுப் புத்தகங்கள் வழங்கியதும் நெஞ்சைத் தொட்ட நிகழ்வுகள்! இது மட்டுமல்ல. சேலம் பகுதிகளிலுள்ள கல்கி முகவர்களையும் அழைத்து சிறப்பு செய்திருந்தார்கள்!

திருச்செங்கோடு காந்தி ஆசிரமம், ராஜாஜியால் நிறுவப்பட்டது. எழுபத்தி நான்கு ஆண்டுகளாகத் தொண்டாற்றி வரும் இவ்வாசிரமம், சுமார் 4000 பேருக்கு வேலை வாய்ப்பு அளித்து வருவது வியப்பான விஷயம்.

சமூக நோக்கம் ஒன்றையே தம் மூச்சாகக் கொண்ட அமரர் கல்கியின் நூற்றாண்டு விழாவை, இங்கே கொண்டாடியதன் பொருத்தத்தை எண்ணி மகிழ்ந்தவண்ணமே வீடு திரும்பினர், அன்றைய நிகழ்ச்சிக்கு வந்திருந்தவர்கள். ●

— நமது நிருபர்


Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 800/- (Air Mail)

ஸ்ரீ

ஸ்ரீ ராமஜெயம்





# ஸ்ரீ ஹனுமத் ஜெயந்தி மஹோத்ஸவம்

(9.12.98 முதல் 29.12.98 முடிய)

ஸ்ரீ ஆதிகேசவப் பெருமாள் பேயாழ்வார் திருக்கோயில்.

மைலாப்பூர், சென்னை – 4.

*ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் ஏகதின லட்சார்சனை*

*29.12.98 சனிக்கிழமை. கட்டணம் ரூ. 50/-*

| நாள் | தேதி | கிழமை | 5.00 PM<br>விசேஷ அலங்காரம் | 7.00PM<br>இன்னிசை நிகழ்ச்சிகள் |
|---|---|---|---|---|
| 1 | 9.12.98 | புதன் | சந்தன காப்பு | சீதா ராஜசேகர் பாட்டு |
| 2 | 10.12.98 | வியாழன் | செந்தூரகாப்பு | கலைமாமணி Dr. N. ரமணி (புல்லாங்குழல்) |
| 3 | 11.12.98 | வெள்ளி | துளசிகாப்பு | பிரேமா & ஜெயா (vocal) |
| 4 | 12.12.98 | சனி | திராட்சைகாப்பு | ஆண்டாங்கோயில் A.V.S சிவகுமார் (vocal) |
| 5 | 13.12.98 | ஞாயிறு | புஷ்பகாப்பு | மைசூர் T.R. சாம்பசிவம் (வீணை) |
| 6 | 14.12.98 | திங்கள் | வெத்தலைகாப்பு | திருவாரூர் S. சீதா லக்ஷ்மி (vocal) |
| 7 | 15.12.98 | செவ்வாய் | பழகாப்பு | சிதம்பரம் துரை பாலசுப்ரமணியம் (வயலின்) |
| | | | கலைமாமணி | திருக் கண்ணபுரம் S. ஜெயசந்திரன் சிறப்பு தவில் |
| 8 | 16.12.98 | புதன் | வடைகாப்பு | R. சூர்யபிரகாஷ் (vocal) |
| 9 | 17.12.98 | வியாழன் | லட்டு காப்பு | S.R.D.G. ராஜேந்திரன் (vocal) |
| 10 | 18.12.98 | வெள்ளி | ஸ்ரீ ஹனுமத் ஜெயந்தி<br>விசேஷ திருமஞ்ஜனம் | கலைமாமணி சங்கீத கலாசாரதி. சங்கீத சூடாமணி<br>மதுரை T.N. சேஷ கோபாலன் |
| 11 | 19.12.98 | சனி | விசேஷ வெண்ணைகாப்பு<br>ஏகதினலட்சார்சனை | ஸ்ரீ வைணவமாமணி M.V. சாய்பாபா<br>ஹரிபந்த சேவை திவ்யநாம சங்கீர்த்தனபஜனை |

மேற்கண்ட பத்து நாட்கள் விசேஷ அலங்காரம். ஒரு நாள் சிறப்பு பூஜை கட்டணம் ரூ. 1000. ரூ. 500.

ஸ்ரீ ஹனுமத் ஜெயந்தி அன்று மாலை 4.00 மணி அளவில் ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் சுவாமிக்கு 108 லிட்டர் பால், 108 லிட்டர் தயிர், 108 இளநீர், 12 கிலோ தேன் பஞ்ஜாமிருதம், வாசனை திரவியங்கள், சந்தனம் ஆகிய திரவ்யங்களை கொண்டு விசேஷ திருமஞ்ஜனம் (மஹா அபிஷேகம்) நடைபெறும். பக்தர்கள் அனைவரும் கலந்து கொண்டு ஸ்ரீ வீரஆஞ்ஜநேயர் பரிபூரன கிருபா கடாக்ஷம் பெறும்படி பிரார்திக்கிறேன்.

இங்ஙனம்

S. ஸ்ரீ ரங்கராஜ பட்டாசாரியார்

குறிப்பு: ரூ.50/- செலுத்தி **இலட்சார்சனையிலும்**, ரூ.100/- ரூ.250/- செலுத்தி விசேஷ **திருமஞ்சனத்திலும்** கலந்து கொள்ளும் பக்தர்கள் அனைவருக்கும் பத்து நாட்கள் அலங்காரம் செய்யப்பட்ட வெண்ணை, செந்தூரம், சந்தனம், ஒருபுறம் வீர ஆஞ்ஜநேயரும், மறுபுறம் ஸ்ரீ சுதர்ஷனர் பதித்த டாலரும் வழங்கப்படும்.

**MO, DD,** காசோலை, அனுப்பும் பக்தர்கள் தங்கள் கோத்திரம், நட்சத்திரம், பெயர், தங்கள் அட்ரஸ் விவரமாக கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்.

**முக்கிய குறிப்பு: MO** அனுப்பும் பக்தர்கள் எங்களுக்கு கிடைக்கும் **MO** தகவல் பகுதியில் தங்கள் அட்ரஸ் விவரமாக எழுதும்படி பிராத்திக்கின்றேன்.

தாங்கள் அனுப்ப வேண்டிய முகவரி:

**S. ஸ்ரீ ரங்கராஜபட்டாசாரியார்,**
**எண் 5, கேசவப்பெருமாள் சன்னதி தெரு.**
**மைலாப்பூர், சென்னை – 600 004. போன்: 4610179**

